# திரு அருட்பா

பாலகிருஷ்ண பிள்ளை பதிப்பு

[illegible]-வது புத்தகம்



## கீர்த்தனைப் பகுதி



வெளியிடுவோர் :

ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம்

பவழக்காரத் தெரு : : சென்னை.

1933

உ

திருச்சிற்றம்பலம்

# திரு அருட்பிரகாச வள்ளலார்

என்னும்

## சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# திரு அருட்பா

## க. கீர்த்தனைப் பகுதி

இரண்டாம் பதிப்பு—ஸ்வரப்படுத்தியது

சென்னை

பி. ஏ., எம். எல்., (அட்வொகேட்)

ஆ. பாலகிருஷ்ண பிள்ளை அவர்கள்

சுவாமிகள் தெய்வத் திருக்கரத்தால் எழுதிய மூல ஏடுகள்
சுவாமிகளிடம் தொண்டுபூண்டு அவர்களை அடுத்திருந்த
அன்பர்களின் கை எழுத்துப் பிரதிகள் முதலியவற்றினின்றும்
எடுத்து ஆராய்ந்து தொகுத்துக் குறிப்புக்கள் எழுதிய

இது

சென்னை ஆசிரியர் நூற்பதிப்புக் கழகத்தாரால்
அடக்க விலைப் பதிப்பாக
அச்சிட்டு வெளிப்படுத்தப்பட் டிருக்கிறது.

கலியுகாதி௵ ௫௦௩௫-ல் நிகழும் ஸ்ரீமுக௵
கார்த்திகைமீ ௨௬௳: சன்மார்க்க ஆண்டு ௬௭: 11-12-1933

விலை 12 அணா

உ

# திரு அருட்பா மகிமை

திருச்சிற்றம்பலம்

நேரிசை வெண்பா

தண்ணீர் விளக்கெரித்த தன்மைபோன் மாந்தர்கள்தம்
உண்ணீர் சிவம்விளங்க ஓங்குவிக்கும்—கண்மணியாம்
நங்கள் இராமலிங்கன் நல்லஅருட் பாமுறையைத்
துங்கமுற மாணு தொழு.

திருச்சிற்றம்பலம்

---

இது

வேதாகம சுத்த சைவ சித்தாந்த

சமயாசாரிய பீடமாய் விளங்குகின்ற

மதுரைத் திருஞானசம்பந்த சுவாமிகள் ஆதீனம்

ஸ்ரீ சிதம்பர சுவாமிகளால்

(1867-ம் ௵ முதன் முதலாகத் திருவருட்பா முதல்
நான்கு திருமுறைகளை அச்சிட்டு வெளிப்படுத்தியபோது)

அருளிச்செய்யப்பட்டது.

திரு அருட்பா : க. கீர்த்தனைப் பகுதி

# பொருளடக்கம்

எ. கீர்த்தனங்கள் ... ... அய



அநுபந்தம்



(இராக ஆலாபனம் உட்பட கீர்த்தனைப் பகுதியில் அடங்கிய பாடல்களின் தொகை.1040)

**பொருளடக்கம் முற்றிற்று**

---

# கீர்த்தனைப் பகுதி முன்னுரை

இசை என்பது ஓர் அற்புதமான விஷயம். அதை இன்னது என்று எல்லைப்படுத்துவது அருமை.[1] ஆனால், நல்ல இசை இன்னது என்பதும் அல்லாத இசை இன்னது என்பதும் ஒருவாறு தெரிந்து கொள்வது அவ்வளவு அருமை யன்று. நம் தமிழ்நாட்டில், இக்காலத்தில், நல்ல இசை குறைந்து அல்லாத இசை அதிகப்பட்டிருக்கிற தென்றே சொல்லலாம். அதற்குக் காரணம், இயற்கல்வி யாளர் பெரும்பாலோர்க்கும் போதுமான இசைஞானம் இல்லாதிருப்பதும், இசையாளர்களில் பெரும்பாலோர்க் கும் போதுமான இயற்றமிழ்க் கல்வி இல்லாதிருப்பதுமே தான். தமிழிலுள்ள இன்னிசை உருப்படிகளை[2] ஒரு வகுப்பினர் அபஸ்வரங்கள் மலியப் படிக்கிறார்கள்; மற் றொரு வகுப்பினர் எழுத்துப் பிழைகளும் சொற் பிழை களும் மலியப் பாடுகிறார்கள்[3]. ஒரு வகுப்பினர் தமிழ்

---

1. What is music? . . . The very existence of music is wonderful; I might even say miraculous. Its domain is between thought and phenomena. Like a twilight mediator it hovers between spirit and matter, related to both, yet differing from each; it is spirit, but spirit subject to the measurement of time; it is matter, but matter that can dispense with space —*Heinrich Heine, 1837.* பருந்தும் நிழலும், 25-ம் பக்கம் பார்க்க.

2. உரு, musical composition.

3. பாடிய சான்றவர் பீடுநன் குணர
மிகைபடு பொருளை நகைபடு புன்சொலில்
தந்திடை மடுத்த கந்திதன் பிழைப்பும்
எழுதினர் பிழைப்பும் எழுத்துரு வாக்கும்

மிக இனிமையான தென்று சொல்லித் தமிழின் இன்னிசையை அனுபவிக்க அவாவும் இல்லாமலிருக்கிறார்கள்; மற்றொரு வகுப்பினர் இசைக்கும் தமிழுக்கும் வெகு தூரம்[4] என்று சொல்லிப் பிற பாஷைகளிலுள்ள பாடல்களைப் பாடிச் சொற்குற்றம் பொருட்குற்றம் நேரிடுவதைப் பொருட்படுத்தாம லிருக்கிறார்கள்.

இந்த நிலைமைக்குக் காரண மென்ன வென்றால், இசைக்கு இயல்பாகவே[5] உள்ள பரந்த செல்வாக்கை[6]

---

பகுதியின் வந்த பாடகர் பிழைப்பும்
ஒருங்குடன் கிடந்த ஒவ்வாப் பாடந்
திருந்திய காட்சியோர் செவிமுதல் வெதுப்பலில்

—பரிபாடல் உரைச் சிறப்புப் பாயிரம்.

4. சிலப்பதிகார நூல் உரைகளினின்றும், திருஞான சம்பந்தரது யாழ்மூரிப் பண் வரலாற்றினின்றும், ஒருமை நிலையில் இசைக்கப் பெறும் 'உள்ளாளம்' என்னும் இசைவகையின் தன்மையை விவரிக்கும் கீழ்க்கண்ட பாடலினின்றும் தமிழ் நாட்டின் தொன்று தொட்டு வரும் இசைப்பெருமையை ஒருவாறு உணரலாம்.

இடையினோ டேனைப் பிங்கலை இயக்கம்
இகந்துமூ லந்தொடுத் தியக்கி
நடுவுறு தொழிலாற் பிரமரந் திராந்த
நடைபெற இசைக்கும்உள் ளாளம்
மிடறுவீங் காள்கண் இமைத்திடாள் எயிறு
வெளிப்படாள் புருவமேல் நிமிராள்
கொடிமது துடியாள் பாடலும் அதுகேட்
டனைவருங் குதுகுல மடைந்தார்.

—திருவிளையாடற் புராணம், இசைவாது வென்ற படலம்.

5. பண்என்னும் பாடற் கியைபின்றேல்; கண்என்னும்
கண்ணோட்டம் இல்லாக் கடை.—திருக்குறள்.

இயற்கல்வியாளரும், இயலுக்கும் இசைக்குமுள்ள அங்யோங்யத்தை[7] இசைவல்லார்களும் மறந்திருப்பதுதான்.

சிருஷ்டியில் அடங்கிய எல்லாப் பொருள்களையும் எல்லா உயிர்களையும் இசை தன்வசப்படுத்தி அவற்றின் சஞ்சலத்தை[8] ஒழிக்குமென்பதையும்[9], இசையைச் செவி

---

6. What I call, 'the auditory imagination' is the feeling for syllable and rhythm, penetrating far below the conscious levels of thought and feeling, invigorating every word; sinking to the most primitive and forgotten, returning to the origin and bringing something back; seeking the beginning and the end. It works through meanings certainly or not without meanings in the ordinary sense and fuses the old and obliterated and the trite, the current and the new and surprising the most ancient and the most civilized mentality.
—*T. S. Eliot* in " The Use of Poetry and the Use of Criticism"

7. 'மூலாதாரந் தொடங்கிய எழுத்தினாதம் ஆளத்தியாய்ப் பின் இசையென்றும் பண் என்றும் பெயராம்' என்று சிலப்பதிகாரம் அரங்கேற்றுகாதை அடியார்க்கு நல்லார் உரையில் இசையுற்பத்தியைக் குறித்திருப்பதோடு இயலுற்பத்தியை ஒத்து நோக்குக. ஆளத்தி என்பது இக்காலத்திய ஆலாபனம். இயலிசைகளின் பிற சம்பந்தங்களை மேலே காண்க.

8. பொருள் அசைவு, உயிர்த்தன்டம்.

9. மருவியகால் விசைத்தசையா மரங்கண்மலர்ச் சினைசலியா
கருவரைவீழ் அருவிகளுங் கானயாறுங் கலித்தோடா
பெருமுகிலின் குலங்கள்புடை பெயர்வொழியப் புனல்சோரா
இருவிசும்பி னிடைமுழங்கா எழுகடலும் இடைதுளும்பா.

ஆனிரைக ளறுகருந்தி அசைவிடா தணைந்தயரப்
பானுரைவாய்த் தாய்முலையிற் பற்றும்இளங் கன்றினமுந்
தானுணவு மறந்தொழியத் தடமருப்பின் விடைக்குலமும்
மான்முதலாங் கான்விலங்கும் மயிர்முகிழ்த்து வந்தணைய.

—பெரிய புராணம், ஆனாயநாயனார் புராணம்.

மடுத்தார்க்கு அது அமுதமெனச் சீரிய பயனளிக்கிறது என்பதையும்[10], யோகிகளது தியான நிலையில் இசைமயமான நாதமே அநுபவப்படுகிறதென்பதையும்[11], ஈசுவரனுக்கு உகந்த ஓர் ஆராதனையாக அது இருக்கிறதென்பதையும்[12], ஈசுவரனது திருவடியின்பத்தைச் சம்பூர்ணமான வீணாகானத்தைச் சுட்டிப் பெரியோர்கள் விவரித்திருப்பதையும்[13], ஈசுவரனையே இசைரூபன் என்று மெய்யன்பர்கள் வழிபட்டிருப்பதையும்[14], இசையின் இத்தன்மைய

---

10. கின்னரர் விபஞ்சி நன்னரம் புளரா
இசையமு திருஞ்செவி மிசையெடுத் தூற்ற
—பட்டினத்து அடிகள், திருக்கழுமல மும்மணிக்கோவை, உஅ.

பாணர்தம் பிரானைக் காப்பான் பருந்தொடு நிழல்போக் கென்ன
யாணரம் பிசைபின் செல்ல இசைத்தஇன் இசைத்தேன் அண்ட
வாணர்தஞ் செவிக்கால் ஓடி மயிர்த்தொளை வழியத் தேக்கி
யாணரின் னமுத யாக்கை இசைமய மாக்கிற் றன்றே.
—திருவிளையாடற் புராணம், விறகு விற்ற படலம்.

11. மணிக்கடல் யானை வளர்குழல் மேகம்
மணிவண்டு தும்பி வளைபேரி கையாழ்
தணிந்தெழு நாதங்கள் தாமிவை பத்தும்
பணிந்தவர்க் கல்லது பார்க்கவொண் ணாதே. —திருமந்திரம்.

12. சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்பலத்துமென் சிந்தையுள்ளும்
உறைவான் உயர்மதிற் கூடலி னாய்ந்தஒண் டீந்தமிழின்
துறைவாய் நுழைந்தனை யோஅன்றி ஏழிசைச் சூழல்புக்கோ
இறைவா தடவரைத் தோட்கென்கொ லாம்புகுந்
தெய்தியதே. —திருக்கோவையார்

13. 'மாசில் வீணையும்' என்னும் அப்பர் சுவாமிகள் தேவாரம்.

14. 'ஏழிசையாய் இசைப்பயனாய்' என்னும் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம்.

வாய பிற சிறப்புக்களையும் இயற்கல்வியாளர் ஞாபகத்தில் பதிய வைத்தல் வேண்டும்.

இயல் இசைகளுக்குள்ள நெருங்கிய சம்பந்தத்தைக் குறித்து, 'பல இயற்பாக்களுடனே நிறத்தை[15] இசைத்தலால் இசையென்று பெயராம்' என்று அடியார்க்கு நல்லாரும்[16], 'பருந்தொடு நிழல்சென் றன்ன இயலிசைப் பயன்துய்ப் பாரும்' என்று கம்பரும்[17], 'இழுக்குடைய பாட்டிற் கிசை நன்று' என்று ஔவையாரும்[18], 'செய்யுளோசை இசையோசை வழாமல்... பாடினர்' என்று பரஞ்சோதிமாமுனிவரும்* நுட்பமாகச் சொல்லியிருக்கிறார்கள். இக்கருத்தே பிற தேசத்தாருக்கும் உடன்பாடென்பது 'இசையின் நுண்ணிய பொருள் உட்கருத்தையும் உணர்ச்சியையும் வெளிப்படுத்தி அறிவித்தலேயாம்' என்று ஒரு ஜெர்மன் பேராசிரியர்[19] கூறியிருப்பதிலிருந்து தெரிகிறது. இவ்வண்ணம், இயலின் உட்கருத்தைத் தனது சிறப்பான வகையில் அநுபவிக்க அல்லது அநுபவ பூர்வமாக விளக்க வந்த காரணத்தால், இயலினை அந்யோந்யமாய்ப் பற்றியே இசை விளங்குகிறது என்பதை இசையாளர்கள் ஞாபகத்தில் பதிய வைத்தல் வேண்டும்.

---

15. 'நிறம்' என்பது சொற்களால் விளங்கப்பெறாத உணர்ச்சி வகை அல்லது சொற்களில் அடங்காத இசைக்கூறு போலும்.

16. சிலப்பதிகாரம், அரங்கேற்றுகாதை யுரை.

17. இராமாயணம், நாட்டுப் படலம், ௩௫.

18. நல்வழி. சொற்குற்றம் பொருட்குற்றம் உள்ள பாடலைக் காட்டிலும், சொல்லும் பொருளும் தெளிவுறாத ஸ்வரத் தொகுதிகளாலாய இசை வகையே மேலானது என்று பொருள் கொள்க.

* திருவிளையாடற் புராணம், விறகு விற்ற படலம், ௩௨.

19. Heinrich Heine. பருந்தும்நிழலும், 26-ம்பக்கம் பார்க்க.

மேற்சொன்ன இரு பாகுபாடான உண்மைகளை,

'தென்னாவென் றமுன்னம் தீசேர் மெழுகொப்பாய்'[20]

என்ற அன்புருவமான ஆலாபனப் பயனை ஸ்ரீ மாணிக்க வாசக சுவாமிகளும்,

"வள்ளலார் வாசிக்கு மணித்துளைவாய் வேய்க்குழலின்
உள்ளுறையஞ் செழுத்தாக ஒழுகியெழு மதுரவொலி
வெள்ளநிறைந் தெவ்வுயிர்க்கு மேலமரர் தருவிளைதேன்
தெள்ளமுதி னுடன்கலந்து செவிவார்ப்ப தெனத்தேக்க"[21]

என்றும்,

"மெய்யன்பர் மனத்தன்பின் விளைத்தவிசைக் குழலோசை
வையந்தன் னையுநிறைத்து வானந்தன் வயமாக்கிப்
பொய்யன்புக் கெட்டாத பொற்பொதுவில் நடம்புரியும்
ஐயன்தன் திருச்செவியின் அருகணையப் பெருகியதால்."[21]

என்றும் பஞ்சாக்ஷர இசைப்பயனை ஸ்ரீ சேக்கிழார் சுவாமி களும்,

"வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவைகலந்தென்
ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே."[22]

என்று திருவாசகத்தைத் தாம் பாடுங்கால் உண்டான ஆன்மாநுபவத்தை ஸ்ரீ இராமலிங்க சுவாமிகளும் கூறி

---

20. திருவாசகம், திருவெம்பாவை, எ. "ஆளத்தி செய்யுமிடத்துத் தென்னாவென்றும் தெனாவென்றும் இரண்டசையுங் கூட்டித் தென்னாதெனாவென்றும் பாடப்படும்"—சிலப்பதிகாரம், அரங்கேற்று காதை அடியார்க்கு நல்லார் உரை.

21. பெரியபுராணம், ஆனாய நாயனார் புராணம்.

22. 211-ம் பக்கம் பார்க்க.

யிருப்பதினின்றும் இன்னும் விளக்கமாகத் தெரிந்து கொள்ளலாம். ஆகையால், இவைபோன்ற இயலிசை நுட்பங்களை இயற்கல்விமான்களும் இசையாளர்களும் மனத்தில் பதிய வைத்து, அவற்றிற்குத் தக ஒழுகினுல், நம் தமிழ் நாட்டில் வெற்றிசை மறைந்து, நல்ல இசை மறுபடியும் குடியேறி அதன் பெரும் பயனை நம் நாட்டினர்க்கு அடைவிக்கும் என்பதில் ஐயமில்லை.

பண்முறையில் பாடும் வழக்கம், பழைய இசையாளரது அஜாக்கிரதையால், இக்காலத்தில் இல்லை என்னும்படி அருகிப் போனமையின், தமிழில் உள்ள பரிபாடல்களையோ, வரிப்பாடல்களையோ, தேவார திருவாசக திருப்புகழ்களையோ அவைபோன்ற பழைய பிற இன்னிசை உருக்களையோ அவை முன் இசைகொண்ட வகை தெரிந்து இப்போது பாடுவதற்கில்லை.[23] திருப்புகழ் முதலிய சந்தப் பாடல்களில் கண்ட தாள நுட்பங்களும் உணர்வாரற்று மறைவு பட்டுக் கொண்டிருக்கின்றன. இசை தாளங்களோடு அபிநயமுங் கொண்டு சம்பூர்ணமாய் விளங்கிய ஆடலும் அறிவாரற்று உருமாறி இழிவடைந்து இறக்குந் தறுவாயி லிருக்கிறது. எனினும், இசையும், பண்ணும், பாணியும், ஆளத்தியும், ஆடலும் முறையே ஸ்வரமும், இராகமும், தாளமும், ஆலாபனமும், நாட்டிய

---

23. இந்தளம், புறநீர்மை, பாடை, இன்னிசை முதலிய பண்கள் திருவாங்கூர் நாட்டில் இன்னும் வழங்குவதோடு, அநேகம் பண்கள் கொஞ்சம் பெயர்த்திரிபோடு இந்நாளைய இராகங்களாக உயிர்த்திருக்கின்றன போலும். இவற்றின் விவரத்தை ஸ்ரீ ஆப்ரகாம் பண்டிதருடைய 'கருணாமிர்த சாகரம்' முதலிய நூல்களைக் கொண்டு ஆராய்ந்து தெளிக.

மும் என வழங்கும் இந்நாளில், இப்புலமைகளில் வல்ல ஆராய்ச்சியாளர் இவ்விஷயங்களில் ஆர்வங்கொண்டு உழைத்தால், இப் பழைய இசை முதலியவற்றின் ஸ்வரூபங்கள் விளக்க முறலாம். இவ் ஆராய்ச்சி ஒருபுற மிருக்க, மேற்சொன்ன—ஆயிரக் கணக்கில் உள்ள—பழைய இசை உருக்களுக்கு இக் காலத்தில் வழங்கும் இராக தாளங்களில் பொருத்தமானவற்றை ஆராய்ந்து அமைத்து, அவற்றின் உள்ளுறையோடு இசை நுட்பத்தையும் உணர்ந்து விளக்குவது இயற்கல்வியோடு கூடிய இசைப் புலவர்களுக்கு ஓர் அரிய காரியமன்று. இதுவும் போக, வழங்கும் இராக தாளங்களைப் பின்பற்றிப் பிற்காலத்து இசையாசிரியர்களால் தமிழில் ஏராளமாகச் செய்யப் பட்டிருக்கும் நாமாவளிகள், கண்ணிகள், சிந்துகள், ஆடற் பாடல்கள், கீதங்கள், பதங்கள், கீர்த்தனங்கள், கிருதிகள் முதலிய உருக்கள் தமிழ்நாட்டு இசைஞர்களாலும் இசைப் பிரியர்களாலும் புறக்கணிக்கப்பட்டு வருவது எல்லா வகையிலும் பிற்போக்கான ஓர் நிகழ்ச்சியே யாகும். இசை நலத்தையோ, பொது நலத்தையோ, அல்லது ஸ்வாநுபவத்தையோ கோரும் இத் தமிழ்நாட்டுச் சங்கீதப் பிரமுகர்களும் தேசாபிமானிகளும் பக்தர்களும் சங்கற்பித்தால், இந்த விபரீதமான வழக்கம் ஒழிய நெடுநாளாகாது. சங்கீத வித்தையைப் பரிபாலிக்கச் சர்வ கலாசாலையாரே முன் வந்திருக்கும் இக்காலமே இத்தகைய ஆராய்ச்சிகளுக்கும் சங்கற்பங்களுக்கும் எவ்வகையிலும் ஏற்ற காலமாகும்; இயற்கல்வியாளர் தெய்வத்தன்மை பொருந்திய இவ் இசைஞானம் பெறுவதற்கும் இதுவே நல்ல சமயம்; பிற பாஷைகளில் விளங்கும் இசை நுட்பங்களை நம் தாய்மொழியில் முடிந்த வரையில் பொருத்தம்பட அமைத்துத்

தமிழின் இன்னிசையை வளர்ப்பதற்கும் இதுவே நல்ல சமயம்; கேள்விமுயலும் யாவரும் தமிழின் தனி இசையை உணர்ந்து பரவச் செய்தற்கும் இதுவே நல்ல சமயம்.

மேற்சொன்ன பலதிறப்பட்ட பழைய உருக்களில் பொதிந்து கிடக்கும் இசை நுட்பங்களின் கதி இப்படியாக, அவற்றின் அரிய சொல் நுட்பமும் பொருள் நுட்பமும் இயல் அளவில் இன்றும் பெரிதும் போற்றப்பட்டு வருகின்றன. இப்படியே, இக்காலத்தில், கீழ்நிலையில் உள்ள இசை உருக்களாகக் கருதப்படும் கண்ணிகள், சிந்துகள் முதலியவற்றிலும், வெண்பார்த்தம், துறையார்த்தம் முதலியவற்றிலும்,[24] —பழைய உரைப்பாட்டிலுமேகூட [25]— இயலளவில் ஒருவகைச் சொல் நுட்பம் இருந்தே தீர்வது போல, மேல் நிலையில் உள்ள இசை உருக்களாகக் கருதப்படும் கீர்த்தனைகள் கிருதிகள் முதலியவற்றிலும் மற்றொரு வகைச் சொல் நுட்பத்தைக் காணலாம். ஆகவே, எல்லா உருக்களிலும் இசை நுட்பத்திற்கு அடிப்படையாக இருப்பது சொல் நுட்பம் எனத் தெரிகிறது. சொல்லிற்கு உயிரோ பொருள். எனவே, சொல் நுட்பம் உள்ளவிடத்தெல்லாம் பொருள் நுட்பமும் பெறப்படும். ஆதலால், எக்காலத்தும், பொருட் செறிவு இல்லாத உருக்களினின்றும் அரிய உணர்ச்சியும் இனிமையும் செறிந்த இசை பிறக்க முடியாதென்பது நிச்சயம்.[26]

---

24. இவற்றின் உதாரணங்களைச் சேலம் குமாரசாமி முதலியாரது (1857) 'கந்தபுராணக் கீர்த்தனை' யிற் காண்க.

25. உரைப் பாட்டுக்கு உதாரணம் :—"...ஐயை அவள் மகளோடும் வையை யொரு வழிக்கொண்டு மாமலை மீமிசையேறிக் கோமகள்தன் கோயில்புக்கு நங்கைக்குச் சிறப்பயர்ந்த செங்குட்டுவற்குத் திறமுரைப்பர்மன்"—சிலப்பதிகாரம், வாழ்த்துக்காதை.

பொருளின் கூறுகிய கருத்தும் உணர்ச்சியும் பல திறப்பட்டவை யாயினும், புறத்தில் பரம ஜீவகாருண்ய ஒழுக்கத்தையும், அகத்தில் ஈசுவராநுபவத்தையும் அடிப் படையாகக்கொண்டு எழும் கருத்தும் உணர்ச்சியுமே முடிவான இன்பந் தரக்கூடியவை என்பதை நம் நாட்டில் சிறு பிள்ளைகள்கூட அறிவார்கள். ஆகையால்,

> " ஓ மனமே! பக்தியில்லாத சங்கீத ஞானத்தினால்
> நற்கதி உண்டாகுமா? "[27]

என்று ஸ்ரீராம பக்த சிரேஷ்டரான ஸ்ரீ தியாகராஜசுவாமி களும்,

> " அம்பலப் பாட்டே அருட்பாட்டு
> அல்லாத பாட்டெல்லாம் மருட்பாட்டு "[28]

என்று ஸ்ரீ நடராஜ ஸ்வரூபத்தில் முழுகித் திளைக்கும் ஸ்ரீ இராமலிங்க சுவாமிகளும் சொல்வதில் சங்கீதத்தில் வல்லவர்கள் ஆச்சரியப்படத்தக்கது ஒன்றுமில்லை.

---

26. ஸங்கீத ஸாஹித்ய வித்தையில் ஸாக்ஷாத் பகவானின் அருள்பெற்ற மஹா வித்துவான்களாகிய ஸ்ரீ தியாகராஜய்யரவர்கள், முத்துஸ்வாமி தீக்ஷிதரவர்கள், சாமா சாஸ்திரிகள், பட்டணம் சுப்பிரமணிய ஐயரவர்கள் முதலான பலரும் பெரும்பாலும் தெலுங்கு பாஷையிலும் மற்றவை சமஸ்கிருத பாஷையிலுமாகவே கீர்த்தனை களைப் பாடியிருக்கிறார்கள். அவைகளிலுள்ள ஸங்கீத ரஸத்திற்குப் பன்மடங்கு மேலாக அக்கீர்த்தனைகளின் பொருள் பக்தி ரஸத்தில் நிறைந்திருக்கிறதென்பதை அவற்றின் பொருளை அறிந்த புத்திமான்கள் யாவரும் நிராக்ஷேபமாக ஒப்புக்கொள்வார்கள்— சங்கீத வித்வான், ஸ்ரீ வி. ஸ்ரீநிவாசய்யங்கார் (Key to Music).

27. தியாகராஜ ஹ்ருதயம், முதல் புத்தகம்.

28. 20-ம் பக்கம் பார்க்க.

எக்காலத்திலும், ஜீவகாருண்ய ஒழுக்கத்திலும் ஈசுவரானுபவத்திலும் இயல் இசைப் புலமைகளிலும் ஒருங்கே வல்ல பெரியோர்கள் சிலர் இருந்தே வருகிறார்கள்.[29] ஸ்ரீ இராமலிங்க சுவாமிகளும் ஜீவகாருண்ய ஒழுக்கத்திலும் ஈசுவரானுபவத்திலும் இயற்புலமையிலும் போலவே இசையிலும் சிறப்புற்று விளங்கினார்கள் என்பது இப் பகுதியிலடங்கிய—நாமாவளி முதல் கீர்த்தனை வரையில் உள்ள—ஆயிரத்துக்கு மேற்பட்ட பாடல்களைப் பார்ப் பவர்க்குத் தெரியாமற் போகாது. சீர்காழி ஸ்ரீ நாராயண சாமி பிள்ளை அவர்கள் பிடில் வாசிப்பதில் மஹோன்னத நிலையை அடைந்து அந்தப் பிறநாட்டு இசைக்கருவியை இந்நாட்டில் பரவச்செய்தவர்களில் ஒருவராவர். அவர்கள் பலகால் வடலூர் சென்று, சுவாமிகளைத் தெரிசித்து, அங்கே அப்போதப்போது சிற்சிலகாலம் வசித்து வந்தார்கள் என்றும்; சுவாமிகளிடத்திலிருந்தே சங்கீத வித்தையின் நுட்பங்களை அவர்கள் கற்றுக்கொண்டார்கள் என்றும்; பல தடவை சுவாமிகள் பாட அவர்கள் பிடில் வாசித்து மகிழ்ந்தார்கள் என்றும்; சுவாமிகளுக்கு ஒப்புயர்வற்ற கின்னர ஸ்வரம் என்றும்; தாம் கண்ட மற்றைய பாடல்களில் சிறந்தவை மனமுருக்கும் தன்மையனவாக, சுவாமிகளின் பாடல்கள் மனத்தை உருக்குவதோடு நில்லாது எலும்பையும் உருக்கும் தன்மையன என்றும் சொல்லி ஆனந்தமடைவார்கள் என்றும் அவர்களே நேரே சொல்லக் கேட்ட கீர்த்தனாசாரியர் ஸ்ரீ (C. R.) ஸ்ரீநிவாசய்யங்கார்

29. உதாரணமாக: முற்காலத்தில், இளங்கோவடிகள்; இடைக்காலத்தில், சைவ வைஷ்ணவ சமயாசாரியர்களும் ஸ்ரீ அருணகிரியாரும்; பிற்காலத்தில், ஸ்ரீ கோபாலகிருஷ்ண பாரதியார்,

அவர்கள் (பி.ஏ., எல்.டி.) சொல்ல எனக்குத் தெரிந்தது. மாயவரம் முன்சீபு ஸ்ரீ வேதநாயகம் பிள்ளை அவர்கள் தமது ஆசிரியராகிய மகாவித்துவான் ஸ்ரீ வி. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களோடு வடலூர் சென்று, சுவாமிகள் முன்பாகத் தாம் இயற்றிய 'சர்வசமய சமரசக் கீர்த்தனைகளை' அரங்கேற்றிக்கொண்டு வந்தார்கள் என்று கர்ண பரம்பரைக் கேள்வியாலும், ஸ்ரீ (K. V.) ஸ்ரீநிவாசய்யங்கார் அவர்கள் தமது 'சங்கீத சில்லரைக் கோவை'யில் எழுதியிருப்பதாலும் தெரிய வருகிறது. மேலும், சிதம்பரம் கிருஷ்ணய்யர் முதலிய சங்கீத வித்துவான்கள் பலப் பலர் சுவாமிகளிடம் சென்று பாடி அவர்களால் பாராட்டப்படுவதைப் பெரிதாகக் கொண்டாடினார்கள் என்றும்; சுவாமிகள் வந்த வித்துவான்கள் பாடுவதைக் கேட்பதோடு, ஒரோர் சமயம் தாமும், வந்த வித்துவான்களின் வேண்டுகோட் கிணங்கி, அவர்கள் வித்தியா கர்வம் கெட்டு, வியந்து, தம்மை மறந்து, கண்ணீரும் கம்பலையுமாக ஆகும்படி திருவாசகத்தி னின்றோ அல்லது தம் முள் எழுந்த பாடலினின்றோ இரண்டொரு சொற்களைக் கொண்டே ஈசுவராநுபவத்தை விளக்கும் இசையை அநுபவ பூர்வமாக [30] உபதேசிப்பார்கள் என்றும் கர்ண பரம்பரைக் கேள்வியாலும், ஸ்ரீ ச. மு. கந்தசாமி பிள்ளை அவர்களது சரித்திரக் குறிப்பாலும் தெரிகிறது.

எனக்குத் தெரிந்த வரையில் சங்கீத வித்துவான்களில் ஸ்ரீ ச. மு. கந்தசாமி பிள்ளை அவர்கள் ஒருவரே

---

30. சத்துவமாவது...சுத்தச் சுவையாகின்ற ஒன்பதிலும் பாவிக்கும் அத்தனையே மெய்ம்மைத்தாய் வருவதெனக் கொள்க . . . கருணை யென்றால் பாவித்தக் காட்டுமதன்றி, மெய்யாகக் கண்ணீர் வந்தழுவது . . . அவைதாம் அச் சுவைகளில் எண்ணம்

தமது ஆயுட்கால முழுவதையும் சுவாமிகளது திருப்பாடல்களைப் பாடிப் பயன்படுத்திக்கொண்டவராவர். அவர்கள் அவற்றை உணர்வோடு பாடுவதைக் கேட்போரில் பலர் செயலற்றுப் பதுமைபோல் இருப்பர். பிள்ளை அவர்களை ஒருவாறு பின்பற்றி இப்போது பாடி அன்பர்களை இன்புறச் செய்பவர்கள் சுவாமிமலை ஸ்ரீ ஸ்ரீநிவாச பிள்ளை அவர்கள் உள்ளிட்ட இரண்டொரு சங்கீத வித்வான்களே யாவர். மயிலாப்பூரில், இயற்றமிழ் இசைத்தமிழ்ப் புலவரும் சிறந்த ஈசுவர பக்தருமான ஸ்ரீ (N) கோடீசுவர ஐயரவர்கள் (பி.ஏ.) தாம் சுவாமிகளது பாடல்களை உணர்ச்சியோடு பாடுவதைக் கேட்டு, ஹைகோர்ட் ஜட்ஜ் ஸ்ரீ (Dr. Sir. S.) சுப்பிரமணிய ஐயர் அவர்கள், எக்ஸிக்யுடிவ் கௌன்சில் மெம்பர், ஸ்ரீ வி. கிருஷ்ணசாமி ஐயரவர்கள் முதலிய மகாமேதாவிகள் கண்ணீரும் கம்பலையுமாக அவற்றை அநுபவிப்பார்கள் என்று அவர்களே சொல்ல எனக்குத் தெரிந்தது. சுவாமிகளது பாடல்களில் பெரும்பாலன எல்லாச் சாதியாரும், எல்லாச் சமயத்தாரும், எல்லா மதத்தாரும், கற்றவரோடு கல்லாதவருமேகூட ஒரு வகையில் அறிந்து போற்றும் பொதுத்தன்மை வாய்ந்தனவாக இருத்தலால், அவற்றைத் தாம் சங்கீதம் கற்பித்த கலாசாலைகளில் மாணவர்களுக்குக் கற்பித்தார் என்றும்; அவை பாட வேண்டிய முறையில் இப்போது சங்கீத வித்துவான்களால் பாடப்படுவதில்லை யென்றும் கீர்த்தனாசாரியர் ஸ்ரீ (C. R.) ஸ்ரீநிவாசய்யங்கார் அவர்கள் சொல்லக் கேட்

---

வந்தால் தோற்றும் உடம்பில்; உடம்பின் மிகத்தோற்றும் முகத்து; முகத்தின் மிகத் தோற்றும் கண்ணில்; கண்ணின் மிகத் தோற்றும் கண்ணின் கடையகத் தென்றவாறு.— சிலப்பதிகாரம், அரங்கேற்று காதை, அடியார்க்குநல்லா ருரை.

டிருக்கிறேன். அவர்களது இந்த மனக்குறையை நீக்க, இக்காலைய சங்கீத வித்துவான்களில் பெரும்புகழ் எய்தி நிற்கும் ஸ்ரீ முசிரி சுப்பிரமணிய ஐயரவர்கள் முன் வந்திருக்கிறார்கள் என்று தெரியப் பெருமகிழ்ச்சி உண்டாகிறது. அவர்களைப் போன்ற மற்ற சங்கீத மகாவித்துவான்களும் சுவாமிகளின் அழகிய எளிய பாடல்களில் உள்ளும் புறத்தும் நிறைந்து பொங்கித் ததும்பும் பரம ஜீவ்காருண்ய ஒழுக்கத்தையும் ஈசுவராநுபவத்தையும் தங்கள் தங்களுக்குக் கைவந்த சங்கீத வித்தையின் மூலம் தாம் தாம் உணர்ந்தவழி பிறரும் உணர்ந்துய்ய விளக்குவார்களாக.

இப்பகுதியின் முதற்பதிப்புப் பிரதிகள் எல்லாம் அவை வெளிவந்த இரண்டொரு மாதத்திற்குள் செலவாய்ப் போனாலும், இப்பகுதியையும், இதற்குப் பின் வந்த மற்ற ஐந்து பகுதிகளைப்போல், கிடைக்கக்கூடிய எல்லா மூல ஆதாரங்களையும் ஆராய்ந்து குறிப்புக்களோடு வெளியிட வேண்டும் என்று தீர்மானித்ததால், இவ்விரண்டாம் பதிப்பு வெளிவர இத்தனை நாளாயிற்று. நான் முதலில் எண்ணியதற்கு மேலான சிறப்புக்களோடு இப் பதிப்பு விளங்குவதற்கு உரிய காரணங்கள் இரண்டாகும். முதலாவது, இவ் இசைநூலைக் குறித்த இரண்டொரு ஐயங்களைத் தீர்த்துக்கொள்ள நான் ஸ்ரீ (C.R.) ஸ்ரீநிவாசய்யங்கார் அவர்களிடம் போனபோது, அவர்கள், இத்திருப் பாடல்களை ஸ்வரப்படுத்தி அச்சிட்டால், அது சங்கீத வித்தையைப் பயிலும் பெரும்பாலார்க்கும் பயன்தரும் என்று சொல்லி, ஸ்வரப் படுத்துவதில் நிபுணத்வம் வாய்ந்த தமது நண்பராகிய ஸ்ரீ (N) கோடீசுவர ஐயரவர்களால் பெரும்பாலனவற்றிற்குச் செய்வித்தும், எஞ்சியவற்றைத்

தாமேசெய்தும் முடித்துக் கொடுத்தார்கள்[31]. ஸ்ரீ (N) கோடீசுவர ஐயரவர்கள் ஸ்வரப்படுத்தியபோது கூடனிருந்து உதவியவரும், இயற்கல்வியோடு கூடிய இசைப் புலமையில் சக்ரவர்த்திகள் எனத் திகழும் இவ்இரு பேராசிரியர்கள் ஸ்வரப்படுத்தியதில் தவறு நுழையாதபடி, அச்சுக் காகிதங்களைச் சலிப்பில்லாமல் பார்த்துக் கொடுத்தவரும் எனது அருமை நண்பர் அட்வொகேட் ஸ்ரீ (N) இராமகிருஷ்ணய்யர் அவர்கள் (எம்.எ., பி.எல்.) ஆவர். இம்மூவரும் இங்ஙனம் செய்த இவ் இன் இசைத் திருத்தொண்டு சிறந்த வழிகாட்டியாக இருந்து, இசைப்புலமையில் சிறந்த மற்றைய அன்பர்களில் சிலரையாவது இதில் ஊக்கங்கொண்டு உழைத்துப் பயன் தரும்படி செய்யும் என்பதில் சந்தேகமில்லை. மேற்சொன்ன மூவரும் இந்த விஷயத்தைத் தாம்தாம் எடுத்த சற்காரியம்போல் செய்து முடித்ததால், அதற்காக நான் அவர்களுக்கு நன்றி கூறுதலாவது அல்லது அவர்களைப் புகழ்தலாவது, அவர்களுக்கும் எனக்கும் இந்நூல் காரணமாக ஏற்பட்ட அந்யோந்ய நேயத்தின் பெருமையைக் குறைத்து, அதைப் புல்லியதாகக் காட்டும் என அஞ்சவேண்டி யிருக்கிறது.

இரண்டாவது காரணம்: முதல் ஆறு பகுதிகளை அடக்கவிலைப் பதிப்பாக அச்சிட்டதில் நான் அடைந்த பொருள் நஷ்டத்தாலும், பிரதி நஷ்டத்தாலும், சிநேக நஷ்டத்தாலும் சோர்வடைந்து, நான் கொண்ட விரதம் எப்படி முடியப்போகிறது என்று திருவருளை இரவும் பகலும் நாடிக் கலங்கிக்கொண் டிருந்தபோது, "மலங்கினேன் கண்ணினீரை மாற்றி மலங்கெடுத்த பெருந்துறை'

---

31. இதன் விவரங்களை 236-ம் பக்கத்தில் காண்க.

என்றவாறு திருவருளின் துணைமை தோன்றி விளங்க, உலக வியவகாரங்களில் தேர்ச்சி யடைந்ததோடு ஆன்மார்த்தங்களில் ஆழ்ந்த பற்றுடையவரும் எனது இளம்போதிய கலாசாலை நண்பருமான ஓர் அன்பர், நான் ஆராய்ந்து முடித்த இப்பகுதிகளைப் பொருள் நஷ்டமுண்டாகாத எல்லையில் அடக்கவிலைப் பதிப்பாகவே வெளியிடுவ தற்கு வேண்டிய ஓர் ஏற்பாட்டினைச் செய்துகொடுத்தார்கள். இங்ஙனம், அவர்கள் ஆடை இழந்தவன் கைபோல் எனக்கு உதவி செய்ய முன்வந்ததால், நான் இதுவரையில் செய்யமுடியாது வருந்தி விட்டிருந்தவற்றில் சிலவற்றோடு கூடி இப்பதிப்பு வெளிவருகிறது. சுவாமிகளின் திருவுருவமும், அவர்கள் கையெழுத்தும், அவர்கள் கையெழுத்தில் உள்ளவாறே இரண்டு திருப்பாடல்களும் ஞான சபையின் உருவமும் இதில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. சுவாமிகள் திருக்காப்பிட்டுக்கொண்ட 60-வது ஆண்டில் இவை இங்ஙனம் வெளிவருவது அவர்களது திருக்குறிப்புப் போலும்.

இவை நிற்க. இப்பகுதியை ஆராய்வதற்கு இன்றியமையாதன வாகிய ஆதாரங்களின்[32] விவரமும், இதை அச்சிடுவதில் எனக்கு மனப்பூர்வமாய்த் துணை நின்று உதவிய இரண்டொரு ஆன்மநேயர்களின் விவரமும் இவ் அடக்கவிலைப் பதிப்பின் வரலாற்றில் குறிக்கப்படும். இவர்களுக்கு எனது வணக்கத்தையும் நன்றியறிதலையும் அன்பையும் இப்போது இங்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். சுபம்! சுபம்!! சுபம்!!!

ஆ. பா.

---

32. இவற்றுள் சிலவற்றை 237-ம் பக்கத்தில் காண்க.

# ஆராதனை

---

யார் தமது இன்னிசையால் என் செவிக் குறையை அகற்றினார்களோ, யார் தமது மெய்க் கனிவால் என் இரும்பு மனத்தை நெகிழ்வித்தார் களோ, யார் தமது ஜீவகாருண்ய ஒழுக்கத்தால் என் வேற்றுமைப் புத்தியை அழித்தார்களோ, யார் தமது எளிய கல்வியால் என் கல்வியறி வைத் திருஅருட்பாவோடு பிணைத்துவிட்டார் களோ, யார் தமது அடிமைச்செயலால் என்னை ஸ்ரீ சுவாமிகளுக்கு மீளா ஆளாக்கினார்களோ, யார் தமது நாயகிபாவத்தால் என்னை ஸ்ரீநடராஜ விக்ரஹத்தைக் காதலிக்கச் செய்தார்களோ, யார் தமது இறுதிமொழியால் என்னை அருட் ஜோதி ஆண்டவனிடம் ஒப்புவித்தார்களோ, அந்தப் புனிதவதியாரின் ஆன்மாவுக்கு எனது இவ் எளிய திருத்தொண்டு ஓர் ஆராதனையாக என்றும் நிலவுவதாக.

# ஆசாரியஸ்துதி

திருச்சிற்றம்பலம்

கீர்த்தனை

செஞ்சுருட்டி—ஆதி

**பல்லவி**

இராமலிங்க தேவா—இராமலிங்கு வாவா

**அநுபல்லவி**

தாரதரம் பாராமல்இந்தத்
தாரதலம் பராவவந்த இராம

**சரணங்கள்**

மருஇரு வினைஒன்றாய்-மலபரி பாகநன்றாய்
வரஅருள் நலஞ்சேர-மரணஜ னனந்தீர இராம

ஜாதி பேதமுன்னும்-சழக்கைவிட் டிடப்பன்னும்
நீதி அறிந்தும்இன்னும்-நெறிநிலா எங்கள்முன்னும் இராம

வடல்வெளி யினிற்சித்தி-வழங்கிடு மௌனத்தி
இடமின்றித் துதித்திரும்-என்றுரைசெய் சற்குரு இராம

—சமரசபஜனை ஸ்ரீ ச. மு. கந்தசாமி பிள்ளை.

[இது ஸ்ரீ இறுக்கம் இரத்தின முதலியார்க்கு எழுதிய 10-வது திரு முகத்திலிருந்து எடுக்கப்பட்டது—திருமுகப்பகுதி 49-ம் பக்கம்.]

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருஅருட்பா

## க. கீர்த்தனைப் பகுதி

### க. நாமாவளிகள்[1]

**1**

சிவசிவ கஜமுக கணநாதா
சிவகண வந்தித குணநீதா.[2] க

சிவசிவ சிவசிவ தத்துவ போதா
சிவகுரு பரசிவ சண்முக நாதா.[2] உ

அம்பலத் தரசே யருமருந் தே
ஆனந்தத் தேனே யருள்விருந் தே. ௩

பொதுநடத் தரசே புண்ணிய னே
புலவரெ லாம்புகழ் கண்ணிய னே. ௪

1. பின்வரும் பேரெண்ணிட்ட 187, சிற்றெண்ணிட்ட 33 ஆகக்கூடிய 220 நாமாவளிகளுக்கும் சுவாமிகளின் திருக்கரத்தால் எழுதிய தெய்வத் திருவேடுகள் கிடைக்காததால், அவற்றினின்றும் நேரே முதற்கண் பெயர்த்தெழுதப்பட்ட தெனத் தோன்றும் பேரன்பர் இறுக்கம் ஸ்ரீ இரத்தின முதலியாரவர்களது 'குறிப்புப் புத்தகத்தில் கண்ட எண் கொண்ட வரிசைப்படி, அவை இங்கு அச்சிடப்பட்டிருக்கின்றன. ஸ்ரீ வேங்கடேசய்யரவர்கள் பிரதியில்

சிவசிவ சிவசிவ சின்மய தேஜா
சிவசுந் தரகுஞ் சிதநட ராஜா. ரு

மலைதரு மகளே மடமயி லே
மதிமுக வமுதே யிளங்குயி லே. சு

---

"ஷடாந்த சமரச சுத்த சன்மார்க்க சங்கத்து நாமாவளிகள்" என்று இவற்றின் தலைப்பு காணப்படுகிறது.

ஓதுபவர்கள் ஒருவாறு அயர்வுறாமலிருக்க, நாமாவளிகளின் நடை, அளவு முதலிய ஒற்றுமைகளைக் கருதி, அவை, தம்முள் ஒன்றை ஒன்று பின்பற்றிய வரிசையில் திரிபின்றி, இங்கு 52 பிரிவுகளாகக் காட்டப்பட்டிருக்கின்றன.

2. "சிவசிவ கஜமுக" என்னும் க-வது நாமாவளியின் (i) இராக தாளங்களும் (ii) சந்தக் குழிப்பும் (iii) ஸ்வரமும் பின் வருமாறு:—

(i) ஹமீர் கல்யாணி—ஆதி

(ii) தனதன தனதன தனதான
தனதன தந்தன தனதான

(iii) ஸஸஸஸ ஸஸஸஸ தநிஸநி தப
ததநிநி ரிரிகக ஸஸநித ஸா

உ-யிஉ எண்களுடைய 11 நாமாவளிகளுக்குரிய ஸ்வர முதலியவற்றை மேலே குறிப்பிட்டவற்றைத் தழுவி அமைத்துக் கொள்க. ஸ்வரமும் பிறவும் குறிக்காத பின்வரும் மற்றைய நாமாவளிகளுக்கும் நாமாவளித் தொகுதிகளுக்கும் அவ்வவற்றின் மேலுள்ள நாமாவளிகளின் ஸ்வர முதலியவற்றைத் தழுவிக் கொள்க.

ஒரு நாமாவளியின் அடிகள் சந்தத்துள்ளல் என்னும் சந்த வரிசையில் தம்முள் ஒத்திருந்தால், அதன் முதல் அடி அல்லது முதல் வரியின் சந்தவரிசை மட்டும் குறித்தும், அவை அதில் தம்முள் வேறுபட்டிருந்தால், அந்த நாமாவளியின் சந்தக் குழிப்பு முழுவதும் குறித்தும் இருக்கிறது.

ஆனந்தக் கொடியே யிளம்பிடி யே
அற்புதத் தேனே மலைமா னே. எ

படன விவேக பரம்பர வேதா
நடன சபேச சிதம்பர நாதா. அ

அரிபிர மாதியர் தேடிய நாதா
அரகர சிவசிவ ஆடிய பாதா. கூ

அந்தண அங்கண அம்பர போகா
அம்பல நம்பர அம்பிகை பாகா. ய

அம்பர விம்ப சிதம்பர நாதா
அஞ்சித ரஞ்சித குஞ்சித பாதா. கக

தந்திர மந்திர யெந்திர பாதா
சங்கர சங்கர சங்கர நாதா. கஉ

கருணை நிதியேச பாபதி யே
கதிமா நிதியே பசுபதி யே.[3] கங

---

இறுக்கம் ஸ்ரீ இரத்தின முதலியாரவர்களது 'குறிப்புப் புத்தக'த்திலும், வேட்டவலம் ஜமீன்தார் ஸ்ரீ அப்பாசாமி பண்டாரியாரவர்கள் பிரதியிலும் முதலிரண்டு நாமாவளிகளாக உள்ள இவை கிடைத்திருக்கும் மற்றப் பிரதிகளில் காணப்படவில்லை. அவற்றில் "அம்பலத்தரசே" என்பதே முதலாக இருக்கிறது.

3. இதன் ஸ்வர முதலியவை:—

(i) ஹமீர் கல்யாணி — ஆதி

(ii) தனனா தனனாத னாதன னா
தனனா தனனா தனதன னா

(iii) ஸநிஸா ஸஸஸஸ த நிஸநி பா
ததஸா ரிரிகக ஸரிஸநி ஸா

சபாபதி பாதம் தபோபிர சாதம்
தயாநிதி போதம் சதோதய வேதம்.[4] ௧௪

கனகசி தம்பர கங்கர புரஹர
அனுப ரம்பர சங்கர ஹரஹர.[5] ௧௫

சகலசு லாண்டச ராசர காரண
சகுணசி வாண்டப ராபர பூரண.[6] ௧௬

சிதம்பிர காசா பரம்பிர காசா
சிதம்ப ரேசா சுயம்பிர காசா.[7] ௧௭

---

4. இதன் ஸ்வர முதலியவை:—
 (i) பைரவி—ஆதி
 (ii) தனுதன தானம் தனுதன தானம்
 (iii) தநீஸ்ஸ் நீத தநீஸ்ஸ் நீத
 மபாமக ரீஸ மபாமக ரீஸ

5. இதன் ஸ்வர முதலியவை:—
 (i) பைரவி—ஆதி
 (ii) தனனத னந்தன தந்தன தனதன
 தனனத னந்தன தந்தன தனதன
 (iii) தநிஸ்ஸ் நிரித தநிஸ்ரி ஸ்நிதப
 தநிஸ்ப மாகரி ஸரிநிஸ தநிஸஸ

6. இதன் ஸ்வர முதலியவை:—
 (i) பைரவி—ஆதி
 (ii) தனனத னுந்தத னுதன தான்ன
 (iii) தநிஸ்ஸ் நீதத நீஸ்ரி ஸ்நிதப
 தநிஸ்ப காரிஸ ரீநிஸ தாநிஸ

7. இதன் ஸ்வர முதலியவை:—
 (i) ஹமீர் கல்யாணி—ஆதி
 (ii) தனந்த தானு தனந்த தானு
 (iii) ரிகாரி ஸாஸா தநித பாபா
 தஸாரி காகா ஸரீநி ஸாஸா

## 2

ஜோதி ஜோதி ஜோதி சுயஞ்
ஜோதி ஜோதி ஜோதி பரஞ்
ஜோதி ஜோதி ஜோதி யருட்
ஜோதி ஜோதி ஜோதி சிவம்.[8] ௲அ

## 3

அருட்பிர காசம் பரப்பிர காசம்
அகப்பிர காசம் சிவப்பிர காசம்.[9] ௧௯

நடப்பிர காசம் தவப்பிர காசம்
நவப்பிர காசம் சிவப்பிர காசம். ௨௰

## 4

போகம்சுக போகம்சிவ போகம்மது நித்தியம்
ஏகம்சிவம் ஏகம்சிவம் ஏகம்மிது சத்தியம்.[10] ௨௧

---

8. இதன் ஸ்வர முதலியவை:—
   - (i) பிலஹரி—ஆதி, திருச்ரநடை.
   - (ii) தான தான தான தன
   - (iii) பபப பபப பதம கரி
     ரிரிக ரிரிஸ ரிரிக பப
     கபத ஸ்ஸ்ஸ் ஸ்நித பப
     பதப மகரி ஸரித ஸஸ

9. இதன் ஸ்வர முதலியவை:—
   - (i) ஹமீர் கல்யாணி—ஆதி
   - (ii) தனந்த தானம் தனந்த தானம்
   - (iii) ரிகாரி ஸாஸா தநீத பாபா
     தஸாரி காகா ஸரீநி ஸாஸா

10. இதன் ஸ்வர முதலியவை:—
   - (i) பிலஹரி—ரூபகம்
   - (ii) தானந்தன தானந்தன தானந்தன தத்தம்

## 5

இக்கரை கடந்திடி லக்கரை யே
இருப்பது சிதம்பர சர்க்கரை யே.[11] உஉ

என்னுயி ருடம்பொடு சித்தம தே
இனிப்பது நடராஜ புத்தமு தே. உ௩

## 6

நலமங்கல முறுமம்பல நடனம்மது நடனம்
பலநன்கருள் சிவசங்கர படனம்மது படனம்.[12] உ௪

## 7

ஐயர்தி ருச்சபை யாடக மே
ஆடுதெ லானந்த நாடக மே.[13] உ௫

---

(iii) தாதாஸ்ஸ் தாதாஸ்ஸ் தாதாநித ததபா
பதநிதபத கதபமகரி ஸரிகரிஸத ஸாஸா

11. இதன் ஸ்வர முதலியவை:—

(i) ஆனந்த பைரவி—ஆதி

(ii) தத்தன தனந்தன தத்தத ஞ
தனத்தன தனந்தன தத்தத ஞ

(iii) மாபப பபதப மபமக ரிஸநி
ஸாகரி கமகரி ஸமகரி ஸா

12. இதன் ஸ்வர முதலியவை:—

(i) ஆனந்த பைரவி—ரூபகம்

(ii) தனதந்தன தனதந்தன தனதந்தன தனனம்

(iii) கமபாபப பபபாபம கமபமகரி ஸஸநி
நிஸஸாகரி கமபமகரி நிஸஸமகரி கரிஸா

13. இதற்கு உஉ-வது "இக்கரை" என்னும் நாமாவளிக்குக் குறித்த ஸ்வரம் முதலியவற்றைத் தழுவி அமைத்துக்கொள்க.

கனகா கரபுர ஹரசிர கரதர
கருணா கரபர சுரவர ஹரஹர.[14] உசு

கனகச பாபதி பசுபதி நவபதி
அனகவு மாபதி யதிபதி சிவபதி.[15] உஎ

உத்தர ஞானசி தம்பர மே
சித்தியெ லாந்தரு மம்பர மே.[16] உஅ

கருணம் பரவர கரசிர பவபவ
அருணம் பரதர ஹரஹர சிவசிவ.[17] உகூ

---

14. இதன் ஸ்வர முதலியவை:—
 (i) சுத்த ஸாவேரி—ஆதி
 (ii) தனனா தனதன தனதன தனதன
 (iii) பதஸ்ா ததபப பபதப மமரிரி
 ஸரிமா ரிஸதஸ ஸஸரித ஸஸஸஸ

15. இதன் ஸ்வர முதலியவை:—
 (i) சுத்த ஸாவேரி—ஆதி
 (ii) தனனத னதன தனதன தனதன
 (iii) பதஸ்ஸ் தாபப மமபம ரிரிரிரி
 ஸரிமம ரீஸத ஸஸரித ஸஸஸஸ

16. இதன் ஸ்வர முதலியவை:—
 (i) புன்னாகவராளி—ஆதி
 (ii) தத்தன தானன தந்தத னா
 தத்தன தாந்தன தந்தத னா
 (iii) ஸாபம காரிஸ ஸாரிஸ நீ
 ஸாபம காரிஸ ஸாரிநி ஸா

17. இதன் ஸ்வர முதலியவை:—
 (i) பூரி கல்யாணி—ஆதி
 (ii) தனதாந் தனதன தனதன தனதன
 (iii) கமகா ரிஸரித ஸஸரிரி ககமம
 பமகா ரிஸரித ஸரிஸத ஸஸஸஸ

அம்பல வாசிவ மாதேவ வா
வம்பல வாவிங்கு வாவா வா.[18] ௧௰

நடராஜ னெல்லார்க்கு நல்லவ னே
நல்லவெ லாஞ்செய வல்லவ னே.[19] ௧௧

ஆனந்த நாடகங் கண்டோ மே-பர
மானந்த போனகங் கொண்டோ மே.[20] ௧௨

**8**

சிதானந்தப ராம்பர சவுதய
சதானந்த டாம்பர ஜயஜய.[21] ௧௩

---

18. இதன் ஸ்வர முதலியவை:—
 (i) பூரி கல்யாணி—ஆதி
 (ii) தந்தன தானன தானா னா
 (iii) ஸாபம கரிஸத ஸரிகரி கா
 காதம கரிஸத ஸரிஸத ஸா

19. இதன் ஸ்வர முதலியன:—
 (i) யதுகுல காம்போஜி—ஆதி
 (ii) தனதான தய்யாத்த தய்யத னா
 தய்யன தாந்தன தய்யத னா
 (iii) பதஸ்ஸ் ஸ்நிதாப மதப்ம கஸரீ
 ரீபம கரிஸரி ஸரிஸத ஸா

20. இதன் ஸ்வர முதலியவை:—
 (i) ஸாவேரி—ஆதி
 (ii) தானந்த தான்னம் தந்தா னா—தனா
 (iii) பதரிஸ் நிதபம பதபம கா—ரிரி
 ஸரிகரி ஸஸநித ஸரிகரி ஸா

21. இதன் ஸ்வர முதலியவை:—
 (i) பியாக்—த்ருபுடை
 (ii) தானாந்தன னாந்தன தனதன

ஏகாந்த சர்வேச சமோதம
யோகாந்த நடேச நமோநம. ௩௪

ஆதாம்பர வாடக வதிசய
பாதாம்புஜ நாடக ஜயஜய. ௩௫

போதாந்த புரேச சிவாகம
நாதாந்த நடேச நமோநம. ௩௬

9

சகள வுபகள நிட்கள நாதா
உகள சததள மங்கள பாதா.[22] ௩௭

சந்தத முஞ்சிவ சங்கர பஜனம்
சங்கித மென்பது சற்சன வசனம்.[23] ௩௮

---

(iii) பஸ்நீதப பாபப பபபப
ஸபமபமக கரிஸநி ஸஸஸஸ

22. இதன் ஸ்வர முதலியவை:—
(i) தன்யாசி—ஆதி
(ii) தனன தனதன தத்தன தாந
தனன தனதன தந்தன தாந
(iii) பநிஸ ஸஸஸஸ ஸஸரிஸ நீநீ
நிஸக கரிரிஸ ஸரிஸநி ஸாஸா

23. இதன் ஸ்வர முதலியவை:—
(i) சஹானா—ஆதி
(ii) தந்தன தந்தன தந்தன தனனம்
தந்தன தந்தன தத்தன தனனம்
(iii) ரிகமப பமமக காமக ரிகமப
ரிகமப கமரிஸ நிநிதப தநிஸா

சங்கர சிவசிவ மாதே வா
எங்களை யாட்கொள வாவா வா.[24] ௩௯

அரகர சிவசிவ மாதே வா
அருளமு தந்தர வாவா வா. ௪௰

சதபரி சதவுப சதமத விதபவ
சிதபரி கதபத சிவசிவ சிவசிவ.[25] ௪௧

அரகர வரசுப கரகர பவபவ
சிரபுர சுரபர சிவசிவ சிவசிவ. ௪௨

ஜால கோலகன காம்பர சாயக
கால காலவன காம்பர நாயக.[26] ௪௩

---

24. இதன் ஸ்வர முதலியவை:—
   (i) சஹானா—ஆதி
   (ii) தந்தன தனதன தானா னா
   தந்தன தாத்தன தானா னா
   (iii) ரீரிரி ரிரிரிரி ரிகமப கா
   காகம ரிரிஸஸ ஸரிஸநி ஸா

25. இதன் ஸ்வர முதலியவை:—
   (i) ஹம்ஸத்வனி—ஆதி
   (ii) தனதன தனதன தனதன தனதன
   (iii) ஸஸநிப ஸநிஸரி ககபப நிநிஸ்ஸ்
   ஸ்ஸ்நிப ககரிரி ஸரிஸநி ஸஸஸஸ

26. இதன் ஸ்வர முதலியவை:—
   (i) ஹம்ஸத்வனி—ஆதி
   (ii) தான தானதன தாந்தன தானன
   (iii) ஸாஸ ஸாஸநிப ஸாஸஸ ரீரிரி
   காப காரிஸநி ஸாரிநி ஸாஸஸ

நடனசி காமணி நவமணி யே
திடனக மாமணி சிவமணி யே.[27] ௪௪

நடமிடு மம்பல நன்மணி யே
புடமிடு செம்பல பொன்மணி யே. ௪௫

உவட்டாது சித்திக்கு முள்ளம தே
தெவிட்டாது தித்திக்குந் தெள்ளமு தே ௪௬

நடராஜ வள்ளலை நாடுத லே
நந்தொழி லாம்விளை யாடுத லே. ௪௭

அருட்பொது நடமிடு தாண்டவ னே
அருட்பெருஞ் சோதியென் னாண்டவ னே. ௪௮

## 10

நடுநாடி நடுநாடி நடமாடு பதியே
நடராஜ நடராஜ நடராஜ நிதியே.[28] ௪௯

நடுநாடி யொடுகூடி நடமாடு முருவே
நடராஜ நடராஜ நடராஜ குருவே. ௫௰

நடுநாடி யிடைநாடி நடமாடு நலமே
நடராஜ நடராஜ நடராஜ பலமே. ௫௧

---

27. இதன் ஸ்வர முதலியவை:—
(i) மோஹனம்—ஆதி
(ii) தனனத னாதன தனதன னா
(iii) ககபப காரிஸ ரிரிகக பா
ககதப காரிஸ ஸரிஸத ஸா

28. இதன் ஸ்வர முதலியவை:—
(i) பந்துவராளி—ஜம்பை
(ii) தனதான தனதான தனதான தனா
(iii) கமகாரி ஸரிஸாநி ஸரிகாரி கமபா
பஸ்நித பமகாரி கமகாரி ஸரிஸா

## 11

ஆயவாய நேயஞேய மாயஞாய வாதியே
தூயவாய காயதேய தோயமேய ஜோதியே.[29] ௫௨

ஆதவாத வேதகீத வாதவாத வாதியே
சூதவாத பாதநாத சூதஜாத ஜோதியே. ௫௩

அங்கசங்க மங்கைபங்க ஆதிஆதி ஆதியே
துங்கபுங்க வங்கலிங்க ஜோதிஜோதி ஜோதியே. ௫௪

அத்தமுத்த அத்தமுத்த ஆதிஆதி ஆதியே
சுத்தசித்த சப்தநிர்த்த ஜோதிஜோதி ஜோதியே. ௫௫

அஞ்சலஞ்ச லென்றுவந்தெ னெஞ்சமர்ந்த குழகனே
வஞ்சநஞ்ச முண்டகண்ட மன்றுள்நின்ற வழகனே. ௫௬

தொண்டர்கண்டு கண்டுமொண்டு
கொண்டுணுண்ட வின்பனே
அண்டரண்ட முண்டவிண்டு
தொண்டுமண்டு மன்பனே. ௫௭

கந்ததொந்த பந்தசிந்து சிந்தவந்த காலமே
எந்தஎந்த சந்தமுந்து மந்தவந்த கோலமே. ௫௮

என்றுமென்றி னொன்றிமன்று
ணன்றுநின்ற வீசனே
ஒன்றுமொன்று மொன்றுமொன்று
மொன்றதென்ற தேசனே. ௫௯

---

29. இதன் ஸ்வர முதலியவை:—

(i) கமாஸ்—ரூபகம்

(ii) தானதான தானதான தானதான தானனு

(iii) ஸாஸ்ஸாஸ் ஸாஸ்ஸாஸ் தா;ரீஸாரி ஸாநிதா
காமபாத நீதபாம மாகரீக ஸமகஸா

எட்டஎட்டி யொட்டவொட்டு மிட்டதிட்ட கீர்த்தியே
அட்டவட்ட நட்டமிட்ட சிட்டவட்ட மூர்த்தியே. கூ0

சேரிகார சாரவார சீரகார வூரனே
ஓருகார தேரதீர வாரவார தூரனே. கூக

வெய்யநொய்ய நையநைய மெய்புகன்ற துய்யனே
ஐயரைய நையவைய முய்யநின்ற ஐயனே. கூஉ

பாசநாச பாபநாச பாததேச வீசனே
வாசவாச தாசர்நேச வாசகாச பேசனே. கூந

## 12

வரகே சாந்தம கோதய காரிய
பரபா சாந்தசு கோதய சூரிய.[30] கூச

பளித தீபக சோபித பாதா
லளித ரூபக ஸ்தாபித நாதா. கூரு

அனிர்த கோபகரு ணம்பக நாதா
அமிர்த ரூபதரு ணம்புஜ பாதா. கூசு

உபல சிரதல சுபகண வங்கண
சுபல கரதல கணபண கங்கண. கூஎ

அம்போ ருகபத அரகர கங்கர
சம்போ சிவசிவ சிவசிவ சங்கர. கூஅ

நடராஜ மாணிக்க மொன்றது வே
நண்ணுத லாணிப்பொன் மன்றது வே. கூகூ

---

30. இதன் ஸ்வர முதலியவை:—

(i) ஹமீர் கல்யாணி—ஆதி

(ii) தனன தாந்தன தானன தானன

(iii) ததகரி ஸாஸஸ தநிஸநி தாபப

ததஸா ரீகக ரீகரி ஸாஸஸ

நடராஜ பலமது நம்பல மே
நடமாடு வதுதிரு வம்பல மே. எ௰

அபய வரதகர தலபுரி காரண
உபய பரதபத பரபரி பூரண. எக

அகரவு கரசுப கரவர சினகர
தகரவ கரநவ புரசிர தினகர. எஉ

வகரசி கரதின கரசசி கரபுர
மகரஅ கரவர புரஹர ஹரஹர. எஙு

## 13

உரியதுரிய பெரியவெளியி
லொளியிலொளிசெய் நடனனே
பிரியவரிய பிரியமுடைய
பெரியரிதய படனனே.[31] எச

அகிலபுவன வுயிர்கள்தழைய அபயமுதவும் அமலனே
அயனுமரியு மரனுமகிழ அருளுநடன விமலனே. எரு

## 14

அகரவுகர மகரவகர வமுதசிகர சரணமே
அபரசபர வமனசமன வமலநிமல சரணமே
தகரககந நடனகடன சகளவகள சரணமே
சகுணநிகுண சகமநிகம சகிதவிகித சரணமே.[32] எரு-1

31. இதன் ஸ்வர முதலியவை:—

(i) ஹரி காம்போஜி—ரூபகம்

(ii) தனனதனன தனனதனன தனனதனன தனதனு

(iii) தநிஸ்ஸ்ஸ் ஸ்ஸ்ஸ்ஸ் ததரிஸ்ரி ஸ்நிநிதா
ககமபபத ஸ்நிதபமக கபமகமக ரிகரிஸா

32. எரு-1—எரு-6 என்களுடைய 6 நாமாவளிகளையுஞ் சுட்டி 'அடியில் வரும் நாமாவளிகளை "அகில புவன" என்கிற

னகவனஜ வந்திதவமிர்த வகலவகில சரணமே
அதுலவனத வசுதவசல வநிலவனல சரணமே
தனககநக சபையவபய சரதவரத சரணமே
சதுரசதுர சகசசரித தருணசரண சரணமே. எடு-2

உளமுமுணர்வு முயிருமொளிர வொளிருமொருவ சரணமே
உருவினுருவு முருவுளுருவு முடையதலைவ சரணமே
இளகுமிதய கமலமதனை யிறைகொளிறைவ சரணமே
இருமையொருமை நலமுமருளு மினியசமுக சரணமே. எடு-3

அடியுநடுவு முடியுமறிய வரியபெரிய சரணமே
அடியரிதய வெளியினடன மதுசெயதிப சரணமே
ஒடிவில்கருணை யமுதமுதவு முபலவடிவ சரணமே
உலகமுழுது முறையநிறையு முபயசரண சரணமே. எடு-4

அறிவுளறியு மறிவையறிய வருளுநிமல சரணமே
அவசமுறுமெ யடியரிதய மமருமமல சரணமே
எறிவிலுலகி லுயிரையுடலி லிணைசெயிறைவ சரணமே
எனையுமொருவனெனவுளுணரு மெனதுதலைவ சரணமே. எடு-5

நினையுநினைவு கனியவினிய நிறைவுதருக சரணமே
நினையுமெனையு மொருமைபுரியு நெறியினிறுவு சரணமே

---

நாமாவளிக்குப் பின்னால் சேர்க்கவும்' என்று ஓர் குறிப்பு ௱அஎ-வது நாமாவளியை அடுத்து இருக்கம் ஸ்ரீ இரத்தின முதலியார் அவர்களது 'குறிப்புப் புத்தக'த்திலும் பெரிய நோட்டிலும் எழுதப்பட்டிருக்கிறது. ஸ்ரீ வேங்கடேசய்யரவர்கள் நோட்டிலும் வேலூர் அன்பர் நோட்டிலும் அவை அப்படியே முதற்கண் எழுதிப் பேரெண் தொடர்பாக இடப்பட்டிருப்பதால், பின்வரும் நாமாவளிகளின் எண்கள் திரிந்திருக்கின்றன.

இங்ஙனங் குறித்த பின்வரும் மற்ற இடங்களிலும் இப்படியே கொள்க.

இந்த நாமாவளிக்குரிய ஸ்வர முதலியவற்றை எசஉ-வது நாமாவளிக்குக் குறித்திருப்பவற்றைத் தழுவி அமைத்துக்கொள்க.

வனையுமதுர வமுதவுணவு மலியவுதவு சரணமே
மருவுசபையி னடனவரத வருகவருக சரணமே. எஙி-6

## 15

சபாசிவா மஹாசிவா சகாசிவா சிகாசிவா
சதாசிவா சதாசிவா சதாசிவா சதாசிவா.[33] எகூ

வாசிவா சதாசிவா மஹாசிவா தயாசிவா
வாசிவா சிவாசிவா சிவாசிவா சிவாசிவா. எஎ

## 16

நினைக்கில்நெஞ்ச மினிக்குமென்ற
நிருத்தமன்றி லொருத்தனே
நினைக்குமன்பர் நிலைக்கநின்று
பொருத்துகின்ற கருத்தனே.[34] எஅ

மயங்கிநெஞ்சு கலங்கிநின்று மலங்கினேனை யாண்டவா
வயங்கிநின்று துலங்குமன்றி லிலங்குஞானதாண்டவா. எகூ

களங்கவாத களங்கொள்சூத ருளங்கொளாத பாதனே
களங்கிலாதவுளங்கொள்வாருள்விளங்குஞானநாதனே. அ0

---

33. இதன் ஸ்வர முதலியவை:—
    (i) கமாஸ்—ரூபகம்
    (ii) தஞதஞ தஞதஞ தஞதஞ தஞதஞ
    (iii) நிஸ்ாநிஸ்ா நிஸ்ாநிஸ்ா நிதாநிஸ்ா நிஸ்ாநிதா
    மகாமபா தஸ்ாநிதா பகாதபா மஸமகஸ

34. இதன் ஸ்வர முதலியன:—
    (i) தோடி—ரூபகம்
    (ii) தனத்ததந்த தனத்ததந்த
    தனத்ததந்த தனத்தஞ
    (iii) பபபதாப பபபதாப மமபகாரி ஸஸரிகா
    ஸஸரிகாம மமபகாரி ஸரிகஸரிநி ததநிஸா

தடுத்தமலத்தைக் கெடுத்துநலத்தைக்
கொடுத்தகருணைத் தந்தையே
தனித்தநிலத்தி லினித்தகுலத்திற்
குனித்தவடிகொ ளெந்தையே. அள

எச்சநீட்டி விச்சைகாட்டி யிச்சையூட்டு மின்பனே
அச்சமோட்டி யச்சநாட்டி வைச்சுளாட்டு மன்பனே. அஉ

## 17

பொதுநிலை யருள்வது பொதுவினில் நிறைவது
பொதுநல முடையது பொதுநட மிடுவது
அதுபர மதுபதி அதுபொரு ளதுசிவம்
அரஅர அரஅர அரஅர அரஅர.[35] அங

நவநிலை தருவது நவவடி வுறுவது
நவவெளி நடுவது நவநவ நவமது
சிவமெனு மதுபத மதுகதி யதுபொருள்
சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ. அச

## 18

நான்சொன்ன பாடலுங் கேட்டா ரே
ஞானசி தம்பர நாட்டா ரே.[36] அரு

---

35. இதன் ஸ்வர முதலியவை:—
 (i) ஆநந்த பைரவி—ஆதி
 (ii) தனதன தனதன தனதன தனதன
 (iii) பபபப பபதப மமபம கரிஸநி

 ஸகரிரி கமகரி ஸரிகரி ஸஸஸஸ
 பபதப பபபம பபநிநி ஸ்ஸ்ஸ்ஸ்
 ஸ்ஸ்ஸ்ஸ் நிதபம கமபம கரிரிஸ

36. இதன் ஸ்வர முதலியவை:—
 (i) நவரோஜு—ஆதி
 (ii) தாந்தன தானன தாத்தா ந
 தானன தந்தன தாத்தா ந

## 19

பலத்திற்றன்னம் பலத்திற்பொன்னம்
பலத்திற்றுன்னு நலத்தனே
பலத்திற்பன்னும் பரத்திற்றுன்னும்
பரத்தின்மன்னுங் குலத்தனே.[37] அசு

## 20

நீயென்னப்ப னல்லவா நினக்குமின்னஞ் சொல்லவா
தாயின்மிக்க நல்லவா சர்வசித்தி வல்லவா.[38] அஎ

ஆதிநீதி வேதனே யாடனீடு பாதனே
வாதிஞான போதனே வாழ்கவாழ்க நாதனே.[39] அஅ

---

(iii) தாஸரி காகக ரிகமக ரீ
ஸகரிக ஸரிஸரி தநிஸரி ஸா

37. இதன் ஸ்வர முதலியவை:—
(i) தோடி—ரூபகம்
(ii) தனத்ததன்ன தனத்ததன்ன
தனத்ததன்ன தனத்தனு
(iii) பபபதாப பபபதாப மமபகாரி ஸஸரிகா
ஸஸரிகாம மபமகாரி ஸரிகஸரிநி ததநிஸா

38. இதன் ஸ்வர முதலியவை:—
(i) நவரோஜு—ரூபகம்
(ii) தானதத்த தய்யனு தனத்ததன்ன தய்யனு
தானதத்த தய்யனு தய்யதத்த தய்யனு
(iii) நிஸரிகரிஸ ஸஸநிதா ததஸரிரிக கமரிகா
ககமதபம பமகரீ ஸஸரிஸஸநி தஸநிஸா

39. இதன் ஸ்வர முதலியவை:—
(i) நவரோஜு—ரூபகம்
(ii) தானதான தானனு தானதான தானனு

சூதுமன்னு மிந்தையே
சூடலென்ன விந்தையே
கோதுவிண்ட சிந்தையே
கோயில்கொண்ட தந்தையே.[40] அஅ-1

அன்புமுந்து சிந்தையே
அம்பலங்கொள் விந்தையே
இன்பமென்ப னெந்தையே
யெந்தைதந்தை தந்தையே. அஅ-2

ஞானசித்தி புரத்தனே நாதசத்தி பரத்தனே
வானமொத்த தரத்தனே வாதவித்தை வரத்தனே. அஅ-3

---

(iii) நிஸரிகரிஸ ஸஸநிதா ததஸரிரிக கமரிகா
கமபதபம பமகரீ ததகரிரிக ஸநிதஸா

40. இதன் ஸ்வர முதலியவை:—

(i) பூரி கல்யாணி—ரூபகம்

(ii) தானதன்ன தந்தனு தானதன்ன தந்தனு
தானதந்த தந்தனு தானதந்த தந்தனு

(iii) காமகாரி ஸாநிதா தாகரீக தகரிகா
காமதாஸ் நிதமகா ஸாரிகாம கரிதஸா

அஅ-1—அஅ-3 எண்களுடைய 3 நாமாவளிகளைச் சுட்டி அடியில் வரும் நாமாவளிகளை "ஆதி நீதி வேதனே" என்னும் நாமாவளியின் பின் சேர்த்துக் கொள்ளவும்' என்று ஓர் குறிப்பு "கரவு தவிர்ந்தான்" என்னும் நாமாவளியை அடுத்து இருக்கும் ஸ்ரீ இரத்தின முதலியார் அவர்களது 'குறிப்புப் புத்தகத்'திலும் பெரிய நோட்டிலும் எழுதப்பட்டிருக்கிறது.

## 21

இனித்துயர் படமாட்டேன் விட்டேனே
என்குரு மேலாணை யிட்டேனே.[41] அகூ

இனிப்பாடு படமாட்டேன் விட்டேனே
என்னப்பன் மேலாணை யிட்டேனே. கூய

சன்மார்க்கம் நன்மார்க்கம் நன்மார்க்கம்
சகமார்க்கம் துன்மார்க்கம் துன்மார்க்கம். கூக

நடராஜர் பாட்டே நறும்பாட்டு
ஞாலத்தார் பாட்டெல்லாம் வெறும்பாட்டு. கூஉ

சிதம்பரப் பாட்டே திருப்பாட்டு
ஜீவர்கள் பாட்டெல்லாந் தெருப்பாட்டு. கூந

அம்பலப் பாட்டே அருட்பாட்டு
அல்லாத பாட்டெல்லா மருட்பாட்டு. கூச

## 22

நாதப ரம்பர னே—பர
நாதசி தம்பர னே
நாததி கம்பர னே—தச
நாதசு தந்தர னே.[42] கூரு

---

41. இதன் ஸ்வர முதலியவை:—
    (i) பைரவி—மிச்ரசாபு
    (ii) தனத்தன தனதாத்தா தத்தா ஞ
    தந்தன தாஞஞ தத்தா ஞ
    (iii) மபாதாபா மகாரீகா மபாதாதா பா
    கமாபாமா கரீஸாநீ ஸரீகாரீ ஸா

42. இதன் ஸ்வர முதலியவை:—
    (i) கரஹரப்பிரிய—ரூபகம்
    (ii) தானத னந்தன ஞ—தன
    தானத னந்தன ஞ

ஞானந டத்தவ னே—பர
ஞானியி டத்தவ னே
ஞானவ ரத்தவ னே—சிவ
ஞானபு ரத்தவ னே. ௬௬

ஞானச பாபதி யே—மறை
நாடுச தாகதி யே
தீனத யாநிதி யே—பர
தேவியு மாபதி யே. ௬௭

## 23

நகப்பெருஞ் சோதி சுகப்பெருஞ் சோதி
நவப்பெருஞ் சோதி சிவப்பெருஞ் சோதி
அகப்பெருஞ் சோதி நடப்பெருஞ் சோதி
அருட்பெருஞ் சோதி யருட்பெருஞ் சோதி.[43] ௬௮

---

(iii) தநிஸ்ஸ் தஸ்நித பா—கம
பஸ்நித பமகம பா
பதநிஸ் நிதபம கா—கரி
ஸமகம கமகரி ஸா

43. ௬௮, ௬௯-வது நாமாவளிகளின் ஸ்வர முதலியவை:—

(i) தன்யாஸி—ஆதி

(ii) தனத்தன தான தனத்தன தான

(iii) பநிஸ்ஸ் நிதபம மபமக கமபா
கமதப மகரிஸ ஸரிஸநி ஸாஸா
நிஸகக மாமா கமபம கமபா
மபநிப மபகம கமபம பாபா
மபகம பநிநிப நிஸ்ரிநி ஸ்ாஸ்ா
ஸ்ம்க்ரி ஸ்ஸ்நிநி பபநிநி ஸ்ாஸ்ா
மபஸ்ஸ் நிதபம மபமக கமபா
கமதப மகரிஸ ஸரிஸநி ஸாஸா

உமைக்கொரு பாதி கொடுத்தருணீதி
உவப்புறு வேதி நவப்பெரு வாதி
அமைத்திடு பூதி யகத்திடு மாதி
அருட்சிவ ஜோதி யருட்சிவ ஜோதி.[43] ௧௧

## 24

தங்குறுவம்பு மங்கநிரம்பு சங்கமியம்பு நங்கொழுகொம்பு
சங்கரசம்பு சங்கரசம்பு சங்கரசம்பு சங்கரசம்பு.[44] ௰

சந்தமியன்று அந்தணர்நன்று
சந்ததநின்று வந்தனமென்று
சந்திசெய்மன்று மந்திரமொன்று
சங்கரசம்பு சங்கரசம்பு. ௰௧

## 25

பசியாத வமுதே பகையாத பதியே
பகராத நிலையே பறையாத சுகமே
நசியாத பொருளே நலியாத வுறவே
நடராஜ மணியே நடராஜ மணியே.[45] ௰௨

---

44. இதன் ஸ்வர முதலியவை:—
(i) பிலஹரி—ஆதி
(ii) தந்தன தந்த தந்தன தந்த
தந்தன தந்த தந்தன தந்த
(iii) தரிஸ்நிததபா பபதபமகரீ
ஸரிகபமகரீ ஸரிககபாபா
கபநிததபமக ரிபமகரிஸரிக
ரிமகரிஸஸநித பதஸரிஸாஸா

45. இதன் ஸ்வர முதலியவை:—
(i) ஸௌரட்டி—ஜம்பை
(ii) தனதான தனணா தனதான தனணா
தனதான தனணா தனதான தனணா

புரையாத மணியே புகலாத நிலையே
புகையாத கனலே புதையாத பொருளே
நரையாத வரமே நடியாத நடமே
நடராஜ நிதியே நடராஜ நிதியே. ௩

சிவஞான நிலையே சிவபோக நிறைவே
சிவபோக வுருவே சிவமான உணர்வே
நவநீத மதியே நவநாத கதியே
நடராஜ பதியே நடராஜ பதியே. ௪

தவயோக பலமே சிவஞான நிலமே
தலையேறும் அணியே விலையேறு மணியே
நவவார நடமே சுவகார புடமே
நடராஜ பரமே நடராஜ பரமே. ௫

துதிவேத வுறவே சுகபோத நறவே
துனிதீரு மிடமே தனிஞான நடமே
நதியார நிதியே யதிகார பதியே
நடராஜ குருவே நடராஜ குருவே. ௬

வயமான வரமே வியமான பரமே
மனமோன நிலையே கனஞான மலையே
நயமான உரையே நடுவான வரையே
நடராஜ துரையே நடராஜ துரையே. ௭

## 26

பரநடஞ்சிவ சிதம்பரநடமே பதிநடஞ்சிவ சபாபதிநடமே
திருநடனம்பர குருநடமே சிவநடமம்பர நவநடமே.[46] அ

---

(iii) பநிஸ்ாநி ஸ்நிஸ்ா பஸ்நீத பமபா
பதநீத பமரீ ரிரிமாம பமபா
ரிமபாத நிதநீ நிஸ்நீத பமகா
ரிமநீத பமரீ ஸரிஸாநி ஸநிஸா

## 27

அகரசபாபதி சிகரசபாபதி அனகசபாபதி கனகசபாபதி
மகரசபாபதியுகரசபாபதி வரதசபாபதிசரதசபாபதி.[47] ௱௯

அமலசபாபதி அபயசபாபதி
அமுதசபாபதி அகிலசபாபதி
நிமலசபாபதி நிபுணசபாபதி
நிலயசபாபதி நிபிடசபாபதி. ௱௰

## 28

நீடிய வேதந் தேடிய பாதம்
நேடிய கீதம் பாடிய பாதம்
ஆடிய போதம் கூடிய பாதம்
ஆடிய பாதம் ஆடிய பாதம்.[48] ௱௧௧

---

46. இதன் ஸ்வர முதலியவை:—

(i) கரஹரப்பிரிய—ஆதி

(ii) தனதனந்தன தனந்தனதனனு
தனதனந்தன தனுதனதனனு
தனதனதந்தன தனதனனு
தனதனதந்தன தனதனனு

(iii) பதநிஸாஸ்ரீ ஸ்நிஸ்நிஸ்ஸ்ரீ
பதநிஸாநித பதாநிதபமகா
ரிகமபபாமக ரிகமககரீ
ஸரிகமமாகரி கமகரிஸஸஸா

47. இதன் ஸ்வர முதலியவை :—

(i) ஹமீர் கல்யாணி—ஆதி

(ii) தனனதனுதன தனனதனுதன
தனனதனுதன தனனதனுதன

(iii) ததஸரிகாகரி ககககாமக
ரிகமகரிஸதப தநிஸரிஸாஸஸ

சாக்கிய வேதந் தேக்கிய பாதம்
தாக்கிய ஏதம் போக்கிய பாதம்
சோக்கிய வாதம் ஆக்கிய பாதம்
தூக்கிய பாதந் தூக்கிய பாதம். ௱௧௨

ஏன்றிய சூதந் தோன்றிய பாதம்
ஈன்றிய நாதம் ஆன்றிய பாதம்
ஓன்றிய பூதம் ஞான்றிய பாதம்
ஊன்றிய பாதம் ஊன்றிய பாதம். ௱௧௩

சஞ்சிதம் வீடும் நெஞ்சித பாதம்
தஞ்சித மாகும் சஞ்சித பாதம்
கொஞ்சித மேவும் ரஞ்சித பாதம்
குஞ்சித பாதம் குஞ்சித பாதம். ௱௧௪

எண்ணிய நானே திண்ணிய ஞானேன்
எண்ணிய வாறே நண்ணிய பேறே
புண்ணிய ஞானேன் அண்ணிய ஞானேன்
புண்ணிய வானே புண்ணிய வானே. ௱௧௫

தொத்திய சீரே பொத்திய பேரே
துத்திய பாவே பத்திய நாவே
சத்தியம் நானே நித்திய ஞானேன்
சத்திய வானே சத்திய வானே. ௱௧௬

---

48. இதன் ஸ்வர முதலியவை :—

(i) தோடி—ஆதி

(ii) தானன தானம் தானன தானம்

(iii) தநிஸ்நி நிததா பதபம தபதா
பதநித பபதம பதநிநி ஸ்ாஸ்ா
பதபத நிநிஸ்ா நிதபம் கமபா
மநிதப மகரீ ஸரிஸநி ஸாஸா

எம்புலப் பகையே எம்புலத் துறவே
எங்குலத் தவமே எங்குலச் சிவமே
அம்பினிற் கனலே அந்தணர்க் கிறையே
அம்பலத் தரசே அம்பலத் தரசே. ௱கஎ

இன்புடைப் பொருளே யின்சுவைக் கனியே
எண்குணச் சுடரே யிந்தகத் தொளியே
அன்புடைக் குருவே அம்புயற் கிறையே
அம்பலத் தமுதே அம்பலத் தமுதே. ௱கஅ

## 29

பதியுறு பொருளே பொருளுறு பயனே
பயனுறு நிறைவே நிறைவுறு வெளியே
மதியுறு மமுதே யமுதுறு சுவையே
மறைமுடி மணியே மறைமுடி மணியே.[49] ௱ககூ

அருளுறு வெளியே வெளியுறு பொருளே
அதுவுறு மதுவே மதுவுறு சுவையே
மருளறு தெருளே தெருளுறு மொளியே
மறைமுடி மணியே மறைமுடி மணியே. ௱உய

தருவளர் நிழலே நிழல்வளர் சுகமே
தடம்வளர் புனலே புனல்வளர் நலனே
திருவள ருருவே யுருவள ருயிரே
திருநட மணியே திருநட மணியே. ௱உக

---

49. இதன் ஸ்வர முதலியவை:—

(i) ஹமீர் கல்யாணி—ஆதி

(ii) தனதன தனனா தனதன தனனா
தனதன தனனா தனதன தனனா

(iii) ததஸரி கககா கமகரி ரிரிரீ
ஸஸகரி ஸநி தா தநிஸரி ஸஸஸா

உயிருறு முணர்வே யுணர்வுறு மொளியே
ஒளியுறு வெளியே வெளியுறு வெளியே
செயிரறு பதியே சிவநிறை நிதியே
திருநட மணியே திருநட மணியே. ௱உஉ

கலைநிறை மதியே மதிநிறை யமுதே
கதிநிறை கதிரே கதிர்நிறை சுடரே
சிலைநிறை நிலையே நிலைநிறை சிவமே
திருநட மணியே திருநட மணியே. ௱உ௩

மிகவுயர் நெறியே நெறியுயர் விளைவே
விளைவுயர் சுகமே சுகமுயர் பதமே
திகழுய ருயர்வே வுயருய ருயர்வே
திருநட மணியே திருநட மணியே. ௱உ௪

இயல்கிளர் மறையே மறைகிள ரிசையே
இசைகிளர் துதியே துதிகிள ரிறையே
செயல்கிள ரடியே யடிகிளர் முடியே
திருநட மணியே திருநட மணியே. ௱உ௫

புரையறு புகழே புகழ்பெறு பொருளே
பொருளது முடிபே முடிவுறு புணர்வே
திரையறு கடலே கடலெழு சுதையே
திருநடமணியே திருநடமணியே. ௱உ௬

நிகழ்நவநிலையே நிலையுயர்நிலையே
நிறையருணிதியே நிதிதருபதியே
திகழ்சிவபதமே சிவபதசுகமே
திருநடமணியே திருநடமணியே. ௱உ௭

## 30

புத்தந்தரும் போதா வித்தந்தருந் தாதா
நித்தந்தரும் பாதா சித்தந்திரும் பாதா.[50] ௱உ௮

## 31

அம்பலவாணனை நாடினனே
  அவனடியாரொடு கூடினனே
தம்பதமாபுகழ் பாடினனே
  தந்தனவென்றுகூத் தாடினனே.[51] ௫௨௯

## 32

நாதாந்த நாட்டுக்கு நாயக ரே
நடராஜ ரேசபா நாயக ரே.[52] ௫௩0

நான்சொல்லு மிதுகேளீர் சத்திய மே
நடராஜ வெளில்வரும் நித்திய மே. ௫௩௧

---

50. இதன் ஸ்வர முதலியவை:—
  (i) காம்போஜி—ஆதி
  (ii) தத்தந்தனந் தாதா தத்தந்தனந் தாதா
  (iii) பதஸ்நி நீத பததப மாப
  பஸ்நித பமக பமகரி ஸஸஸ

இதன் ஸ்வர முதலியவை:—
  (i) ஹமீர் கல்யாணி—ஆதி
  (ii) தந்தன தானன தானதன
  தன தன தானன தானதன
  தந்தன தானன தானதன
  தந்தன தந்தன தானதன
  (iii) தாஸரிகாகக ரிகமகரீ ரிகமகரிஸநித நிஸகரிஸா

52. இதன் ஸ்வர முதலியவை:—
  (i) காம்போஜி—ஆதி
  (ii) தானந்த தானன தானத ன
  தனதான தானன தானத ன
  (iii) தஸ்ாநி தஸ்நித தஸ்நித பா
  பநிதப மகரிஸ ரிபமக ஸா

நல்லோ ரெல்லார்க்குஞ்ச பாபதி யே
நல்வர மீயுந்த யாநிதி யே. ௱௩௨

நடராஜர் தந்நட நன்னட மே
நடம்புரி கின்றது மென்னிட மே. ௱௩௩

சிவகாம வல்லிக்கு மாப்பிள்ளை யே
திருவாள ஞனவன் சீர்ப்பிள்ளை யே. ௱௩௪

சிவகாம வல்லியைச் சேர்ந்தவ னே
சித்தெல்லாஞ் செய்திடத் தேர்ந்தவ னே. ௱௩௫

இறவா வரந்தரு நற்சபை யே
எனமறை புகழ்வது சிற்சபை யே. ௱௩௬

என்னிரு கண்ணுளி ருந்தவ னே
இறவா தருளும ருந்தவ னே. ௱௩௭

## 33

நனந்தலைவீதி நடந்திடுசோதி
நலங்கொளிரீதி நடம்புரிநீதி
தினங்கலையோதி சிவந்தருமோதி
சிதம்பரஜோதி சிதம்பரஜோதி.[53] ௱௩௮

## 34

அஞ்சோடஞ்சவை யேலாதே அங்கோடிங்கென லாகாதே
அந்தோவெந்துயர் சேராதே அஞ்சோகஞ்சுக மோவாதே
தஞ்சோபங்கொலை சாராதே சந்தோடஞ்சிவ மாமீதே
சம்போசங்கர மாதேவா சம்போசங்கர மாதேவா.[54] ௱௩௯

53. இதன் ஸ்வர முதலியவை:—
(i) ஹமீர் கல்யாணி—ஆதி
(ii) தனந்தனதான தனந்தனதான
தனந்தனதான தனந்தனதான
(iii) ததஸரிகாக ரிபமகரீரி
நிஸகரிஸநித தநிஸரிஸாஊ

## 35

அம்பலத்தொருநட முருநடமே
அருநடமொருநடந் திருநடமே
எம்பலத்தொருநடம் பெருநடமே
இதன்பரத்திடுநடங் குருநடமே.[55] ௱௪௰

## 36

ஓதவடங் காதுமடங் காதுதொடங் காது
ஓகையொடுங் காதுதடுங் காதுநடுங் காது
சூதமலங் காதுவிலங் காதுகலங் காது
ஜோதிபரஞ் ஜோதிசுயஞ் ஜோதிபெருஞ்ஜோதி.[56] ௱௪௧

---

54. இதன் ஸ்வர முதலியவை :—
(i) ஹமீர் கல்யாணி—ஆதி
(ii) தந்தாதந்தன தானா தந்தாதந்தன தானா
(iii) தாஸாரிரிகக மபமமகா
ரிகமகரிஸநிஸ நிஸககரீ
ததகரிஸஸஸநி தநிஸநிதா
தகரிகஸரிஸநி தநிஸரிஸா

55. இதன் ஸ்வர முதலியவை :—
(i) ஆநந்த பைரவி—ஆதி
(ii) தந்தனதனதன தனதனா
தனதனதனதன தனதனா
(iii) பபபபநிதபப மதபமகா
மதபமகரிஸநி பமகரிஸா

56. இதன் ஸ்வர முதலியவை:—
(i) கல்யாணி—ஜம்பை
(ii) தானதனந் தானதனந் தானதனந் தான

ஏதமுயங் காதுகயங் காதுமயங் காது
　ஏறியிறங் காதுவுறங் காதுகறங் காது
சூதமிணங் காதுபிணங் காதுவணங் காது
　ஜோதிபரஞ் ஜோதிசுயஞ் ஜோதிபெருஞ் ஜோதி. ௩௪௨

## 37

வாமஜோதி சோமஜோதி வானஜோதி ஞானஜோதி
　மாகஜோதி யோகஜோதி வாதஜோதி நாதஜோதி
ஏமஜோதி வியோமஜோதி யேறுஜோதி வீறுஜோதி
　ஏகஜோதி யேகஜோதி யேகஜோதி யேகஜோதி.[57] ௩௪௩

## 38

கலகந்தரு மவலம்பன கதிநம்பல நிதமுங்
　கனகந்தரு மணிமன்றுறு கதிதந்தரு ளுடலஞ்
சலசந்திர னெனநின்றவர் தழுவும்பத சரணம்
　சரணம்பதி சரணஞ்சிவ சரணங்குரு சரணம்.[58] ௩௪௪

---

(iii) தநிஸ்ஸ்நி நிதபபம மபதபம கமபா
　　மபததப பதநிநித தநிஸ்நித நிநிஸா
　　தநிஸ்ரிக் ம்க்ரிஸ்நி தக்ரிஸ்நி தநிதா
　　நிஸ்ரிஸ்நி நிதபமப கமபகரி ஸரிஸா

57. இதன் ஸ்வர முதலியவை:—
　(i) பியாக்—த்ருச்ர நடை, ஆதி.
　(ii) தானதான தானதான தானதான தானதான
　(iii) பாபபாப பாபபாப மாதபாம காககாக
　　ரீகமாக ரீரிஸாஸ ஸாகரீக ஸாரிஸாஸ
　　பாமபாம பாமபாம மாதபாத பாமகாக
　　ரீபமாப காமரீக ஸாகரீக ஸாரிஸாஸ

58. இதன் ஸ்வர முதலியவை:—
　(i) ப்யாக்—ரூபகம்
　(ii) தனதந்தன தனதந்தன தனதந்தன தனனம்

எனதென்பது நினதென்பது இதுவென்றுணர் தருணம்
இனமொன்றது பிறிதன்றென விசைகின்றது பரமம்
தனதென்பது மனதென்பது ஜகமென்றனை சரணம்
சரணம்பதி சரணஞ்சிவ சரணங்குரு சரணம். ௫௪௫

பதநம்புறு பவரிங்குறு பவசங்கட மறநின்றிடு
பரமம்பொது நடமென்றனை துளநம்புற வருளம்பர
சிதகுஞ்சித பதாஞ்சித சிவசுந்தர சிவமந்திர
சிவசங்கர சிவசங்கர சிவசங்கர சிவசங்கர. ௫௪௬

## 39

அம்பல வாணர்தம் மடியவ ரே
அருளா சாள்மணி முடியவ ரே.[59] ௫௪௭

## 40

கையறவி லாதுநடுக் கண்புருவப் பூட்டு
கண்டுகளி கொண்டுதிறந் துண்டுநடு நாட்டு
ஐயர்மிக வுய்யும்வகை யப்பர்விளை யாட்டு
ஆடுவதென் றேமறைகள் பாடுவது பாட்டு.[60] ௫௪௮

---

(iii) கமபாபம கமபாபம கமதாபத பமகா
ரிபமாமப கமகாகம ரிகரீரிக ஸரிஸா
கமபாஸ்ஸ் ஸ்நிதாதநி பதபாபத பமகா
பமபாமப மகமாரிக ரிகமாகரி ஸரிஸா

59. இதன் ஸ்வர முதலியவை:—
(i) ஹமீர் கல்யாணி—ஆதி
(ii) தந்தன தானன தனதன ஞ
தனதன தானன தனதன ஞ
(iii) தாஸரி காகக ரிகமக ரீ
த்தகரி ஸநிதப தநிஸரி ஸா

## 41

அருட்பெருஞ்சோதியைக் கண்டேனே
ஆனந்தத்தெள்ளமு துண்டேனே
இருட்பெருமாயையை விண்டேனே
எல்லாஞ்செய்சித்தியைக் கொண்டேனே.[61] ௱௪௧

---

60. இதன் ஸ்வர முதலியவை:—

(i) பியாக்—ஜம்பை

(ii) தானதன தானதன தந்ததன தாத்த
தந்ததன தந்ததன தந்ததன தாத்த
தானதன தய்யதன தத்ததன தாத்த
தானதன தானதன தானதன தாத்த

(iii) காபமப காபமப காதபத பமகா
ரீபமப காமரிக ஸாகரிக ஸரிஸா
காமபத ஸ்ாஸ்ஸ்ரி பாஸ்நித பமபா
காதபத மாபகம ஸாகரிக ஸரிஸா

இந்த ௧௪அ-வது நாமாவளியும் ௧௩0-௧௩௯ எண்களுடைய 10 நாமாவளிகளும் இங்கு அச்சிட்டிருப்பது போன்ற வரிசையிலேயே எல்லாக் கையெழுத்துப் பிரதிகளிலும் காணப்படுகின்றன. ஆனால், வேலூர் ஸ்ரீ பத்மநாப முதலியாரவர்கள் 1885-ம் வருஷத்தில் ஆறாந் திருமுறையை முதல் முதலாக அச்சிட்ட போது இந்த 11 நாமாவளிகளையும் தனிப்படுத்தி யிருக்கிறார்கள்.

61. இதன் ஸ்வர முதலியவை :—

(i) ஹமீர் கல்யாணி—ஆதி

(ii) தனதனதானன தந்தானா
தானனதய்யன தந்தானா
தனதனதானன தந்தானா
தனாந்ததத்தன தந்தானா

(iii) ததஸரிகாகக ரிபமகரீ
ஸரிகரிஸநிதப தநிஸரிஸா

## 42

கைவிட மாட்டானென் றூதூது சங்கே
 கனக சபையானென் றூதூது சங்கே
பொய்விடச் செய்தானென் றூதூது சங்கே
 பூசைப லித்ததென் றூதூது சங்கே.[62] ௬௰

பொன்னடி தந்தானென் றூதூது சங்கே
 பொன்னம் பலத்தானென் றூதூது சங்கே
இன்ன லறுத்தானென் றூதூது சங்கே
 என்னுள் ளமர்ந்தானென் றூதூது சங்கே. ௬௧

தூக்கந் தொலைத்தானென் றூதூது சங்கே
 துன்பந் தவிர்த்தானென் றூதூது சங்கே
ஏக்கங் கெடுத்தானென் றூதூது சங்கே
 ஏம சபையானென் றூதூது சங்கே. ௬௨

அச்சந் தவிர்த்தானென் றூதூது சங்கே
 அம்பல வாணனென் றூதூது சங்கே
இச்சை யளித்தானென் றூதூது சங்கே
 இன்பங் கொடுத்தானென் றூதூது சங்கே. ௬௩

என்னுயிர் காத்தானென் றூதூது சங்கே
 இன்பம் பலித்ததென் றூதூது சங்கே
பொன்னுருத் தந்தானென் றூதூது சங்கே
 பொற்சபை யப்பனென் றூதூது சங்கே. ௬௪

---

62. இதன் ஸ்வர முதலியவை:—

(i) கரஹரப்பிரிய—ஜம்பை

(ii) தய்யன தாத்தான தானன தந்தா
 தனன தனதான தானன தந்தா
 தய்யன தய்யான தானன தந்தா
 தான தனத்தன தானன தந்தா

(iii) தநிஸ்நிஸ் தநிஸ்நிஸ் தநிஸ்நித பமபா
 பதநிதப மபதபம கமபமக ககரீ
 ரிகமபத நிநிதபம கமபமக ரிகமா
 ரிகமபம கரிஸநித நிஸரிகம கரிஸா

சிவமாக்கிக் கொண்டானென் றூதூது சங்கே
சிற்றம் பலத்தானென் றூதூது சங்கே
நவநோக் களித்தானென் றூதூது சங்கே
நானவ னானேனென் றூதூது சங்கே. ௱௫௫

தெள்ளமு தானானென் றூதூது சங்கே
சிற்சபை யப்பனென் றூதூது சங்கே
உள்ள முவந்தானென் றூதூது சங்கே
உள்ள துரைத்தானென் றூதூது சங்கே. ௱௫௬

நாத முடியானென் றூதூது சங்கே
ஞான சபையானென் றூதூது சங்கே
பாத மளித்தானென் றூதூது சங்கே
பலித்தது பூசையென் றூதூது சங்கே. ௱௫௭

என்னறி வானானென் றூதூது சங்கே
எல்லாஞ்செய் வல்லானென் றூதூது சங்கே
செந்நிலை தந்தானென் றூதூது சங்கே
சிற்சபை யப்பனென் றூதூது சங்கே. ௱௫௮

இறவாமை யீந்தானென் றூதூது சங்கே
எண்ணம் பலித்ததென் றூதூது சங்கே
திறமே யளித்தானென் றூதூது சங்கே
சிற்றம் பலத்தானென் றூதூது சங்கே. ௱௫௯

கரவு தவிர்ந்ததென் றூதூது சங்கே
கருணை கிடைத்ததென் றூதூது சங்கே
இரவு விடிந்ததென் றூதூது சங்கே
எண்ணம் பலித்ததென் றூதூது சங்கே.[63] ௱௫௯-1

---

63. ௱௫௯-1-வது நாமாவளியைச் சுட்டி 'அடியில் வரும் நாமாவளியை "இறவாமை யீந்தான்" என்னும் நாமாவளிக்குப் பின்னால் சேர்க்கவும்' என்ற ஓர் குறிப்பு "நினைவு நினைவு". என்ற எ௫-6-வது நாமாவளியை அடுத்து இறுக்கம் ஸ்ரீ இரத்தின முதலியாரவர்கள் 'குறிப்புப் புத்தக'த்தில் எழுதப்பட்டிருக்கிறது.

எல்லாஞ்செய் வல்லானென் றூதூது சங்கே
  எல்லார்க்கும் நல்லானென் றூதூது சங்கே
எல்லா முடையானென் றூதூது சங்கே
  எல்லாமு மானானென் றூதூது சங்கே.[64] ௱௫௯-2

கருணா நிதியரென் றூதூது சங்கே
  கடவு ளவனேயென் றூதூது சங்கே
அருணா டகத்தானென் றூதூது சங்கே
  அம்பலச் சோதியென் றூதூது சங்கே. ௱௫௯-3

தன்னிக ரில்லானென் றூதூது சங்கே
  தலைவ னவனேயென் றூதூது சங்கே
பொன்னியல் வண்ணனென் றூதூது சங்கே
  பொதுநடஞ் செய்வானென் றூதூது சங்கே. ௱௫௯-4

ஆனந்த நாதனென் றூதூது சங்கே
  அருளுடை யப்பனென் றூதூது சங்கே
தானந்த மில்லானென் றூதூது சங்கே
  தத்துவச் சோதியென் றூதூது சங்கே. ௱௫௯-5

பொய்விட் டகன்றேனென் றூதூது சங்கே
  புண்ணிய னானேனென் றூதூது சங்கே
மெய்தொட்டு நின்றேனென் றூதூது சங்கே
  மேல்வெளி கண்டேனென் றூதூது சங்கே. ௱௫௯-6

---

அவர்களது பெரிய நோட்டில் அஃது முதற்கண்ணேயே அங்ஙனம் சேர்க்கப்பட்டதால் பின்வரும் நாமாவளிகளின் எண்கள் திரிபடைந்திருக்கின்றன. 64-வது அடிக் குறிப்பைப் பார்க்க.

64. ௱௫௯-2—௱௫௯-6 எண்களுடைய 5 நாமாவளிகளும் "அனந்த கோடி" என்ற ௱௮௭-3-வது நாமாவளிக்குப் பின் ஓர் துண்டாக எழுதப்பட்டிருந்தும், இவற்றைக் "கரவு தவிர்ந்தது" என்ற நாமாவளிக்குப்பின் சேர்க்கவேண்டும் என்று இருந்திருக்க வேண்டிய குறிப்பு பெயர்த்தெழுதத் தவறியது போலும். "ஊதூது சங்கே" என்ற முடிவையுடைய 16 நாமாவளிகளும் ஸ்ரீ வேங்கடேசய்யரவர்கள் பிரதியில் தனிப்படுத்தப்பட்டிருக்கின்றன.

## 43

சிற்சபையும் பொற்சபையுஞ் சொந்தமென தாச்சு
  தேவர்களு மூவர்களும் பேசுவதென் பேச்சு
இற்சமய வாழ்விலெனக் கென்னையினி யேச்சு
  என்பிறப்புத் துன்பமெலா மின்றொடே போச்சு.[65] ௱௬௰

ஐயரருட் சோதியர சாட்சியென தாச்சு
  ஆரணமு மாகமமும் பேசுவதென் பேச்சு
எய்யுலக வாழ்விலெனக் கென்னையினி யேச்சு
  என்பிறவித் துன்பமெலா மின்றொடே போச்சு. ௱௬௧

ஈசனரு ளாற்கடலி லேற்றதொரு வோடம்
  ஏறிக்கரை யேறினேன் இருந்ததொரு மாடம்
தேசுறுமம் மாடநடுத் தெய்வமணி பீடம்
  தீபவொளி கண்டவுடன் சேர்ந்தது சந் தோடம். ௱௬௨

மேருமலை யுச்சியில்வி ளங்குகம்ப நீட்சி
  மேவுமதன் மேலுலகில் வீறுமர சாட்சி
சேருமதிற் கண்டபல காட்சிகள்கண் காட்சி
  செப்பலரி தாமிதற்கென் னப்பனருள் சாட்சி. ௱௬௩

துரியமலை மேலுளதோர் சோதிவள நாடு
  தோன்றுமதி லையர்நடஞ் செய்யுமணி வீடு
தெரியுமது கண்டவர்கள் காணிலுயி ரோடு
  செத்தவரெ ழுவாரென்று கைத்தாளம் போடு. ௱௬௪

சொல்லா லளப்பரிய சோதிவரை மீது
  தூயதுரி யப்பதியில் நேயமறை யோது
எல்லாஞ்செய் வல்லசித்தர் தம்மையுறும் போது
  இறந்தா ரெழுவாரென்று புறந்தாரை யூது. ௱௬௫

---

65. ௱௬௰-௱௬௯ எண்களுடைய 10 நாமாவளிகளுக்கும், ௱௪௮-வது "கையறவிலாது" என்னும் நாமாவளிக்குக் குறித்திருக்கும் ஸ்வரம் முதலியவற்றைத் தழுவி அமைத்துக் கொள்க. 60-வது அடிக் குறிப்பில் கண்ட பிறவற்றையும் பார்க்க.

சிற்பொதுவும் பொற்பொதுவும் நானறிய லாச்சு
சித்தர்களு முத்தர்களும் பேசுவதென் பேச்சு
இற்பகரு மிவ்வுலகி லென்னையினி யேச்சு
என்பிறவித் துன்பமெலா மின்றோடே போச்சு. ௬௬

வலதுசொன்ன பேர்களுக்கு வந்ததுவாய்த் தாழ்வு
மற்றவரைச் சேர்ந்தவர்க்கும் வந்ததலைத் தாழ்வு
வலதுபுஜம் ஆடநம்பால் வந்ததருள் வாழ்வு
மற்றுநமைச் சூழ்ந்தவர்க்கும் வந்ததுநல் வாழ்வு. ௬௭

அம்பலத்தி லெங்களைய ராடியநல் லாட்டம்
அன்பொடுது தித்தவருக் கானதுசொல் லாட்டம்
வம்புசொன்ன பேர்களுக்கு வந்ததுமல் லாட்டம்
வந்ததலை யாட்டமன்றி வந்ததுபல் லாட்டம். ௬௮

நாத்திகஞ்சொல் கின்றவர்தம் நாக்குமுடை நாக்கு
நாக்குருசி கொள்ளுவதும் நாறியபிண் ணாக்கு
சீர்த்திபெறு மம்பலவர் சீர்புகன்ற வாக்கு
செல்வாக்கு நல்வாக்கு தேவர்திரு வாக்கு. ௬௯

## 44

எந்தா யென்றிடி லிந்தா நம்பத
மென்றீ யும்பர மன்று டம்பத
என்றோ டிந்தன நன்று மங்கண
வெங்கோ மங்கள வெஞ்சா நெஞ்சக
சந்தே கங்கெட நந்தா மந்திர
சந்தோ டம்பெற வந்தா ளந்தண
சம்போ சங்கர சம்போ சங்கர
சம்போ சங்கர சம்போ சங்கர.[66] ௭௦

---

66. இதன் ஸ்வர முதலியவை:—

(i) ஹமீர் கல்யாணி—ஆதி

(ii) தந்தா தந்தன தந்தா தந்தன

நஞ்சோ வென்றிடு நங்கோ பங்கெட
நன்றே தந்தனை நந்தா மந்தண
நம்பா நெஞ்சி னிரம்பா நம்பர
நம்பா நம்பதி யம்பா தம்பதி
தஞ்சோ வென்றவர் தஞ்சோ பந்தெறு
தந்தா வந்தன நுந்தா டந்திடு
சம்போ சங்கர சம்போ சங்கர
சம்போ சங்கர சம்போ சங்கர. ௱எக

## 45

சந்திர தரசிர சுந்தர சுரவர
தந்திர நவபத மந்திர புரநட
சங்கர சிவசிவ சங்கர சிவசிவ
சங்கர சிவசிவ சங்கர சிவசிவ.[67] ௱எஉ

---

(iii) தாஸா ரீகக காகா காமக
ரீகரி ஸாஸஸ ரீஸா ரீஸரி
ரீகரி ஸநிதப தாஸா ரீகக
காபம கரிஸநி ஸரிகரி ஸாஸஸ
காபப பபபப பதநித பபபப
மபமப கமகரி ஸரிகரி காகக
கதபத கமரிக ரிமகம ரிகஸரி
ஸகரிக ஸரிஸநி தநிஸரி ஸாஸஸ

67. இதன் ஸ்வர முதலியவை:—
(i) காம்போஜி—மிச்ரசாபு
(ii) தந்தன தனதன தந்தன தனதன
(iii) கமபத தததத பதநித பமபப
பதநித பபமக கமபம பபபப
மகபத ஸ்ஸ்ஸ்ஸ் ஸ்க்ஸ்ஸ் நிதபத
கபதஸ் நிதபம கரிஸநி பதஸஸ

## 46

வேதசிகாமணியே போதசுகோதயமே
மேதகுமாபொருளே யோதருமோர்நிலையே
நாதபராபரமே சூதபராவமுதே
ஞானசபாபதியே ஞானசபாபதியே.[68] ௱எ௩

ஏகசதாசிவமே யோகசுகாகரமே
ஏமபராநலமே காமவிமோசனமே
நாகவிகாசனமே நாதசுகோடணமே
ஞானசபாபதியே ஞானசபாபதியே. ௱எ௪

ஆயசதாகதியே நேயசதாசிவமே
சோமசிகாமணியே வாமவுமாபதியே
ஞாயபராகரமே காயபுராதரமே
ஞானசபாபதியே ஞானசபாபதியே. ௱எ௫

ஆரணஞாபகமே பூரணசோபனமே
ஆதியனாதியனே வேதியனாதியனே
நாரணனாதரமே காரணமேபரமே
ஞானசபாபதியே ஞானசபாபதியே. ௱எ௬

ஆகமபோதகமே யாதரவேதகமே
ஆமயமோசனமே யாரமுதாகரமே
நாகநடோதயமே நாதபுரோதயமே
ஞானசபாபதியே ஞானசபாபதியே. ௱எஎ

---

68. இதன் ஸ்வர முதலியவை:—
(i) புன்னாகவராளி—மிச்ரசாபு
(ii) தானன தானதனா தானன தானதனா
(iii) ஸரிகரிஸாரிஸநீ ஸரிகரிஸாரிநிஸா
நிஸமமமாமபகா கமதபகாரிநிஸா
ஸஸஸநிஸாரிஸநீ ஸஸமமமாமபகா
கமதபகாரிஸநீ ஸஸமமகாரிநிஸா

ஆடகநீடொளியே நேடகநாடரியே
ஆதிபுராதனனே வேதியபாபரனே
நாடகநாயகனே நானவஞானவனே
ஞானசபாபதியே ஞானசபாபதியே. ௲௭௮

ஆரியனேசிவனே ஆரணனேபவனே
ஆலயனேயரனே யாதரனேசுரனே
நாரியனேவரனே நாடியனேபரனே
ஞானசபாபதியே ஞானசபாபதியே. ௭௯

ஆதரவேதியனே ஆடகஜோதியனே
யாரணிபாதியனே யாரதவாதியனே
நாதவிபூதியனே நாமவஞாதியனே
ஞானசபாபதியே ஞானசபாபதியே. ௲௮௰

தேவகலாநிதியே ஜீவதயாநிதியே
தீனசகாநிதியே சேகரமாநிதியே
நாவலரோர்பதியே நாரியுமாபதியே
ஞானசபாபதியே ஞானசபாபதியே. ௲௮௧

ஆடியநாடகனே ஆலமராதியனே
ஆகமமேலவனே யாரணநாலவனே
நாடியகாரணனே நீடியபூரணனே
ஞானசபாபதியே ஞானசபாபதியே. ௲௮௨

## 47

விரைசேர் சடையாய் விடையா யுடையாய்
விகிர்தா விபவா விமலா வமலா
வெஞ்சோ பஞ்சார் நஞ்சார் கண்டா விம்பசி தம்பர னே.
அரைசே குருவே அமுதே சிவமே
அணியே மணியே அருளே பொருளே
அந்தோ வந்தா ளெந்தா யெந்தாய் அம்பல நம்பதியே[69] ௲௮௩

உருவே யுயிரே யுணர்வே யுறவே
உரையே பொருளே யொளியே வெளியே
ஒன்றே யென்றே நன்றே தந்தாய் உம்பரி னம்பர னே.
அருவே திருவே அறிவே செறிவே
அதுவே இதுவே அடியே முடியே
அந்தோ வந்தா ளெந்தா யெந்தாய் அம்பல நம்பதியே. ௬௪

## 48

வானசிற்கன மந்திரதந்திர வாதசிற்குண[69] மந்தணவந்தண
வாரசற்சன வந்திதசிந்தித வாமஅற்புத மங்கலமங்கள
ஞானசிற்சுக சங்கரகங்கர ஞாயசற்குண வங்கணஅங்கண
நாதசிற்பர வம்பரநம்பர நாததற்பர விம்பசிதம்பர.[70] ௬௫

பாரதத்துவ பஞ்சகரஞ்சக பாதசத்துவ சங்கஜபங்கஜ
பாலநித்திய வம்பகநம்பக பாசபுத்தக பண்டிதகண்டித
நாரவித்தக சங்கிதவிங்கித நாடகத்தவ நம்பதிநங்கதி
நாதசிற்பர நம்பரஅம்பர நாததற்பர விம்பசிதம்பர. ௬௬

---

69. இதன் ஸ்வர முதலியவை:—

(i) கரஹரப்பிரிய—ஆதி

(ii) தனனா தனனா தனனா தனனா
தனனா தனனா தனனா தனனா
தந்தா தந்தா தந்தா தந்தா தந்தன தந்தத னா

(iii) தநிஸா ஸ்நிஸா நிதநீ பமபா
பதநீ நிதபா மகமா ககரீ
ரிகமா கரிகா ரிஸரீ நிஸரீ ரிகமப கமகரி ஸா

70. இதன் ஸ்வர முதலியவை:—

(i) தோடி—மிச்ரசாபு

(ii) தானதத்தன தந்தனதந்தன
தானதத்தன தந்தனதந்தன

(iii) ஸாஸ்ஸாஸ்நி ஸ்ஸ்நிஸாஸ்ஸ்
நீநிநீநித தபமபாபப
மாமபதநித பதமபாகம
மாமகாகரி ஸரிநிஸாஸஸ

நாத பாலசு லோசன வர்த்தன
ஜாத ஜாலவி மோசன நிர்த்தன.[71] ௱அஎ

## 49

சிற்சபை யப்பனே யுற்றன னே
சித்தியெ லாஞ்செயப் பெற்றன னே.[72] ௱அஎ-1

பரம மந்த்ரசக ளாகள கரணு
படன தந்த்ரநிக மாகம சரணு.[73] ௱அஎ-2

---

71. இதன் ஸ்வர முதலியவை:—
   (i) தோடி—மிச்ரசாபு
   (ii) தான தானத ணுதன தத்தன
   (iii) பின்வரும் ஸ்வரத்தைத் தழுவிக் கொள்க
   ஸாஸ்ஸாஸ்நி ஸ்ஸ்நிஸ்ாஸ்ஸ்
   நீநிநீநித தபமபாபப
   மாமபதநித.பதமபாகம
   மாமகாகரி ஸாரிநிஸாஸஸ

72. இதன் ஸ்வர முதலியவை:—
   (i) சங்கராபரணம்—ஆதி
   (ii) தத்தன தத்தன தத்தத ணு
   தத்தன தாந்தன தத்தத ணு
   (iii) காகக ககமக ரீஸநி ரீ
   ஸாஸஸ ரீகக ஸரிஸநி ஸா

கஅஎ-1—கஅஎ-3 எண்களுடைய நாமாவளிகளைச் சுட்டி, இந்த மூன்றையும் கஅஎ-வதுக்குப் பிறகு சேர்க்கவும்' என்று ஓர் குறிப்பு "கருணு நிதியே'' என்ற ௱அஎ-8-வது நாமாவளிக்குப் பின், இறுக்கம் ஸ்ரீ இரத்தின முதலியாரவர்களது 'குறிப்புப் புத்த'கத்திலும், சிறிது திரிபோடு பெருநோட்டிலும் காணப் படுகிறது.

73. இதன் ஸ்வர முதலியவை:—
   (i) நவரோஜு—ஆதி
   (ii) தனன தந்ததன தானன தனணு

அனந்த கோடிகுண கரகர ஜோலிதா
அகண்ட வேதசி கரதர பலிதா.[74] ௱அஎ-3

## 50

பரிபூரண ஞானசி தம்பர
பதிகாரண நாதப ரம்பர.[75] ௱அஎ-4

சிவஞானப தாடக நாடக
சிவபோதப ரோகள கூடக.[76] ௱அஎ-5

---

(iii) ஸஸஸ கரிஸஸஸ தநிஸநி ததபா
தநிஸ ரிககரி ஸநிஸரி ஸநிஸா

74. இதன் ஸ்வர முதலியவை:—
(i) ஆனந்த பைரவி—ஆதி
(ii) தனந்த தானதன தனதன தனனு
தனந்த தானன தனதன தனனு
(iii) கமப பாபபம கமபம ககரீ
நிஸப மாகரீ ஸரிஸநி ஸரிஸா

75. இதன் ஸ்வர முதலியவை:—
(i) யதுகுல காம்போஜி—த்ருபுடை
(ii) தனதானன தானத னந்தன
(iii) பதஸ்ாஸ்ஸ் ஸ்ாநித பமமக
ஸரிமாகஸ ஸாஸஸ ஸஸஸஸ

கஅஎ-4—கஅஎ-8 எண்களுடைய 5 நாமாவளிகளும் "சித்தாடுகின்றார்" என்ற ௱அஎ-18-வது நாமாவளிக்குப் பிறகு இறுக்கம் ஸ்ரீ இரத்தின முதலியாரவர்கள் 'குறிப்புப் புத்த'கத்தில் எழுதப்பட்டிருகின்றன. இவற்றை இன்ன இடத்தில் சேர்க்க வேண்டும் என்ற குறிப்பு பெயர்த்தெழுதத் தவறியது போலும். இங்கு வரிசைப்படுத்தி யிருக்கிறபடியே இவை ஸ்ரீ வேங்கடேசய்யர் அவர்கள் பிரதியிலும் வேறு அன்பர் ஒருவர் பிரதியிலும் காணப்படுகின்றன.

சகல லோகபர காரக வாரக
சபள யோகசர பூரக தாரக.[77] ௱அஎ-6

சத்வ போதக தாரண தன்மய
சத்ய வேதக பூரண சின்மய.[78] ௱அஎ-7

## 51

கருணாநிதியே குணநிதியே
கதிமாநிதியே கலாநிதியே.
தருணபதியே சிவபதியே
தனிமாபதியே சபாபதியே.[79] ௱அஎ-8

---

76. இதன் ஸ்வர முதலியவை:—
(i) யதுகுல காம்போஜி—த்ருபுடை
(ii) தனதானன தானன தானன
(iii) பதஸ்ாஸ்ஸ் ஸ்ாநித பமமக
ஸரிமாகஸ ஸாஸஸ ஸஸஸஸ

77. இதன் ஸ்வர முதலியவை:—
(i) நாத நாமக்கிரியை—ஆதி
(ii) தனன தானதன தானன தானன
(iii) ரிகம மாமமக மாமக மாபம
ககம காரிரிஸ ஸாரிநி ஸாஸஸ

78. இதன் ஸ்வர முதலியவை:—
(i) நாத நாமக்கிரியை—ஆதி
(ii) தத்த தானன தானன தன்னன
(iii) மாக மாமக மாமக மாபம
காம காரிஸ ஸாரிநி ஸாஸஸ

79. இதன் ஸ்வர முதலியவை:—
(i) யதுகுல காம்போஜி—ஆதி
(ii) தனனதனன தனதனன
தனனதனன தனதனன
(iii) பதஸ்ாஸ்நிதப மபமககஸரீ
ஸஸரீபமகரி ஸாஸரிஸா

## 52

அம்பலவர் வந்தாரென்று சின்னம் பிடி
அற்புதஞ்செய் கின்றாரென்று சின்னம் பிடி
செம்பலனளித்தாரென்று சின்னம் பிடி
சித்திநிலை பெற்றதென்று சின்னம் பிடி.[80] ௲அஎ-9

சிற்சபையைக் கண்டோமென்று சின்னம் பிடி
சித்திகள்செய் கின்றோமென்று சின்னம் பிடி
பொற்சபை புகுந்தோமென்று சின்னம் பிடி
புந்திமகிழ் கின்றோமென்று சின்னம் பிடி. ௲அஎ-10

ஞானசித்தி புரமென்று சின்னம் பிடி
நாடகஞ்செய் யிடமென்று சின்னம் பிடி
ஆனசித்தி செய்வோமென்று சின்னம்பிடி
அருட்சோதி பெற்றோமென்று சின்னம் பிடி. ௲அஎ-11

---

80. இதன் ஸ்வர முதலியவை:—
(i) காபி—ஆதி
(ii) தந்ததன தந்தாதந்த தன்னந் தன
தத்ததன தந்தாதந்த தனனந் தன
தந்ததன தத்தாதந்த தன்னந் தன
தத்ததன தத்ததந்த தன்னந் தன
(iii) பபபப பதபம கமா கரீ
ஸமகம கமகரி ஸரீ நிஸா

கஅஎ-9—கஅஎ-18 எண்களுடைய 10 நாமாவளிகளும் "ஞானசித்தி புரத்தனே" என்ற அஅ-3-வது நாமாவளிக்குப் பின் இறுக்கம் ஸ்ரீ இரத்தின முதலியாரவர்கள் 'குறிப்புப் புத்தக'த்தி லும் பெருநோட்டிலும் பிள்ளையார்சுழி யிட்டுத் துண்டாக எழுதப் பட்டிருக்கின்றன. இவற்றை இன்ன இடத்தில் சேர்க்கவேண்டும் என்ற குறிப்பு பெயர்த்தெழுதத் தவறியது போலும். இவை ஸ்ரீ வேங்கடேசய்யரவர்கள் நோட்டில் தனிப்படுத்தப்பட்டும், ஸ்ரீ சுப்பிரமணிய பிள்ளையவர்கள், ஸ்ரீ சபாபதி சிவாசாரியரவர்கள் பிரதிகளில் தனியாகவும் காணப்படுகின்றன.

கொடிகட்டிக் கொண்டோமென்று சின்னம் பிடி
　கூத்தாடு கின்றோமென்று சின்னம் பிடி
அடிமுடியைக் கண்டோமென்று சின்னம் பிடி
　அருளமுத முண்டோமென்று சின்னம் பிடி. ௱அஎ-12

அப்பர்வரு கின்றாரென்று சின்னம் பிடி
　அற்புதஞ்செய் வதற்கென்று சின்னம் பிடி
செப்பநிலை பெற்றதென்று சின்னம் பிடி
　சித்திபுர மிடமென்று சின்னம் பிடி. ௱அஎ-13

தானேநா னானேனென்று சின்னம் பிடி
　சத்தியஞ்சத் தியமென்று சின்னம் பிடி
ஊனே புகுந்ததென்று சின்னம் பிடி
　ஒளிவண்ண மானதென்று சின்னம் பிடி. ௱அஎ-14

வேகாத காலுணர்ந்து சின்னம் பிடி
　வேகாத நடுத்தெரிந்து சின்னம் பிடி
சாகாத தலையறிந்து சின்னம் பிடி
　சாகாத கல்விகற்றுச் சின்னம் பிடி ௱அஎ-15

மீதான நிலையேறிச் சின்னம் பிடி
　வெட்டவெளி நடுநின்று சின்னம் பிடி
வேதாக மங்கடந்து சின்னம் பிடி
　வேதாந்தச் சித்தாந்த சின்னம் பிடி. ௱அஎ-16

பன்மார்க்க முங்கடந்து சின்னம் பிடி
　பன்னிரண்டின் மீதுநின்று சின்னம் பிடி
சன்மார்க்க மார்க்கமென்று சின்னம் பிடி
　சத்தியஞ்செய் கின்றோமென்று சின்னம் பிடி. ௱அஎ-17

சித்தாடு கின்றாரென்று சின்னம் பிடி
　செத்தா ரெழுவாரென்று சின்னம் பிடி
இத்தா ரணியிலென்று சின்னம் பிடி
　இதுவே தருணமென்று சின்னம் பிடி. ௱அஎ-18

53

அருட்சோதி யானேனென் றறையப்பா முரசு
அருளாட்சி பெற்றேனென் றறையப்பா முரசு
மருட்சார்பு தீர்ந்தேனென் றறையப்பா முரசு
மரணந்த விர்ந்தேனென் றறையப்பா முரசு.[81]

திருச்சிற்றம்பலம்

க. நாமாவளிகள் முற்றுப்பெற்றன.

---

81. இஃது ஓர் தனிப்பாடலாகச் சுவாமிகளின் ஆறும் திருமுறைப் பாடல்களினிடையில் காணப்படுகிறது. மேலேயுள்ள நாமாவளிகளுக்கும் இதற்கும் உள்ள ஒற்றுமையைக் கருதி இது இங்கே சேர்க்கப்பட்டிருக்கிறது.

மேலே குறித்தவற்றுள் இந் நாமாவளிக்குப் பொருத்தமான ஸ்வர முதலியவற்றைத் தெரிந்து தழுவிக்கொள்க.

82. தொடர்ந்த பேரெண்களுடைய 187 நாமாவளிகள் ஒருசேர எழுதப்பட்ட பின்னர் சிற்றெண்ணிட்ட மற்றைய 33 நாமாவளிகளும் 7 துண்டாக எழுதப்பட்டு, முன்போந்த எந்த எந்த நாமாவளி அல்லது நாமாவளித் தொகுதியைச் சார்ந்து தொடர்பாக அவ்வத் துண்டுகள் எழுதப்பட்டனவோ, அவ்வவற்றின் பின் அவ்வவற்றைச் சேர்த்தல் வேண்டும் என்னும் குறிப்புக்களோடு அவை எழுதப்பட்டிருப்பதால்—மேலோட்டமான பார்வைக்குக் கேவலம் எண் மாத்திரமான தொடர்புடையவெனத் தோன்றும்—இந்த 220 நாமாவளிகளை இங்கு அச்சிட்டிருக்கும் தொடர்ந்த எண்கொண்ட வரிசையில் ஓதுவதற்குரிய ஆன்மாநுபவ பூர்வமான ஓர் காரண காரியத் தொடர்பு இருத்தல் வேண்டும். சன்மார்க்க சாதகர்கள் உய்த்துணர்ந்து கொள்வார்களாக.

# ௨. கண்ணிகள்

## 1. பாங்கிமார் கண்ணி[83]

திருச்சிற்றம்பலம்

அம்பலத்தில் ஆடுகின்றார் பாங்கிமா ரே—அவர்
ஆட்டங்கண்டு நாட்டங்கொண்டேன் பாங்கிமா ரே.[84] க

ஆடுகின்ற சேவடிமேற் பாங்கிமா ரே—மிக
ஆசைகொண்டு வாடுகின்றேன் பாங்கிமா ரே. ௨

இன்பவடி வாய்ச்சபையிற் பாங்கிமா ரே—நட
மிட்டவர்மே லிட்டம்வைத்தேன் பாங்கிமா ரே. ௩

ஈனவுடற் கிச்சைவையேன் பாங்கிமா ரே —நட
னேசர்தமை யெய்தும்வண்ணம் பாங்கிமா ரே. ௪

உத்தமர்பொன் னம்பலத்தே பாங்கிமா ரே—இன்ப
உருவாகி ஓங்குகின்றார் பாங்கிமா ரே. ௫

---

83. இது சுவாமிகள் கையெழுத்திலுள்ள ஏட்டு மூலத்தில் உள்ளவாறு இங்கு அச்சிடப்பட் டிருக்கிறது.

84. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும்:—

(i) ஆநந்த பைரவி—ஆதி

(ii) அம் ப லத் தில் ஆ டு கின் றார்
பா பா பா பா பா பா பா மா

பாங் கி மா ரே—அ வர்
மா மக மாபம கரீ— க மா

ஆட் டங் கண் டு நாட் டங்
ஸா நி கா ரீ கா மா

கொண் டேன் பாங் கி மா ரே ||
பா பம மா மக மாபம காரீஸா ||

ஊனவுல கைக்கருதேன் பாங்கிமா ரே—மன்றில்
உத்தமருக் குறவாவேன் பாங்கிமா ரே. ௬

கற்பனையெல் லாங்கடந்தார் பாங்கிமா ரே—என்றன்
கற்பனைக்குட் படுவாரோ பாங்கிமா ரே. ௭

கண்டிலர்நான் படும்பாடு பாங்கிமா ரே—மூன்று
கண்ணுடையா ரென்பாரையோ பாங்கிமா ரே. ௮

கன்மனமெல் லாங்கரைப்பார் பாங்கிமா ரே—மனங்
கரையாரென் னளவிலே பாங்கிமா ரே. ௯

கள்ளமொன்று மறியேனன் பாங்கிமா ரே—என்னைக்
கைவிடவுந் துணிவாரோ பாங்கிமா ரே. ௰

கற்பழித்துக் கலந்தாரே பாங்கிமா ரே—இன்று
கைநழுவ விடுவாரோ பாங்கிமா ரே. ௧௧

கண்டவரெல் லாம்பழிக்கப் பாங்கிமா ரே—என்றன்
கன்னியழித் தேயொளித்தார் பாங்கிமா ரே. ௧௨

காமனைக்கண் ணலெரித்தார் பாங்கிமாரே—என்றன்
காதலைக்கண் டறிவாரோ பாங்கிமா ரே. ௧௩

காவலையெல் லாங்கடந்து பாங்கிமா ரே—என்னைக்
கைகலந்த கள்ளரவர் பாங்கிமா ரே. ௧௪

காணவிழைந் தேனவரைப் பாங்கிமா ரே—கொண்டு
காட்டுவாரை யறிந்திலேன் பாங்கிமா ரே. ௧௫

கிட்டவர வேண்டுமென்றார் பாங்கிமா ரே—நான்
கிட்டுமுன்னே யெட்டநின்றார் பாங்கிமா ரே. ௧௬

கின்னரங்கே ளென்றிசைத்தார் பாங்கிமா ரே—நான்
கேட்பதன்முன் சேட்படுத்தார் பாங்கிமா ரே. ௧௭

கிள்ளையைத்தூ தாவிடுத்தேன் பாங்கிமா ரே—அது
கேட்டுவரக் காணேனையோ பாங்கிமா ரே. ௧௮

கீதவகை பாடிநின்றார் பாங்கிமா ரே—அது
கேட்டுமதி மயங்கினேன் பாங்கிமா ரே. கக

கீழ்மைகுறி யாமலென்னைப் பாங்கிமா ரே—மனக்
கேண்மைகுறித் தாரேயன்று பாங்கிமா ரே. உ0

கீடமனை யேனென்னையும் பாங்கிமா ரே—அடிக்
கேயடிமை கொண்டாரன்று பாங்கிமா ரே. உக

குற்றமெல்லாங் குணமாகப் பாங்கிமா ரே—கொள்ளுங்
கொற்றவரென் கொழுநர்காண் பாங்கிமா ரே. உஉ

குற்றமொன்றுஞ் செய்தறியேன் பாங்கிமா ரே—என்னைக்
கொண்டுகுலம் பேசுவாரோ* பாங்கிமா ரே. உங

குஞ்சிதப்பொற் பாதங்கண்டாற் பாங்கிமா ரே—உள்ள
குறையெல்லாந் தீருங்கண்டீர் பாங்கிமா ரே. உச

கூற்றுதைத்த பாதங்கண்டீர் பாங்கிமா ரே—நங்கள்
குடிக்கெல்லாங் குலதெய்வம் பாங்கிமா ரே. உரு

கூறரிய பதங்கண்டு பாங்கிமா ரே—களி
கொண்டுநிற்க விழைந்தேனான் பாங்கிமா ரே. உசு

கூடல்விழைந் தேனவரைப் பாங்கிமா ரே—அது
கூடும்வண்ணங் கூட்டிடுவீர் பாங்கிமா ரே. உஎ

திருச்சிற்றம்பலம்

---

* சுவாமிகள் கைமெழுத்து மூலத்தில் "பேசுவாரே" என்றே இருக்கிறது. ஆனால், தொழுவூர் வேலாயுத முதலியார் அவர்களது 1867-ம் ஆண்டு முதற் பதிப்பில் இங்ஙனம் அச்சிட்டிருப்பதைப் பிறகு பிழை திருத்தத்தில் "பேசுவரோ" என்று திருத்தியிருக்கிறது.

## 2. வெண்ணிலாக் கண்ணி[85]

திருச்சிற்றம்பலம்

தன்னையறிந் தின்பமுற வெண்ணிலா வே—ஒரு
தந்திரநீ சொல்லவேண்டும் வெண்ணிலா வே.[86] க

நாதமுடி மேலிருந்த வெண்ணிலா வே—அங்கே
நானும்வர வேண்டுகின்றேன் வெண்ணிலா வே.[86] உ

---

85. இதற்கு இது வரையில் எவ்விதக் கையெழுத்துப் பிரதியும் கிடைக்கவில்லை. ஸ்ரீ தொழுவூர் வேலாயுத முதலியார் அவர்களது 1867-ம் வருஷத்திய முதற் பதிப்பின்படி இது இங்கு அச்சிடப்பட்டிருக்கிறது.

86. இவற்றின் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும்:—

(i) புன்னாகவராளி—ஆதி

(ii) தன் னை ய றிந் தின் ப மு ற |
ஸா ரி கா மக ரீ ஸ ரீ ஸ |

வெண் ணி லா | வே ஒ ரு ||
நீ நீ ஸா | ரீஸா ஸா ஸா ||

தந் தி ரம் நீ சொல் ல வேண் டும் |
ஸா ரி கா மக ரீ ஸ ரீ ஸ |

வெண் ணி லா | வே ||
நீ நீ ஸா | ரீஸா ||

நா த மு டி மே லி ருந் த |
மா மா மா மா மா மா மக மா |

வெண் ணி லா | வே அங் கே ||
பா பா பமபத | பா பா பா ||

நா னும் வ ர வேண் டு கின் றேன் |
கா கா ரீ கா மா பா பா தா |

வெண் ணி லா | வே ||
நீ தா பா | மாகாரீஸா ||

சச்சிதாநந் தக்கடலில் வெண்ணிலா வே—நானுந்
தாழ்ந்துவிழ வேண்டுகின்றேன் வெண்ணிலா வே. ௨

இராப்பகலில் லாவிடத்தே வெண்ணிலா வே—நானும்
இருக்கவெண்ணி வாடுகின்றேன் வெண்ணிலா வே. ௩

தேசுநிற மாய்நிறைந்த வெண்ணிலா வே—நானுஞ்
சிவமயம தாய்விழைந்தேன் வெண்ணிலா வே. ௪

போதநடு வூடிருந்த வெண்ணிலா வே—மலப்
போதமற வேண்டுகின்றேன் வெண்ணிலா வே. ௫

ஆருமறி யாமலிங்கே வெண்ணிலா வே—அரு
ளாளர்வரு வாரோசொல்லாய் வெண்ணிலா வே. ௬

அந்தரங்க சேவைசெய்ய வெண்ணிலா வே—யெங்கள்
ஐயர்வரு வாரோசொல்லாய் வெண்ணிலா வே. ௭

வேதமுடி மேலிருந்த வெண்ணிலா வே—மல
வேதையுள வேதுசொல்லாய் வெண்ணிலா வே. ௮

குண்டலிப்பால் நின்றிலங்கும் வெண்ணிலா வே—அந்தக்
குண்டலிப்பால் வேண்டுகின்றேன் வெண்ணிலா வே. ௯

ஆதியந்த மென்றுரைத்தார் வெண்ணிலா வே—அந்த
ஆதியந்த மாவதென்ன வெண்ணிலா வே. ௰

வித்திலாம லேவிளைந்த வெண்ணிலா வே—நீ தான்
விளைந்தவண்ண மேதுசொல்லாய் வெண்ணிலா வே. ௧௧

முப்பொருளு மொன்றதென்பார் வெண்ணிலா வே—அந்த
மூன்றுமொன்றாய் முடிந்ததென்ன வெண்ணிலா வே. ௧௨

நானதுவாய் நிற்கும்வண்ணம் வெண்ணிலா வே—ஒரு
ஞானநெறி சொல்லுகண்டாய் வெண்ணிலா வே. ௧௩

ஞானமய மாய்விளங்கும் வெண்ணிலா வே—என்னை
நானறியச் சொல்லுகண்டாய் வெண்ணிலா வே. ௧௪

வாசிவாசி யென்றுரைத்தார் வெண்ணிலா வே—அந்த
வாசியென்ன பேசுகண்டாய் வெண்ணிலா வே. கசு

ஐந்தலைப்பாம் பாட்டுகின்றார் வெண்ணிலா வே—அவர்
அம்பலத்தி னின்றதென்ன வெண்ணிலா வே. கஎ

ஓரெழுத்தி லைந்துண்டென்பார் வெண்ணிலா வே—அது
ஊமையெழுத் தாவதென்ன வெண்ணிலா வே. கஅ

அம்பலத்தி லாடுகின்றார் வெண்ணிலா வே—அவர்
ஆடுகின்ற வண்ணமென்ன வெண்ணிலா வே. கசு

அந்தரத்தி லாடுகின்றார் வெண்ணிலா வே—அவர்
ஆடும்வகை யெப்படியோ வெண்ணிலா வே. உ0

அணுவிலணு வாயிருந்தார் வெண்ணிலாவே—எங்கும்
ஆகிநின்ற வண்ணமென்ன வெண்ணிலா வே. உக

அண்டபகி ரண்டமெல்லாம் வெண்ணிலா வே—ஐயர்
ஆட்டமென்று சொல்வதென்ன வெண்ணிலா வே. உஉ

அம்பரத்தி லாடுகின்றார் வெண்ணிலா வே—என்னை
ஆட்டுகின்றா ரிம்பரத்தே வெண்ணிலா வே. உங

திருச்சிற்றம்பலம்

---

## 3. முறையீட்டுக் கண்ணி[87]

திருச்சிற்றம்பலம்

பற்று நினைத்தெழுமிப் பாவிமனத் தீமையெலாம்
உற்று நினைக்கிலெனக் கூடுருவிப் போகுதடா. [88] க

---

87. கிடைத்த ஐந்து கையெழுத்துப் பிரதிகளைக் கொண்டு இது இங்கு அச்சிட்டிருக்கிறது.

எள்ளேத நின்னிடத்தே யெண்ணுகின்ற தோறுமதை
உள்ளே நினைக்கிலெனக் கூடுருவிப் போகுதடா. உ

துன்னுகின்ற தீமைநின்பாற் சூழ்ந்துரைக்குந் தோறுமதை
உன்னுகின்ற போதிலெனக் கூடுருவிப் போகுதடா. ங

எள்ளுகின்ற தீமைநின்பா லெண்ணுகின்ற தோறுமதை
உள்ளுகின்ற போதிலெனக் கூடுருவிப்[89] போகுதடா. ச

மிக்க நிலைநிற்க விரும்பேன் பிழைகளெலாம்
ஒக்க நினைக்கிலெனக் கூடுருவிப் போகுதடா. ரு

கோகோ வெனுங்கொடியேன் கூறியகுற் றங்களெலாம்
ஓகோ நினைக்கிலெனக் கூடுருவிப் போகுதடா. சு

பித்து மனக்கொடியேன் பேசியவன் சொல்லையெலாம்
ஒத்து நினைக்கிலெனக் கூடுருவிப் போகுதடா. எ

தேர்ந்து தெளியாச் சிறியவனேன்[90] தீமையெலாம்
ஓர்ந்து நினைக்கிலெனக் கூடுருவிப் போகுதடா. அ

---

88. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும்:—

(i) எருகல காம்போஜி—ஆதி

(ii) பற் று நி னைத் | தெ ழு | மிப் ||
ஸ ரீ மா மா | கம பாம | பாபா ||

பா வி ம னத் | தீ மை | யெல் லாம் ||
பா தாப தா நிஸ்ாநித | தா நிதப | மாபாமபதா பா ||

உற் று நி னைக் | கி லெ | னக் கு ||
பா தா ஸ்ா ஸ்ா | ஸ்ாநித ஸ்நித | தா நிதபா ||

ஊ டு ரு விப் | போ கு | த டா ||
பா தா தாதப பமபா | பதஸ்ா தபா | பமகரி ரீ ||

89. உள்ளுருகி—பிரதிபேதம். பின்வரும் "பி-ம்" என்ற வற்றை எல்லாம் இங்ஙனமே கொள்க.

90. சிறுமைபினேன்—பி-ம்

நிறுத்தி யறியே னிகழ்த்தியவன் சொல்லை
உறுத்தி நினைக்கிலெனக் கூடுருவிப் போகுதடா. ௯

தோன்றி விரியுமனத் துட்டனேன் வன்பிழையை
ஊன்றி நினைக்கிலெனக் கூடுருவிப் போகுதடா. ௰

எண்ணினைப்ப தின்றிநினை யெள்ளி யுரைத்ததனை
உண்ணினைக்குந் தோறுமெனக் குள்ள முருகுதடா. ௧௧

கடையவனேன் வைதகடுஞ் சொன்னினைக்குந் தோறும்
உடையவனே யென்னுடைய வுள்ளமு ருகுதடா. ௧௨

பித்தனெனத் தீமை பிதற்றியதெண் ணுந்தோறும்
உத்தமனே யென்னுடைய வுள்ள முருகுதடா. ௧௩

மன்றுடையாய் நின்னருளை வைதகொடுஞ் சொற்பொருளில்
ஒன்றை நினைக்கிலெனக் குள்ள முருகுதடா. ௧௪

வெருவாம லையோ விளம்பியசொல் லெல்லாம்
ஒருவா நினைக்கிலெனக் குள்ள முருகுதடா. ௧௫

புலைக்கொடியேன் புன்சொற் புகன்றதெண் ணுந்தோறும்
உலைக்கண்மெழு காகவென்ற னுள்ள முருகுதடா. ௧௬

ஈடில்பெருந் தாயி லினியாய்நின் றண்ணருட்பால்
ஊடியசொல் லுன்னிலெனக் குள்ள முருகுதடா. ௧௭

புரைத்தமன வஞ்சப் புலையேன் றிருவருளை
உரைத்தபிழை யெண்ணிலெனக் குள்ள முருகுதடா. ௧௮

நாடி நினையா நவையுடையேன் புன்சொலெலாம்
ஓடி நினைக்கிலெனக் குள்ள முருகுதடா. ௧௯

வெப்பில் கருணை விளக்கனையா யென்பிழையை
ஒப்பி நினைக்கிலெனக் குள்ள முருகுதடா. ௨௰

அஞ்சலென்றாய் நின்பால் அடாதமொழி பேசியதை
அஞ்சி நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. ௨௧

மெய்யோர் சிறிதுமிலேன் வீண்மொழியா லூடியதை
ஐயோ நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. ௨௨

இத்தா ரணிக்குளெங்கு மில்லாத தீமைசெய்தேன்
அத்தா நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. ௨௩

பொய்யால் விரிந்த புலைமனத்தேன் செய்பிழையை
ஐயா நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. ௨௪

இப்பாவி நெஞ்சா லிழுக்குரைத்தே னுங்கதனை
அப்பா நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. ௨௫

எண்ணாக் கொடுமையெலா மெண்ணியுரைத் தேனதனை
அண்ணா நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. ௨௬

வெம்மான் மனத்து வினையேன் புகன்றதெலாம்
அம்மா நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. ௨௭

எச்சோடு மில்லா திழிந்தேன் பிழைகளெலாம்
அச்சோ நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. ௨௮

வந்தோடி நைமனத்து வஞ்சகனேன் வஞ்சமெலாம்
அந்தோ நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. ௨௯

ஓவாக் கொடியே னுரைத்த பிழைகளெலாம்
ஆவா நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. ௩௰

கரைசேர வெண்ணாக்[91] கடையேன் பிழையை
அரைசே நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. ௩௧

மருளுடையேன் வஞ்ச மனத்தீமை யெல்லாம்
அருளுடையா யெண்ணிலெனக் கஞ்சுங் கலங்குதடா. ௩௨

ஈண்டவனேன் வன்சொல் இயம்பியதை யென்னுடைய
ஆண்டவனே யெண்ணிலெனக் கஞ்சுங் கலங்குதடா. ௩௩

---

91. வொண்ணா—பி-ம்

வற்புதனேன் வஞ்ச மனப்பிழையை மன்றாடும்
அற்புதனே யெண்ணிலெனக் கஞ்சுங் கலங்குதடா. ௩௪

துன்புடையேன் புன்மொழிகள் தூற்றியதை யெவ்வுயிர்க்கும்
அன்புடையா யெண்ணிலெனக் கஞ்சுங் கலங்குதடா. ௩௫

கொதிக்கின்ற வன்மொழியாற் கூறியதை யையோ
மதிக்கின்ற தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. ௩௬

சினங்கொண்ட போதெல்லாஞ் செப்பிய வன்சொல்லை
மனங்கொள்ளுந் தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. ௩௭

செய்தநன்றி யெண்ணாச் சிறியவனே னின்னருளை
வைததெண்ணுந் தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. ௩௮

பொய்த்த மனத்தேன் புகன்றகொடுஞ் சொற்களெலாம்
வைத்துநினைக் குந்தோறும் வாளிட் டறுக்குதடா. ௩௯

பொங்குகின்ற தீமை புகன்றதெலா மெண்ணியெண்ணி
மங்குகின்ற தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. ௪௰

ஊடுகின்ற சொல்லா லுரைத்ததனை யெண்ணியெண்ணி
வாடுகின்ற தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. ௪௧

உயங்குகின்றேன் வன்சொல் லுரைத்ததனை யெண்ணி
மயங்குகின்ற தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. ௪௨

சொல்விளைவு நோக்காதே[92] சொன்னதெலா மெண்ணுதொறும்
வல்வினையே னுள்ளகத்தே வாளிட் டறுக்குதடா. ௪௩

மேல்விளைவு நோக்காதே வேறுசொன்ன தெண்ணுதொறும்
மால்வினையே னுள்ளகத்தே வாளிட் டறுக்குதடா. ௪௪

விஞ்சகத்தா லந்தோ விளம்பியதை யெண்ணுதொறும்
வஞ்சகத்தே னுள்ளகத்தே வாளிட் டறுக்குதடா. ௪௫

---

92. சொல்விளைவு ஞேக்காதே—பி-ம்

விலங்குகின்ற நெஞ்ச விளைவையெண் ணுந்தோறும்[93]
மலங்குகின்றே னுள்ளகத்தே[94] வாளிட் டறுக்குதடா. ௪௬

தூய்மையிலா வன்மொழியாற்
சொன்னவெலா[95] மெண்ணுதொறும்
வாய்மையிலே னுள்ளகத்தே
வாளிட் டறுக்குதடா. ௪௭

கலிக்கின்ற வஞ்சக் கருத்தைக் கருதி[96]
வலிக்கின்ற தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. ௪௮

நீட்டுகின்ற வஞ்ச நெடுஞ்சொலெலா நெஞ்சகத்தே
மாட்டுகின்ற தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. ௪௯

பொருந்துகின்ற வஞ்சப் புதுமையெண்ணி[97] யையோ
வருந்துகின்ற தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. ௫௰

வெருவிக்கும் வஞ்ச வெறுஞ்சொலெலாம் நெஞ்சில்
வருவிக்குந் தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. ௫௧

ஊடும்போ துன்னை யுரைத்தவெலா நாயடியேன்
நாடும்போ தெல்லாமென் னாடி நடுங்குதடா. ௫௨

வாய்க்கடையா வன்சொல்[98] வழங்கியவென் வன்மனத்தை
நாய்க்கடையே னெண்ணுதொறும் நாடி நடுங்குதடா. ௫௩

கன்றி யுரைத்த கடுஞ்சொற் கடுவையெலாம்
நன்றியிலே னெண்ணுதொறு நாடி நடுங்குதடா. ௫௪

---

93. தொறுமங்தோ—பி-ம். 94. உள்ளிடத்தே—பி-ம்.

95. சொன்னதெலா—பி-ம். இங்ஙனமே பின்வரும் இடங்களிலெல்லாம் கொள்க.

96. கருத்தாற் கருதியதை—பி-ம்.

97. ஆசைப் புதுமையெண்ணி யெண்ணியையோ—பி-ம்.

98. வெஞ்சொல்—பி-ம்.

புன்மையினல் வன்சொற் புகன்றபுலைத் தன்மையெலாம்
நன்மையிலேன் எண்ணுதொறும் நாடி நடுங்குதடா. ௫௫

ஊனெண்ணும் வஞ்ச வுளத்தா லுரைத்தவெலாம்
நானெண்ணுந் தோறுமென்ற னாடி நடுங்குதடா. ௫௬

வஞ்சனையா லஞ்சாது வன்சொல் புகன்றவெலாம்
நஞ்சனையே னெண்ணுதொறும் நாடி நடுங்குதடா. ௫௭

கோணநெடு நெஞ்சக் குரங்காற்[99] குதித்தவெலாம்
நாணமிலே னெண்ணுதொறும் நாடி நடுங்குதடா. ௫௮

ஊனமிலா நின்னை யுரைத்தகொடுஞ் சொல்லையெலாம்
ஞானமிலே னெண்ணுதொறும் நாடி நடுங்குதடா. ௫௯

எற்றே மதியிலியே னெண்ண துரைத்ததனைச்
சற்றே நினைத்திடினுந் தாது கலங்குதடா. ௬௰

இனியேது செய்வே னிகழ்ந்துரைத்த சொல்லைத்
தனியே நினைத்திடினுந்[100] தாது கலங்குதடா. ௬௧

நாயனையே னெண்ணம லங்கியவன் சொல்லையெலாம்
தாயனையா யெண்ணுதொறும் தாது கலங்குதடா. ௬௨

நிற்குருகா வஞ்ச நினைவால் நினைத்தவெலாஞ்
சற்குருவே யெண்ணுதொறுந் தாது கலங்குதடா. ௬௩

வெந்நரகில் வீழும் வினைவால்[101] விளம்பியதை
என்னரசே யெண்ணுதொறு மென்னை விழுங்குதடா. ௬௪

நன்கறியேன் வாளா[102] நவின்ற நவையனைத்தும்
என்குருவே யெண்ணுதொறும் என்னை விழுங்குதடா. ௬௫

ஆவ தறியா தடியே னிகழ்ந்தகொடும்
பாவ நினைக்கிற் பகீரென் றலைக்குதடா. ௬௬

---

99. குரங்காக்—பி-ம் 100. நினைத்திடிலென்—பி-ம்
101. வினையால்—பி-ம் 102. வாயால்—பி-ம்

வந்திப் பறியேன் வழங்கியவன் சொல்லையெலாம்
சிந்திக்கி லுள்ளே திடுக்கிட் டழுங்குதடா. ௯௭

குற்ற நினைத்த கொடுஞ்சொலெல்லா மென்னுளத்தே
பற்ற நினைக்கிற் பயமா யிருக்குதடா. ௯௮

எள்ளுகின்ற தீமை யெடுத்துரைத்தே னுங்கதனை
விள்ளுகின்ற தோறுமுள்ளம் வெந்து வெதும்புதடா. ௯௯

திருச்சிற்றம்பலம்

---

## 4. திருவடிக் கண்ணி[103]

திருச்சிற்றம்பலம்

மின்னிடையாள் காண விளங்குமன்றி லாடுகின்றாய்
என்னுடையா யுன்ற னிணையடிதான் நோவாதா.[104]

அன்னமுதே யின்ப மலியமன்றி லாடுகின்றாய்
என்னமுதே யுன்ற னிணையடிதான் நோவாதா.

---

103. கிடைத்த மூன்று கையெழுத்துப் பிரதிகளைக்கொண்டு இது இங்கு அச்சிட்டிருக்கிறது.

104. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும்:—

(i) நீலாம்பரி—ஆதி

(ii) மின் னி டை யா ள் கா ண வி |
கம பா மக மா பா பா பா பா |

ளங் கு மன் றி | லா டு கின் றாய் ||
ஸா ஸா ஸா நி | நீநி ஸ்நி பம மா ||

என் னு டை யா யுன் றன் |
கம பா பா பா பநி ஸ்நிபாமா |

இ ணை ய டி தான் | நோ வா தா ||
க ம பா மா கா | கரி ரிப மா ||

நண்ணியமெய் யன்பர் நயக்கமன்றி லாடுகின்றாய்
புண்ணியனே யுன்றனது பொன்னடிதான் நோவாதா. ௩

அன்பரின்பங் கொள்ளநட மம்பலத்தே யாடுகின்றாய்
இன்புருவா முன்ற னிணையடிதான் நோவாதா. ௪

நூலுணர்வா நுண்ணுணர்வி னேக்கநட மாடுகின்றாய்
மாலறியா வுன்றன் மலர்ப்பாதம் நோவாதா. ௫

எள்ளலற வம்பலத்தே யின்பநட மாடுகின்றாய்
வள்ளலே யுன்றன் மலரடிதான்[105] நோவாதா. ௬

சைவ நிலைத்துத் தழைத்தோங்க வாடுகின்றாய்
தெய்வ மணியே திருவடிதான் நோவாதா. ௭

எல்லாரு மின்புற் றிருக்கநட மாடுகின்றாய்
வல்லாரின் வல்லாய் மலர்ப்பாதம் நோவாதா. ௮

அவமே கழிந்தின்ப மன்பர்கொள வாடுகின்றாய்
சிவமே நினது திருவடிதான் நோவாதா. ௯

தற்பரமா மன்றிற் றனிநடன மாடுகின்றாய்
சிற்பரமே யுன்றன் திருமேனி நோவாதா. ௰

வில்வவேர் மாலை மிளிர்ந்தசைய வாடுகின்றாய்
செல்வமே யுன்றன் திருமேனி[106] நோவாதா. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

105. மலர்ப்பாதம்—பி-ம். 106. திருவடிதான்—பி-ம்.

## 5. பேரன்புக் கண்ணி[107]

திருச்சிற்றம்பலம்

கற்றதென் றுஞ் சாகாத கல்வியென்று கண்டுகொண்டுன்
அற்புதச்சிற் றம்பலத்தி லன்புவைத்தேன் ஐயாவே[108] க

ஈடணைகள் நீக்கிநமக் கின்பளிக்கு மென்றுமன்றில்
ஆடுந் திருவடிக்கே ஆசைவைத்தேன் ஐயாவே. உ

நானந்த மெய்தா நலம்பெறவே யெண்ணிமன்றில்
ஆனந்த நாடகத்துக் கன்புவைத்தேன் ஐயாவே. ௩

வாடலறச் சாகா வரங்கொடுக்கு மென்றுமன்றில்
ஆடலடிப் பொன்மலர்க்கே அன்புவைத்தேன் ஐயாவே. ௪

பொற்புறவே பொன்ருப் பொருளளிக்கு மென்றுமன்றில்
அற்புதப்பொற் சேவடிக்கே அன்புவைத்தேன் ஐயாவே. ௫

---

107. கிடைத்த இரண்டு கையெழுத்துப் பிரதிகளைக் கொண்டு இது இங்கு அச்சிட்டிருக்கிறது.

108. கிடைத்த இரு கையெழுத்துப் பிரதிகளிலும் முற்றிலும் 'அய்யாவே' என்றே இருக்கிறது.

இக்கண்ணியின் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும்:—.

(i) காமவர்த்தனி—ஆதி

(ii) கற்ற தென் றுஞ் சா கா த |
கா மா பா பா பா பா |

கல் வி யென் று | கண் டு கொண் டுன் ||
பா தா நீ ஸ்ா | தநி ஸ்நி தா பா ||

அற் பு தச் சிற் றம் ப லத் தில் |
பா ஸ்நி தா பாம கா பம கா ரி |

அன் பு வைத் தேன் | ஐ யா வே ||
ஸரி கா கா காரி | கம பா பம ||

ஈனமறுத் தென்றும் இறவாமை நல்குமென்றே
ஞானமணி மன்றிடத்தே நண்புவைத்தேன் ஐயாவே. ௬

ஓர்துணைநின் பொன்னடியென் றுன்னுகின்றே னுன்னையன்றி
ஆர்துணையும் வேண்டேனென் அன்புடைய ஐயாவே. ௭

பூசைசெய்து பெற்றவுன்றன் பொன்னடிமே லன்றியயல்
ஆசையொன்று மில்லையெனக் கன்புடைய ஐயாவே. ௮

இச்சைநின்மே லன்றியெனக் கொள்ளளவும் வேறுமொன்றில்
இச்சையிலை நின்னாணை யென்னருமை ஐயாவே. ௯

எப்படிநின் னுள்ள மிருக்கின்ற தென்னளவில்
அப்படிநீ செய்கவெனக் கன்புடைய ஐயாவே. ௰

எவ்வண்ணம் நின்கருத்திங் கென்னளவி லெண்ணியதோ
அவ்வண்ணஞ் செய்கவெனக் கன்புடைய ஐயாவே. ௧௧

தேசுறுநின் றண்ணருளாந் தெள்ளமுதங் கொள்ளவுள்ளே
ஆசைபொங்கு கின்றதெனக் கன்புடைய ஐயாவே. ௧௨

மாசறுநின் பொன்னருளா மாமணிபெற் றுடவுள்ளே
ஆசைபொங்கு கின்றதெனக் கன்புடைய ஐயாவே. ௧௩

நாசமிலா நின்னருளாம் ஞானமருந் துண்ணவுள்ளே
ஆசைபொங்கு கின்றதெனக் கன்புடைய ஐயாவே. ௧௪

திருச்சிற்றம்பலம்

௨. கண்ணிகள் முற்றுப் பெற்றன.

# ௩. ஆடற் பாடல்கள்

## 1. சிலதா ஸம்வாதம்[109]

திருச்சிற்றம்பலம்

தண்மதி யொண்முகப் பெண்மணி யே—உன்னைத்
  தான்கொண்ட நாயக ராரே டி
அண்மையிற் பொன்னணி யம்பலத் தாடல்செய்
  ஐய ரமுத ரழக ரடி.[110] ௧

செங்கயற் கண்மட மங்கைநல் லாய்—உன்றன்
  செங்கை பிடித்தவ ராரே டி
அங்கய லாரன்று பொன்னம்ப லத்தெங்கள்
  ஆநந்தத் தாண்டவ ராஜ னடி. ௨

---

109. 85-வது அடிக்குறிப்பைப் பார்க்க. இதுவும் அப்படியே.

110. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும்:—

(i) ஹுஸானி—மிச்ர சாபு

(ii) தண் ம தி | யொண் மு கப் |
பா பா பா | பா பா ம |

பெண் ம ணி | யே உன் னைத் |
பா நீ த | தா பா மா |

தான் கொண் ட | நா ய க | ரா ரே டி ||
பா நீ த | நீ ஸ் ரீ | ஸ்ரி ஸ்நி தாபா ||

அண் மை யிற் | பொன் ம ணி |
ரீ ரீ கா | மா பா பா |

அம் ப லத் | தா டல் செய் |
மா பா மா | கா ரீ ஸா |

ஐ ய ர | மு த ர | ழ க ர டி ||
ரீ மா கா | ரீ க ரீ | ஸ ஸ ஸ ஸா ||

சன்னற் சுவைமொழி மின்னிடை யாய்—உன்னைக்
  கன்னி யழித்தவ ராரேடி
உன்னற் கரியபொன் னம்பலத் தாடல்செய்
  உத்தம ரானந்த சித்த ரடி. ௩

தீமையி லாதபெண் மாமயி லே—உன்னைச்
  சேர்ந்து கலந்தவ ராரேடி
தாமமு டிக்கணிந் தம்பலத் தேயின்பத்
  தாண்டவஞ் செய்யுஞ் சதுர ரடி. ௪

அன்னந டைப்பெண்க ளாரமு தே—உன்னை
  அன்பிற் புணர்ந்தவ ராரேடி
துன்ன லுடையின ரம்பலத் தேநின்ற
  தூய திருநட ராய ரடி. ௫

காரள கப்பெண் சிகாமணி யே—உன்றன்
  கற்பை யழித்தவ ராரேடி
பேரள வைக்கடந் தம்பலத் தேநின்ற
  பித்தர் பராநந்த நித்த ரடி. ௬

திருச்சிற்றம்பலம்

---

## 2. வினா உத்தரம்

திருச்சிற்றம்பலம்

### (1)

ஆகமமு மாரணமு மரும்பொருளென் றுருங்குரைத்த
ஏகவுரு வாகிநின்று ரிவராார்சொல் தோழி
மாகநதி முடிக்கணிந்து மணிமன்று ளநவரத
நாகமணி மிளிரநட நவில்வார்காண் பெண்ணே.[111]

---

111. 85-வது அடிக்குறிப்பைப் பார்க்க. இதுவும் அப்படியே. இதன் இராகதாளம்: மோஹனம்—ஆதி.

(2)

அருளாலே அருளிறை அருள்கின்ற பொழுதங்
கனுபவ[112] மாகின்ற தென்னடி தாயே
தெருளாலே மருளாலே தெரியாது தெரியும்
திருநட இன்பம்என் றறியாயோ மகளே.[113]  க

அறிவாலே அறிவினை அறிகின்ற பொழுதங்
கனுபவ மாகின்ற தென்னடி தாயே
செறிவாலே பிறிவாலே தெரியாது தெரியும்
திருவருள் உருவம்என் றறியாயோ மகளே.[113]

திருச்சிற்றம்பலம்

---

112. அங்கே யனுபவ—பி-ம். இப்படியே அடுத்த பாட்டிலும்.

113. இவ்விரண்டு பாடலும் கிடைத்த ஓர் ஏட்டுப் பிரதியையும் மூன்று நோட்டுப் பிரதிகளையும் கொண்டு இங்கு அச்சிடப்பட்டிருக்கின்றன.

முதற் பாட்டின் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும்:—

(i) மோஹனம்—ஜம்பை

(ii) அரு | ளாலே || அரு | ளிறை ||
ஸரி | காக || கக | காரி ||

அருள் | கின்ற || பொழு | தங் ||
கக | பாப || கப | கா, ||

கனு | பவ || மா | கின்ற ||
ஸரி | காரி || ஸா | ஸாஸ ||

தென் | னடி || தா | யே ||
ரீ | ககா || பா | பா, ||

தெரு | ளாலே || மரு | ளாலே ||
பப | காக || கக | பாப ||

தெரி | யாது || தெரி | யும் ||
கப | தாத || ஸ்ஸ் | ஸாஸ் ||

## 3. நடேசர் கொம்மி[114]

திருச்சிற்றம்பலம்

### பல்லவி

கொம்மிய டிப்பெண்கள் கொம்மி யடி — இரு
கொங்கைகு லுங்கவே கொம்மி யடி.[115]

### அநுபல்லவி

நம்மை யாளும்பொன் னம்பல வாணனை
நாடிக் கொம்மிய டியுங்க டி — பதம்
பாடிக் கொம்மிய டியுங்க டி. கொம்மி

### சரணங்கள்

காம மகற்றிய தூய னடி — சிவ
காம சவுந்தரி நேய னடி
மாமறை யோதுசெவ் வாய னடி — மணி
மன்றெனு ஞானவா காய னடி. கொம்மி க

ஆநந்தத் தாண்டவ ராஜ னடி — நமை
ஆட்கொண் டருளிய தேஜ னடி
வானந்த மாமலை மங்கை மகிழ் — வடி
வாளன டிமண வாள னடி. கொம்மி உ

---

திரு | நட || இன் | பமென் ||
கப | தாஸ் || தப | காரி ||
றறி | யாயோ || மக | ளே ||
ஸரி | காக || கப | ரீ, ||

114. 85-வது அடிக்குறிப்பைப் பார்க்க. இதுவும் அப்படியே.

115. இக் கொம்மியின் இராக தாள ஸ்வரங்களை 110-வது அடிக்குறிப்பில் கண்டவற்றைத் தழுவி அமைத்துக் கொள்க.

நல்லைக் கனிவிக்குஞ் சுத்த னடி—முடி
கங்கைக் கருளிய கர்த்த னடி
தில்லைச்சி தம்பர சித்த னடி—தேவ
சிங்கம டியுயர் தங்க மடி. கொம்மி ௩

பெண்ணொரு பால்வைத்த மத்த னடி—சிறு
பிள்ளைக் கறிகொண்ட பித்த னடி
நண்ணி நமக்கரு ளத்த னடி—மிக
நல்லன டியெல்லாம் வல்ல னடி. கொம்மி ௪

அம்பலத் தாடல்செய் ஐய னடி—அன்பர்
அன்புக் கெளிதரு மெய்ய னடி
தும்பை முடிக்கணி தூய னடி—சுயஞ்
சோதிய டிபரஞ் சோதி யடி. கொம்மி ௫

திருச்சிற்றம்பலம்

## 4. சண்முகர் கொம்மி[116]

திருச்சிற்றம்பலம்

குறவர் குடிசை நுழைந்தாண் டி—அந்தக்
கோமாட்டி யெச்சில் விழைந்தாண் டி
துறவர் வணங்கும் புகழாண் டி—அவன்
தோற்றத்தைப் பாடி யடியுங்க டி.[117] க

மாமயி லேறி வருவாண் டி—அன்பர்
வாழ்த்த வரங்கள் தருவாண் டி
தீமையி லாத புகழாண் டி—அவன்
சீர்த்தியைப் பாடி யடியுங்க டி. உ

116. கிடைத்த இரண்டு கையெழுத்துப் பிரதிகளைக் கொண்டு இது இங்கு அச்சிட்டிருக்கிறது. தனிப் பாசுரப்பகுதி 17-வது அடிக்குறிப்பைப் பார்க்க.

117. இக்கொம்மியின் இராக தாள ஸ்வரங்களை 110-வது அடிக்குறிப்பில் கண்டவற்றைத் தழுவி அமைத்துக் கொள்க.

பன்னிரு தோள்க ளுடையாண் டி—கொடும்
பாவிகள் தம்மை யடையாண் டி
என்னிரு கண்க ளனையாண் டி—அவன்
ஏற்றத்தைப் பாடி யடியுங்க டி. ௫

வேங்கை மரமாகி நின்றாண் டி—வந்த
வேடர் தமையெலாம் வென்றாண் டி
தீங்குசெய் சூரனைக் கொன்றாண் டி—அந்த
தீரனைப் பாடி யடியுங்க டி. ௬

சீர்திகழ் தோகை மயின்மேலே—இளஞ்
செஞ்சுடர் தோன்றுந் திறம்போலே
கூர்வடி வேல்கொண்டு நம்பெரு மான்—வருங்
கோலத்தைப் பாருங்கள் கோதையர் காள். ௭

ஆறு முகங்களிற் புன்சிரிப் பும்—இரண்
டாறு புயந்திக ழற்புத மும்
வீறு பரஞ்சுடர் வண்ணமு மோர்—திரு
மேனியும் பாருங்கள் வெள்வளை காள். ௬

ஆனந்த மான வமுத னடி—பர
மானந்த நாட்டுக் கரச னடி
தானந்த மில்லாச் சதுர னடி—சிவ
சண்முகன் நங்குரு சாமி யடி. ௭

வேத முடிசொல்லு நாத னடி—சதுர்
வேத முடிதிகழ் பாத னடி
நாத வடிவுகொள் நீத னடி—பர
நாதங் கடந்த நலத்த னடி. ௮

தத்துவத் துள்ளே யடங்காண் டி—பர
தத்துவ மன்றித் துடங்காண் டி
சத்துவ ஞான வடிவாண் டி—சிவ
சண்முக நாதனைப் பாடுங்க டி. ௯

சச்சிதா னந்த வுருவாண் டி—பர
தற்பர போகந் தருவாண் டி
உச்சிதா ழன்பர்க் குறவாண் டி—அந்த
உத்தம தேவனைப் பாடுங்க டி. ௰

அற்புத மான அழக னடி—துதி
அன்பர்க் கருள்செய் குழக னடி
சிற்பர யோகத் திறத்த னடி—அந்தச்
சேவகன் சீர்த்தியைப் பாடுங்க டி. ௧௧

சைவந் தழைக்கத் தழைத்தாண் டி—ஞான
சம்பந்தப் பேர்கொண் டழைத்தாண் டி
பொய்வந்த வுள்ளத்திற் போகாண் டி—அந்தப்
புண்ணியன் பொன்னடி போற்றுங்க டி. ௧௨

வாசி நடத்தித் தருவாண் டி—ஒரு
வாசியி லிங்கே வருவாண் டி
ஆசில் கருணை யுருவாண் டி—அவன்
அற்புதத் தாண்மல ரேத்துங்க டி. ௧௩

இராப்பக லில்லா விடத்தாண் டி—அன்பர்
இன்ப வுளங்கொள் நடத்தாண் டி
அராப்பளி யீந்த திடத்தாண் டி—அந்த
அண்ணலைப் பாடி யடியுங்க டி. ௧௪

ஒன்றிரண் டான வுளவாண் டி—அந்த
ஒன்றிரண் டாகா அளவாண் டி
மின்றிரண் டன்ன வடிவாண் டி—அந்த
மேலவன் சீர்த்தியைப் பாடுங்க டி. ௧௫

திருச்சிற்றம்பலம்

---

## 5. பந்தாடல்[118]

திருச்சிற்றம்பலம்

(1)

### பல்லவி

ஆடேடி பந்து ஆடேடி பந்து
ஆடேடி பந்து ஆடேடி பந்து.[119]

### சரணங்கள்

வாழியென் தோழியென் வார்த்தைகே ளென்றும்
மரணமில் லாவரம் நான்பெற்றுக் கொண்டேன்
சூழியற் செஞ்சுடர் தோற்றுறு கீழ்பால்
தூய்த்திசை நோக்கினேன் சீர்த்திகழ் சித்தி
ஊழிதோ றூழிநின் றுடுவென் நீயும்
உன்னுதி யேலிங்கே மன்னரு ளாணை
ஆழி கரத்தணிந் தாடேடி பந்து
அருட்பெருஞ் சோதிகண் டாடேடி பந்து. ஆடேடி க

118. இதன் முதற்பாடல் கிடைத்த ஐந்து கையெழுத்துப் பிரதிகளைக் கொண்டு இங்கு அச்சிடப்பட்டிருக்கிறது.

119. அருட்பெருஞ் ஜோதிகண் டாடேடி பந்து—பி-ம்
இப்பாட்டின் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும்:—

(i) பேகட—ஆதி

(ii) ஆ டே டி பந்து | ஆ டே | டி பந் து ||
மா காமா பாமா தா பா | பாதநீ தாபா | மா கரி ஸா ||

ஆ டே டி பந் து | ஆ டே | டி பந் து ||
ஸாஸநி தாபா ஸாஸா கா ரீ | கா பமா | தபமா கரி ஸா ||

வா ழி யென் தோ ழி |
நா பா மா காரீ ஸா |

யென் வார்த் தை | கே ளென் றும் ||
ஸா ஸாமா கா | மா பாமாதா பா ||

ம ர ண மில் லா வ ரம் |
மா மா கா மா பாம தா பா |

இசையாமற் போனவ ரெல்லாரு நாண
  இறவாப் பெருவரம் யான்பெற்றுக் கொண்டேன்,
வசையாது மில்லாத மேற்றிசை நோக்கி
  வந்தேனென் றோழிநீ வாழிகாண் வேறு
நசையாதே யென்னுடை நண்பது வேண்டில்
  நன்மார்க்க மாஞ்சுத்த சன்மார்க்கந் தன்னில்
அசையாமல் நின்றங்கே யாடேடி பந்து
  அருட்பெருஞ் சோதிகண் டாடேடி பந்து. ஆடேடி உ

இன்பாலே யுலகத்தா ரெல்லாருங் காண
  இறவாப் பெருவரம் யான்பெற்றுக் கொண்டேன்
தென்பாலே நோக்கினேன் சித்தாடு கின்ற
  திருநா ளிதுதொட்டுச் சேர்ந்தது தோழி
துன்பாலே யசைந்தது நீக்கியென் னோடே
  சுத்தசன் மார்க்கத்தி லொத்தவ ளாகி
அன்பாலே யறிவாலே யாடேடி பந்து
  அருட்பெருஞ் சோதிகண் டாடேடி பந்து. ஆடேடி ங

சதுமறை[120] யாகம சாத்திர மெல்லாஞ்
  சந்தைப் படிப்புநஞ் சொந்தப் படிப்போ
விதுநெறி சுத்தசன் மார்க்கத்திற் சாகா
  வித்தையைக் கற்றனனுத்தர மெனுமோர்

---

நான் பெற்றுக் | கொண் டேன் ||
நீ தாபா | ஸ்ா ஸ்ா ||

சூ ழி யற் செஞ் சு டர் |
ஸ்ா ரி ஸ் க்ம ரீ ஸ்ா |

தோற் று று | கீழ் பால் ||
தாரீ ஸ்ா ரீ | ஸ்நிஸ்ா தாபா ||

தூய்த் தி சை நோக் கி னேன் |
தாரீ ரீஸ்ா ரீ ஙீ தா பா |

சேர்த் தி கழ் | சித் தி ||
பாதநீ தா பா | மாமா கரீஸ்ா ||

பொதுவளர் திசைநோக்கி வந்தன னென்றும்
  பொன்றாமை வேண்டிடி லென்றோழி நீதான்
அதுவிது வென்னாம லாடேடி பந்து
  அருட்பெருஞ் சோதிகண் டாடேடி பந்து. ஆடேடி ச

தப்பாலே சகத்தவர்[121] சாவே துணிந்தார்
  தாமுள நாணநான் சாதலைத் தவிர்த்தே[122]
எப்பாலு மெக்காலு மிருத்தலே பெற்றேன்
  என்றோழி வாழிநீ யென்னோடு கூடி[123]
துப்பாலே விளங்கிய சுத்தசன் மார்க்கச்
  சோதியென் றோதிய வீதியை விட்டே
அப்பாலே போகாம லாடேடி பந்து
  அருட்பெருஞ் சோதிகண் டாடேடி பந்து. ஆடேடி ரு

வெங்கேத மரணத்தை விடுவித்து விட்டேன்
  விச்சையெ லாங்கற்றேன் னிச்சையின் வண்ணம்
எங்கேயு மாடுதற் கெய்தினேன் தோழி
  யென்மொழி சத்தியம் என்னோடுங் கூடி
இங்கே களிப்பது நன்றிந்த வுலகோ
  ஏதக் குழியி விழுக்கு மதனால்
அங்கேபா ராதேநீ யாடேடி பந்து
  அருட்பெருஞ் சோதிகண் டாடேடி பந்து. ஆடேடி சா

சிவமே பொருளென் றறிவா லறிந்தேன்
  செத்தாரை மீட்கின்ற திண்மையைப் பெற்றேன்
உவமேய மில்லாத வொருநிலை தன்னில்
  ஒன்றிரண் டென்னாத வுண்மையி னின்றேன்[124]
தவமே புரிகின்றா ரெல்லாருங் காணத்
  தயவா லழைக்கின்றேன் கயவாதே தோழி
அவமேபோ காதென்னோ டாடேடி பந்து
  அருட்பெருஞ் சோதிகண் டாடேடி பந்து. ஆடேடி எ

---

120. சதுர்மறை—பி-ம். 121. உலகவர்—பி-ம்.
122. தவிர்ந்தேன், தவிர்த்தேன்—பி-ம்.
123. என்னோடிங்கூடி—பி-ம். 124. நின்றே—பி-ம்.

துஞ்சாத நிலையொன்று சுத்தசன் மார்க்கச்
  சூழலி லுண்டது சொல்லள வன்றே[125]
எஞ்சாத அருளாலே யான்பெற்றுக் கொண்டேன்
  இறந்தாரை யெல்லா மெழுப்புதல் வல்லேன்
விஞ்சாத அறிவாலே தோழிநீ யிங்கே
  வேதுசெய் மரணத்துக் கெதுசெய்வோ மென்றே
அஞ்சாம லென்னோடே யாடேடி பந்து
  அருட்பெருஞ் சோதிகண் டாடேடி பந்து. ஆடேடி அ

ஈரமு மன்புங்கொண் டின்னருள் பெற்றேன்
  என்மார்க்க மிறவாத சன்மார்க்கந் தோழி
காரமு மிகுபுளிச் சாரமுந் துவர்ப்புங்
  கைப்போடே யுப்போடே கசப்போடே கூட்டி
ஊரமு துண்டுநீ யொழியாதே யந்தோ
  ஊழிதோ றூழியு முலவாமை நல்கும்
ஆரமு துண்டென்னோ டாடேடி பந்து
  அருட்பெருஞ் சோதிகண் டாடேடிபந்து. ஆடேடி கூ

துதிசெயு முத்தருஞ் சித்தருங் காணச்
  சுத்தசன் மார்க்கத்தி லுத்தம ஞானப்
பதிசெயுஞ் சித்திகள் பற்பல வாகப்
  பாரிடை வானிடைப் பற்பல காலம்
விதிசெயப் பெற்றன னின்றுதொட் டென்றும்
  மெய்யருட் சோதியால் விளைவிப்பன் நீயவ்
அதிசயம் பார்க்கலாம் ஆடேடி பந்து
  அருட்பெருஞ் சோதிகண் டாடேடி பந்து.

ஆடேடி பந்து ஆடேடி பந்து
அருட்பெருஞ் சோதிகண் டாடேடி பந்து.[126] ம

---

125. அன்றால்—பி-ம்.

126. ஒரு கையெழுத்துப் பிரதியில் முதலிற் கண்ட பல்லவி யாவது இறுதியி லுள்ள இந்த முடிவாவது இல்லை.

(2)

பூவாம லேநிதங் காய்த்த விடத்தும்
பூவார் மலர்கொண்டு பந்தாடா நின்றேன்
சாவா வரந்தந்து வாழ்வாயோ பந்தே
சாவாம லென்னொடு வீழ்வாயோ பந்தே.*

திருச்சிற்றம்பலம்

## 6. திரு உந்தியார்[127]

திருச்சிற்றம்பலம்

இரவு விடிந்த திணையடி வாய்த்த
பாவி மகிழ்ந்தேனென் றுந்தீ பற
பாலமு துண்டேனென் றுந்தீ பற.[128] க

---

* ஸ்ரீ விசுவநாதபிள்ளை அவர்களது தனிப்பாடல்கள் கொண்ட ஓர் பிரதியில் மட்டும் இது காணப்படுகிறது. இதை ஸ்ரீ ஆ. சபாபதி சிவாசாரியர் அவர்கள் 1891-ல் முதல் முதல் அச்சிட்டிருப்பதில் முதல் வரியில் "காய்த்த விடத்துப்" என்ற பாடம் காண்கிறது.

127. சுவாமிகள் கையெழுத்திலுள்ள மூலமே இதற்காதாரம். கிடைத்த அன்பர்கள் கையெழுத்துப் பிரதிகளில் ஐந்தில் இது காணப்படுகிறது.

128. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும்:—

(i) பௌளி—மிச்ரசாபு

(ii) இ ர வு | வி டிந் த து |
கா கா கா | கா பா பா பக |

இ ணை ய டி | வாய்த் த ||
ப ப பா ப | பாத நிதப ||

ப ர வி ம | கிழ்ந் தே னென் | றுந் தீ ப | ற ||
க க பா ப | கா ரீ ஸ | ஸரி கா கா | கா ||

பா ல மு | துண் டே னென் | றுந் தீ ப | ற ||
ஸரி கா கா | கா கா ரி | கா கா பா | கரிஸ ||

பொழுது விடிந்தது பொற்பதம் வாய்த்த
தொழுது மகிழ்ந்தேனென் றுந்தீ பற
 தூயவ னானேனென் றுந்தீ பற. உ

தூக்கந் தொலைந்தது சூரியன் தோன்றின
னேக்கந் தவிர்ந்தேனென் றுந்தீ பற
 இன்னமு துண்டேனென் றுந்தீ பற. ஙடீ

துன்பந் தவிர்ந்தது தூக்கந் தொலைந்தது
இன்பங் கிடைத்ததென் றுந்தீ பற
 எண்ணம் பலித்ததென் றுந்தீ பற. ச

ஞான முதித்தது நாத மொலித்தது
தீனந் தவிர்ந்ததென் றுந்தீ பற
 சிற்சபை கண்டேனென் றுந்தீ பற. ரு

திரையற்று விட்டது செஞ்சுடர் தோன்றிற்று
பரையொளி யோங்கிற்றென் றுந்தீ பற
 பலித்தது பூசையென் றுந்தீ பற. சா

உள்ளிரு ணீங்கிற்றென் னுள்ளொளி யோங்கிற்றுத்
தெள்ளமு துண்டேனென் றுந்தீ பற
 தித்திக்க வுண்டேனென் றுந்தீ பற. எ

எந்தையைக் கண்டே னிடரெலா நீங்கினேன்
சிந்தை மகிழ்ந்தேனென் றுந்தீ பற
 சித்திகள் பெற்றேனென் றுந்தீ பற. அ

தந்தையைக் கண்டேனான் சாகா வரம்பெற்றேன்
சிந்தை களித்தேனென் றுந்தீ பற
 சித்தெலாம் வல்லேனென் றுந்தீ பற. கூ

முத்தியைப் பெற்றேனம் முத்தியினால் ஞான
சித்தியை யுற்றேனென் றுந்தீ பற
 சித்தனு மானேனென் றுந்தீ பற. ய

திருச்சிற்றம்பலம்

## 7. உபதேச வினா[129]

திருச்சிற்றம்பலம்

வேதாந்த நிலையொடு சித்தாந்த நிலையும்
மேவும் பொதுநடம் நான்காணல் வேண்டும்
நாதாந்தத் திருவீதி நடப்பாயோ தோழி
நடவாம லென்மொழி கடப்பாயோ தோழி. [130] க

---

129. கிடைத்த ஐந்து கையெழுத்துப் பிரதிகளைக்கொண்டு இது இங்கு அச்சிடப்பட்டிருக்கிறது.

130. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும்:—

(i) காம்போஜி—ஆதி

(ii) வே தாந் த நி லை யொ டு |
தஸா நீ தா தா தப தாநி தா |

சித் தாந் | த நி லை யும் ||
பா தபதா | ஸா நீ த ப ||

மே வும் பொ து ந டம் |
பா பா பா பாதப மக மா |

நான் கா ணல் | வேண் டு ம் ||
பா தா பா | பதஸா ஸா ஸா ||

நா தாந் தத் தி ரு வீ தி |
மாகா பா தா ஸ ஸா ரீ கா |

ந டப் பா யோ | தோ ழி ||
மா கா ஸா நிதநீ | தா பா ||

ந ட வா ம லென் மொ ழி |
பா தா ரீ ஸா ததநித பமா பதஸா |

க டப் பா யோ | தோ ழி ||
நீ த பா பமகா | பத ஸநீப ||

தொம்பத வுருவொடு தற்பத[131] வெளியில்
　தோன்றசி பதநடம் நான்காணல் வேண்டும்
எம்பத மாகி யிசைவாயோ தோழி
　இசையாமல் வீணிலே யசைவாயோ தோழி.　　உ

சின்மய வெளியிடைத் தன்மய மாகித்
　திகழும் பொதுநடம் நான்காணல் வேண்டும்
என்மய மாகி யிருப்பாயோ தோழி
　இச்சை மயமாய்ப் பெருப்பாயோ[132] தோழி.　　ங

நவநிலை மேற்பர நாதத் தலத்தே
　ஞானத் திருநடம் நான்காணல் வேண்டும்
மவுனத் திருவீதி வருவாயோ தோழி
　வாராமல் வீண்பழி தருவாயோ தோழி.　　ச

ஆறுறுக் கப்புற மாகும் பொதுவில்
　அதுவது வாநடம் நான்காணல் வேண்டும்
ஏறுமா விழியாம விருப்பாயோ தோழி
　ஏறி யிழிந்திங் கிறப்பாயோ[133] தோழி.　　ரு

வகார வெளியிற் சிகார வுருவாய்[134]
　மகாரத் திருநடம் நான்காணல் வேண்டும்
விகார வுலகை வெறுப்பாயோ தோழி
　வேறாகி யென்சொல் மறுப்பாயோ தோழி.　　சு

நாதாந்த நிலையொடு போதாந்த நிலைக்கு[135]
　நடுவாம் பொதுநடம் நான்காணல் வேண்டும்
சூதாந்தற் போதத்தைச் சுடுவாயோ தோழி
　துட்டநெறியிற் கெடுவாயோ தோழி.　　எ

---

131. தம்பத, தத்பத—பி-ம்.
132. மயமா யிருப்பாயோ—பி-ம்.
133. இறங்கி யிருப்பாயோ—பி-ம்.
134. உருவாம்—பி-ம்.　　135. நிலைக்கும்—பி-ம்.

அறிவி லறிவை யறியும் பொதுவில்
ஆனந்தத் திருநடம் நான்காணல் வேண்டும்
செறிவி லறிவாகிச் செல்வாயோ தோழி
செல்லாமல் மெய்ந்நெறி வெல்வாயோ தோழி. அ

என்னைத் தன்னோடே யிருத்தும் பொதுவில்
இன்பத் திருநடம் நான்காணல் வேண்டும்
நின்னைவிட் டென்னோடே நிலைப்பாயோ தோழி
நிலையாம லென்னையும் அலைப்பாயோ தோழி. கூ

துரியத்திற் கப்பாலுந் தோன்றும் பொதுவில்
ஜோதித் திருநடம் நான்காணல் வேண்டும்
கரியைக்கண் டாங்கது[136] காண்பாயோ தோழி
காணாது போய்ப்பழி[137] பூண்பாயோ தோழி. ய

தத்துவத் துட்புறந் தானும் பொதுவிற்
சத்தாந் திருநடம் நான்காணல் வேண்டும்
கொத்தறு வித்தைக் குறிப்பாயோ தோழி
குறியா துலகில் வெறிப்பாயோ[138] தோழி. கக

திருச்சிற்றம்பலம்

---

136. கரியைக்கண் டாங்கதுங்—பி-ம்
137. பொய்ப்பழி, பொய்ப்பணி—பி-ம்
138. வெறுப்பாயோ—பி-ம்

## 8. நெஞ்சொடு நேர்தல்[139]

திருச்சிற்றம்பலம்

அடங்குநா ளில்லா தமர்ந்தானைக் காணற்கே[140]
தொடங்குநாள் நல்லதன் றே—நெஞ்சே
தொடங்குநாள் நல்லதன் றே.[141] க

வல்லவா றெல்லாமும் வல்லானைக் காணற்கே
நல்லநா ளெண்ணிய நாள்—நெஞ்சே
நல்லநா ளெண்ணிய நாள். உ

காலங் கடந்த கடவுளைக் காணற்குக்[142]
காலங் கருதுவ தேன்—நெஞ்சே
காலங் கருதுவ தேன். ந

ஆல மமுதாக்கு மண்ணலைக் காணற்குக்
காலங் கருதுவ தேன்—நெஞ்சே
காலங் கருதுவ தேன். ச

---

139. கிடைத்த நான்கு கையெழுத்துப் பிரதிகளைக்கொண்டு இத்திருப்பாடல் இங்கு அச்சிடப்பட்டிருக்கிறது.

140. காணவே—பி.ம்.

141. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும்:—

(i) தோடி—மிச்ரசாபு

(ii) அ டங் கு நா | ளில் லா |
ஸ ரீ க ம | பதா நீஸா |

த மர்ந் தா | னைக் கா ணற் கே ||
நீ ஸ்நீ தா | பா கமப மக ரீஸா ||

தொ டங் கு நாள் | நல் ல தன் | றே | நெஞ் சே ||
ஸ ரீ கா ரீ | ஸா த நி | ஸா | பதநீ தபமக ||

தொ டங் கு நாள் | நல் ல தன் | றே ||
ஸ ரீ கா ரீ | ஸா த நி | ஸா ||

தடையாது மில்லாத்[143] தலைவனைக் காணற்கே[144]
தடையாது மில்லைகண் டாய்—நெஞ்சே
தடையாது மில்லைகண் டாய். ரு

கையு ளமுதத்தை வாயுள் ளமுதாக்கப்
பையு ளுனக்கென்னை யோ—நெஞ்சே
பையு ளுனக்கென்னை யோ. சு

என்னுயிர் நாதனை யான்கண் டணைதற்கே
உன்னுவ தென்னைகண் டாய்—நெஞ்சே
உன்னுவ தென்னைகண் டாய். எ

நான்பெற்ற செல்வத்தை நான்பற்றிக் கொள்ளற்கே
ஏன்பற்று வாயென்ப தார்—நெஞ்சே
ஏன்பற்று வாயென்ப தார். அ

தத்துவா தீதத் தலைவனைக் காணற்குத்
தத்துவ முன்னுவ தேன்—நெஞ்சே
தத்துவ முன்னுவ தேன். கூ

ஒக்க வமுதத்தை யுண்டோம் இனிச்சற்றும்
விக்கல் வராதுகண் டாய்—நெஞ்சே
விக்கல் வராதுகண் டாய். ய

திருச்சிற்றம்பலம்

---

142. காணற்கே—பி-ம். இங்ஙனமே பிற இடங்களிலுங் கொள்க.

143. இல்லாத—பி-ம்.

144. காணற்கு—பி-ம். இங்ஙனமே பிற இடங்களிலுங் கொள்க.

## 9. மங்களம்[145]

திருச்சிற்றம்பலம்

புங்கவர் புகழுமா தங்கமு கந்திகழ்
எங்கள் கணேசராந் துங்கற்கு—மங்களம்.[146]   க

போதந் திகழ்பர நாதந் தனில்நின்ற
நீதராஞ் சண்முக நாதற்கு—மங்களம்.   உ

பூசைசெய் வாருளம் ஆசைசெய் வார்தில்லை
ஈசர்என மதுநட ராஜற்கு—மங்களம்.   ங

பூமி புகழ்குரு சாமி தனைஈன்ற
வாமி எனுஞ்சிவ காமிக்கு—மங்களம்.   ச

புங்கமி குஞ்செல்வந் துங்கமு றத்தரும்
செங்கம லத்திரு மங்கைக்கு—மங்களம்.   ரு

பூணி லங்குந்தன வாணி பரம்பர
வாணி கலைஞர்கொள் வாணிக்கு—மங்களம்.   சா

புண்ணிய ராகிய கண்ணிய ராய்த்தவம்
பண்ணிய பத்தர்க்கு முத்தர்க்கு—மங்களம்.   எ

திருச்சிற்றம்பலம்

### ங. ஆடற் பாடல்கள் முற்றுப் பெற்றன.

---

145. கிடைத்த இரண்டு கையெழுத்துப் பிரதிகளைக் கொண்டு இத்திருப்பாடல் இங்கு அச்சிட்டிருக்கிறது. தனிப் பாசுரப் பகுதி 16-வது அடிக் குறிப்பைப் பார்க்க.

146. இதன் இராக தாளங்கள்: மத்தியமாவதி—ரூபகம்.

# ௪. வருகைப் பாடல்கள்

## 1. சண்முகர் வருகை[147]

திருச்சிற்றம்பலம்

வாரும்வா ருந்தெய்வ வடிவேல் முருகரே
வள்ளிம ணாளரே வாரும்
புள்ளிம யிலோரே வாரும்.[148] ௧

சங்கமொ லித்தது தாழ்கடல் விம்மிற்று
சண்முக நாதரே வாரும்
உண்மைவி னோதரே வாரும். ௨

பொழுது விடிந்தது பொற்கோழி கூவிற்று
பொன்னனை வேலரே வாரும்
மின்னார் முந்நூலரே வாரும். ௩

காகம் கரைந்தது காலையு மாயிற்று
கண்ணுதல் சேயரே வாரும்
ஒண்ணுதல் நேயரே வாரும். ௪

---

147. 116-வது அடிக்குறிப்பைப் பார்க்க. இதுவும் அப்படியே. தனிப்பாசுரப் பகுதி 18-வது அடிக்குறிப்பைப் பார்க்க.

148. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும்:—

(i) ஸுரடி—சாபு

(ii) வா ரும் வா | ரும் தெய் வ | வ டி வேல் மு |
மா மா மா | மா மா மா | ரீ ம பா நித |

ரு க ரே ||
மா மரி ரீ ||

வள் ளி ம | ணா ள ரே | வா ரும் |
ரிம ரீ ஸ | ஸா நி ஸா | ரிமாமகபம ரீ |

புள் ளி ம | யி லோ ரே | வா ரும் ||
ரிம ரீ ஸ | ஸா நி ஸா | ரிமாமகபம ரீ ||

செங்கதிர் தோன்றிற்று தேவர்கள் சூழ்ந்தனர்
செங்கல்வ ராயரே வாரும்
எங்குரு நாதரே வாரும். ரு

அருண னுதித்தனன் அன்பர்கள் சூழ்ந்தனர்
ஆறுமு கத்தோரே வாரும்
மாறில கத்தோரே வாரும். சு

சூரியன் தோன்றினன் தொண்டர்கள் சூழ்ந்தனர்
சூரசங் காரரே வாரும்
வீரசிங் காரரே வாரும். எ

வீணை முரன்றது வேதியர் சூழ்ந்தனர்
வேலாயு தத்தோரே வாரும்
காலாயு தத்தோரே வாரும். அ

சேவல் ஒலித்தது சின்னம் பிடித்தனர்
தேவர்கள் தேவரே வாரும்
மூவர் முதல்வரே வாரும். கூ

பத்தர்கள் சூழ்ந்தனர் பாடல் பயின்றனர்
பன்னிரு தோளரே வாரும்
பொன்மலர்த் தாளரே வாரும். க0

மாலை கொணர்ந்தனர் மஞ்சனம் போந்தது
மாமயில் வீரரே வாரும்
தீமையில் தீரரே வாரும். கக

தொண்டர்கள் நாடினர் தோத்திரம் பாடினர்
சுப்பிர மணியரே வாரும்
வைப்பி னணியரே[149] வாரும். கஉ

திருச்சிற்றம்பலம்

---

149. ஸ்ரீ இறுக்கம் இரத்தின முதலியார் அவர்களது பிரதியில் முதலில் "திப்பிர கெண்யரே" என்றெழுதியதைப் பிறகு "வைப்பி னணியரே" என்று திருத்தி யிருக்கிறது.

## 2. அம்பலவாணர் வருகை[150]

திருச்சிற்றம்பலம்

### பல்லவி

வாரீர் சிதம்பர வல்லி சிவகாம
வல்லி மணாளரே வாரீர்
மணிமன்ற வாணரே வாரீர்.

### சரணங்கள்

அருட்பெருஞ் ஜோதியென் னாண்டவ ரேதிரு
அம்பல வாணரே வாரீர்
அன்புடை யாளரே வாரீர்.[151] வாரீர் க

அச்சந் தவிர்த்தென்னை யாட்கொண் டருளிய
அந்தண ரேயிங்கு வாரீர்
அம்பலத் தையரே வாரீர். வாரீர் உ

---

150. இத் திருப்பாடலுக்குக் கிடைத்த கையெழுத்துப் பிரதிகள் ஐந்து.

151. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும்:—

(i) கல்யாணி—மிச்ர சாபு

(ii) அருட் பெ ரும் | ஜோ தி யென் || ஆண் ட வ |
ககா மா பா | தா நீ ஸ்ா || தநிஸ்ா நித பா |

ரே தி ரு ||
நீதப மக ரீ ||

அம் ப ல | வா ண ரே | வா ரீர் ||
ரீ ஸ ஸ | ரீ ரீ ரீ | கமாபதபம காரீஸ ||

அன் பு டை | யா ள ரே | வா ரீர் ||
ரீ ஸ ஸ | ரீ ரீ ரீ | கமாபதபம காரீஸ ||

அன்புரு வானவ ரின்புற உள்ளே
அறிவுரு வாயினீர் வாரீர்
அருட்பெருஞ் ஜோதியீர் வாரீர். வாரீர் ௩

அண்டங்க ளெல்லாம் அணுவி லடக்கும்
அரும்பெருஞ்[152] சித்தரே வாரீர்
அற்புத ரேயிங்கு[153] வாரீர். வாரீர் ௪

அம்மையு மாயென்னக் கப்பனு மாகியென்
அன்பனு மாயினீர் வாரீர்
அங்கண ரேயிங்கு வாரீர். வாரீர் ௫

அல்ல லறுத்தென் னறிவை விளக்கிய
அம்பல வாணரே வாரீர்
செம்பொரு ளாயினீர் வாரீர். வாரீர் ௬

அப்பணி பொன்முடி[154] யப்பனென் றேத்துமெய்
அன்பருக் கன்பரே வாரீர்
இன்பந் தரவிங்கு வாரீர். வாரீர் ௭

அச்சுதர் நான்முக ருச்சியில் மெச்சும்
அடிக்கம லத்தீரே வாரீர்
நடிக்கவல் லீரிங்கு வாரீர். வாரீர் ௮

அண்டர்க் கரும்பதந் தொண்டர்க் கௌிதில்
அளித்திட வல்லீரே வாரீர்
களித்தென்னை யாண்டீரே வாரீர். வாரீர் ௯

அம்பர மானசி தம்பர நாடகம்
ஆடவல் லீரிங்கு வாரீர்
பாடலு வந்தீரே[155] வாரீர். வாரீர் ௧௦

---

152. அருட்பெருஞ்—பி-ம். 153. இங்கே—பி-ம்.

154. மூன்று பிரதிகளில் "செஞ்சடை" என்றும், மற்ற இரண்டில் முதலில் 'செஞ்சடை' என்றெழுதியுள்ளதைப் பிறகு "பொன்முடி" என்று திருத்தியும் இருக்கிறது.

ஆதிய ஞதியென் ருரணம் போற்றும்
அரும்பெருஞ் ஜோதியீர் வாரீர்
ஆனந்த நாடரே வாரீர். வாரீர் கக

ஆகம வேத மனேக முகங்கொண்
டருச்சிக்கும் பாதரே வாரீர்
ஆருயிர் நாதரே வாரீர். வாரீர் கஉ

ஆசறும் அந்தங்க ளாறும் புகன்றநல்
ஆரிய ரேயிங்கு வாரீர்
ஆனந்தக் கூத்தரே வாரீர்.[156] வாரீர் கங

ஆல நிழற்கண் அமர்ந்தறஞ் சொன்னநல்[157]
ஆரிய ரேயிங்கு வாரீர்
ஆனந்தக் கூத்தரே வாரீர். வாரீர் கச

ஆரமு தாகியென் ஆவியைக் காக்கின்ற
ஆனந்த ரேயிங்கு வாரீர்
ஆடல்வல் லீரிங்கு வாரீர். வாரீர் கரு

ஆதர வாயென் னறிவைத் தெளிவித்
தமுத மளித்தீரே வாரீர்
ஆடிய பாதரே வாரீர். வாரீர் கசு

---

155. 1885-ம் ஹு முதற் பதிப்பில் "பாடவல்லீரிங்கு" என்று அச்சிட்டிருக்கிறது.

156. இப்பாடல் மூன்று பிரதிகளில் காணப்படவில்லை. மற்ற இரு பிரதிகளிலும் "ஆல நிழற்கண் அமர்ந்தறஞ் சொன்ன நல்" என்று முதலில் எழுதியதைத் திருத்திப் பிறகு "ஆசறும் அந்தங்கள் ஆறும் புகன்றநல்" என்றெழுதி யிருக்கிறது. முதன் முதல் 1885-ல் அச்சிட்டபோது இவற்றை வெவ்வேறு பாடல்களாகக் கொண்டிருக்கின்றனர்.

157. 156-வது அடிக்குறிப்பைப் பார்க்க.

ஆதார மீதானத் தப்பாலுங் காண்டற்
கரும்பெருஞ் ஜோதியீர் வாரீர்
கரும்பி லினிக்கின்றீர் வாரீர். வாரீர் கஎ

ஆதியு மந்தமு மில்லா வரும்பெரும்
ஜோதிய ரேயிங்கு வாரீர்
வேதிய ரேயிங்கு வாரீர். வாரீர் கஅ

ஆடல்கொண் டீர்திரு வம்பலத் தேயென்றன்
பாடல்கொண் டீரிங்கு வாரீர்
கூடவல் லீரிங்கு வாரீர். வாரீர் கசு

ஆக்கங் கொடுத்தென்றென் றூக்கந் தடுத்தவென்
ஆண்டவ ரேயிங்கு வாரீர்
தாண்டவ ரேயிங்கு வாரீர். வாரீர் உ0

ஆபத்தை நீக்கியோர் தீபத்தை யேற்றியென்
ஆணவம் போக்கினீர் வாரீர்
காணவந் தேனிங்கு வாரீர். வாரீர் உக

இதுதரு ணந்தரு ணந்தரு ணம்என்
இறையவ ரேயிங்கு வாரீர்
இடர்தவிர்த் தாட்கொண்டீர் வாரீர். வாரீர் உஉ

இச்சையின் வண்ண மெனக்கருள் செய்ய
இதுதரு ணம்மிங்கு வாரீர்
இன்னமு தாயினீர் வாரீர். வாரீர் உங

இன்பங் கொடுத்தேயென் றுன்பங் கெடுத்துள்
இருக்கின்ற நாதரே வாரீர்
இருக்கின் பொருளானீர் வாரீர். வாரீர் உச

இரவும் பகலு மிதயத்தி லூறி
இனிக்கு மமுதரே வாரீர்
இனித்தரி யேனிங்கு வாரீர். வாரீர் உரு

இன்னுந்தாழ்த் தங்கே[158] யிருப்ப தழகன்று
இதுதரு ணம்இங்கு வாரீர்
இருமையு மாயினீர் வாரீர். வாரீர் உசு

இடர்தவிர்த் தின்ப மெனக்களித் தாளற்[159]
கிதுதரு ணம்இங்கு வாரீர்
இனியவ ரேயிங்கு[160] வாரீர். வாரீர் உஎ

இறையும் பொறுப்பரி தென்னுயிர் நாதரே
இத்தரு ணம்இங்கு வாரீர்
இதநடஞ் செய்கின்றீர் வாரீர். வாரீர் உஅ

இம்மையி லேயெனக் கம்மையி னின்பம்
இதுவென் றளித்தீரே வாரீர்
இதயத் திருந்தீரே வாரீர். வாரீர் உகூ

இங்கங்கென் ஞமலே யெள்ளுக்கு ளெண்ணெய்போல்
எங்கும் நிறைந்தீரே வாரீர்
இந்தெழில் வண்ணரே[161] வாரீர். வாரீர் ௩0

இணையொன்று மில்லா விணையடி யென்தலை
ஏறவைத் தீரிங்கு வாரீர்
இறுதியி லீரிங்கு வாரீர். வாரீர் ௩க

ஈன்றாளு மெந்தையு மென்குரு வும்மெனக்
கின்பமு மாயினீர் வாரீர்
அன்பருக் கன்பரே வாரீர். வாரீர் ௩உ

---

158. தாழ்ந்தங்கே—பி-ம்

159. ஆடற்கு—பி-ம்

160. இதநடஞ் செய்கின்றீர்—பி-ம்

161. மூன்று பிரதிகளில் "இந்தணி சென்னியீர்" என்றும், மற்ற இரண்டில் முதலில் இப்படியுள்ளதைப் பிறகு "இந்தெழில் வண்ணரே" என்று திருத்தியும் இருக்கிறது.

ஈன மறுத்துமெய்ஞ் ஞான விளக்கென்
னிதயத்தி லேற்றினீர் வாரீர்
உதயச் சுடரினீர் வாரீர். வாரீர் ௩௩

ஈடறி யாதமெய் வீடுதந் தன்பரை
இன்புறச் செய்கின்றீர் வாரீர்
வன்பர்க் கரியீரே வாரீர். வாரீர் ௩௪

ஈதிய லென்றுநின் ரோதிய வேதத்திற்
கெட்டா திருந்தீரே வாரீர்
நட்டார்க் கெளியீரே வாரீர். வாரீர் ௩௫

ஈச ரெனும்பல தேசர்கள் போற்றுமந
டேசரே நீரிங்கு வாரீர்
நேசரே நீரிங்கு வாரீர். வாரீர் ௩௬

ஈசர் பலிக்குழல்[162] நேசரென் றன்பர்கள்
ஏசநின் றீரிங்கு வாரீர்
நாசமில் லீரிங்கு வாரீர். வாரீர் ௩௭

ஈறறி யாமறை யோனென் றறிஞர்
இயம்பநின் றீரிங்கு வாரீர்
வயந்தரு வீரிங்கு வாரீர். வாரீர் ௩௮

ஈதல்கண் டேமிகக் காதல்கொண் டேனெனக்
கீதல்செய் வீரிங்கு வாரீர்
ஓதரி யீரிங்கு வாரீர். வாரீர் ௩௯

ஈடணை யற்றநெஞ் சூடணை யுற்றுமற்
றீடணை யீரிங்கு வாரீர்
ஆடல்வல் லீரிங்கு வாரீர். வாரீர் ௪0

ஈண்டறி வோங்கிடத் தாண்டறி வாகியுள்
ளீண்டுகின் றீரிங்கு வாரீர்
ஆண்டவ ரேயிங்கு வாரீர். வாரீர். ௪௧

162. எளியர்க்கு-பி-ம். 163. இவை-பி-ம். 164. இல்லீர்-பி-ம்.

உள்ளதே யுள்ளது விள்ளது வென்றெனக்
குள்ள துரைசெய்தீர் வாரீர்
வள்ளல் விரைந்திங்கு வாரீர். வாரீர் ௪௨

உருவா யருவா யுருவரு வாயவை[163]
யொன்றுமல் லீ[164]ரிங்கு வாரீர்
என்றும்நல் லீரிங்கு வாரீர். வாரீர் ௪௩

உறவும் பகையு முடைய நடையி
லுறவுமெண் ணேனிங்கு வாரீர்
பிறவுநண் ணேனிங்கு வாரீர். வாரீர் ௪௪

உள்ளக் கருத்தைநான் வள்ளற் குரைப்பதென்
னுள்ளத் திருந்தீரே வாரீர்
விள்ளற் கரியீரே வாரீர். வாரீர் ௪௫

உய்யவல் லார்க்கருள் செய்யவல் லீர்நானு
முய்யவல் லேனிங்கு வாரீர்
செய்யவல் லீரிங்கு வாரீர். வாரீர் ௪௬

உடையவ ராரிக் கடையவ னேனுக்
குடையவ ரேயிங்கு வாரீர்
சடையவ ரே[165] இங்கு வாரீர். வாரீர் ௪௭

உறங்கி யிறங்கு முலகவர் போலநா
னுறங்கமாட் டேனிங்கு வாரீர்
இறங்கமாட் டேனிங்கு வாரீர். வாரீர் ௪௮

உண்டுடுத் தின்னு முழலமாட் டேனமு
துண்டி விரும்பினேன் வாரீர்
உண்டி தரவிங்கு வாரீர். வாரீர் ௪௯

உன்னுதோ றுன்னுதோ றுள்ளே யினிக்கின்ற
உத்தம ரேயிங்கு வாரீர்
உற்ற துணையானீர் வாரீர். வாரீர் ௫0

---

165. சடைதவிர்ப்பீர்—பி-ம். (1885-ம் வருஷப் பதிப்பு)

உம்மாணை யும்மாணை யும்மையல் லாலெனக்
குற்றவர் மற்றிலை வாரீர்
உற்றறிந் தீரிங்கு வாரீர். வாரீர் ருக

ஊன நடந்தவிர்த் தான நடங்காட்டு
மோன நடேசரே வாரீர்
ஞான நடேசரே வாரீர். வாரீர் ருஉ

ஊருமில் லீரொரு பேருமில் லீரறி
வோருமில் லீரிங்கு வாரீர்
யாருமில் லீரிங்கு வாரீர். வாரீர் ருந

ஊறு சிவானந்தப் பேறு தருகின்ற
வீறுடை யீரிங்கு வாரீர்
நீறுடை யீரிங்கு வாரீர். வாரீர் ருச

ஊன்றுநுஞ் சேவடி சான்று தரிக்கிலேன்
என்றுகொள் வீரிங்கு வாரீர்
ஆன்றவ ரேயிங்கு வாரீர். வாரீர் ருரு

ஊற்றை யுடம்பிது மாற்றுயர் பொன்னென
ஏற்ற மருள்செய்வீர்[166] வாரீர்
தேற்ற மருள்செய்வீர் வாரீர் வாரீர் ருசு

ஊடலில் லீ[167]ரெனைக் கூடல்வல் லீரென்னுள்
பாடல்சொல் வீரிங்கு வாரீர்
ஆடல்நல் லீரிங்கு வாரீர். வாரீர் ருஎ

ஊக்கங் கொடுத்தென்ற னேக்கங் கெடுத்தரு
ளாக்க மடுத்தீரே[168] வாரீர்
தூக்கந் தவிர்த்தீரே[169] வாரீர். வாரீர் ருஅ

ஊமை யெழுத்தினுள் ளாமை யெழுத்துண்டென்
றோமை யறிவித்தீர் வாரீர்
சேமஞ் செறிவித்தீர் வாரீர். வாரீர் ருகூ

---

166. செய்தீர்—பி-ம். 167. ஊடவல்லீர்—பி-ம்.
168. எடுத்தீரே—பி-ம். 169. கெடுத்தீரே—பி-ம்.

ஊக மிலேன்பெற்ற தேக மழியாத
யோகங் கொடுத்தீரே வாரீர்
போகங் கொடுத்தீரே வாரீர். வாரீர் ௬௦

ஊதியந் தந்தநல் வேதிய ரேயுண்மை
யோதிய நாதரே வாரீர்
ஆதிய ஞாதியீர் வாரீர். வாரீர் ௬௧

என்குறை தீர்த்தென்னுள் நன்குறை வீரினி
யென்குறை யென்முன்னீர் வாரீர்
தன்குறை யில்லீரே வாரீர். வாரீர் ௬௨

என்னுயி ராகியென் றன்னுயிர்க் குள்ளேயோ
ரின்னுயி ராயினீர் வாரீர்
என்னுயிர் நாதரே வாரீர் வாரீர் ௬௩

என்கண் ணருள்செய்தென் புன்கண் விலக்கிய[170]
வென்கண் ணனையீரே வாரீர்
மின்கண் ணுதலீரே வாரீர். வாரீர் ௬௪

எல்லா வுயிர்களும் நல்லா ரெனத்தொழும்
எல்லாம்வல் லீரிங்கு வாரீர்
சொல்லா நிலையினீர் வாரீர். வாரீர் ௬௫

எட்டு மிரண்டுமென் றிட்டு வழங்குத
லெட்டும் படிசெய்தீர் வாரீர்
எட்டுரு வாயினீர் வாரீர். வாரீர் ௬௬

என்று கண்டாயிது[171] நன்றுகொண் டாளுக[172]
வென்றுதந் தீரிங்கு வாரீர்
அன்றுவந் தீரின்று[173] வாரீர். வாரீர் ௬௭

எச்சம யங்களும் பொய்ச்சம யமென்றீர்
இச்சம யம்இங்கு வாரீர்
மெய்ச்சம யந்தந்தீர் வாரீர். வாரீர் ௬௮

---

170. இலங்கிய—பி-ம். 171. கண்டாமிது—பி-ம்.
172. கண்டாளுக—பி-ம். 173. இங்கு—பி-ம்.

என்பாற் களிப்பொடு மன்பாலொன் றீந்திதை
　யின்பாற் பெறுகென்றீர் வாரீர்
　தென்பால் முகங்கொண்டீர் வாரீர்.　　வாரீர் ௬௯

எச்ச வுரையன்றெ னிச்சையெல் லாமும
　திச்சைகண் டீரிங்கு வாரீர்
　அச்சந் தவிர்த்தீரே வாரீர்.　　வாரீர் ௭0

எண்ணமெல் லாமும தெண்ணமல் லால்வேறொ
　ரெண்ண மெனக்கில்லை வாரீர்
　வண்ண மளிக்கின்றீர் வாரீர்.　　வாரீர் ௭௧

ஏராய நான்முகர் நாராய ணர்மற்றும்
　பாராய ணஞ்செய்வீர் வாரீர்
　ஊராய மாயினீர் வாரீர்.　　வாரீர் ௭௨

ஏம மிருந்திரு வாம சுகந்தரும்
　ஏம சபேசரே வாரீர்
　சோம சிகாமணி வாரீர்.　　வாரீர் ௭௩

ஏத மிலாப்பர நாத முடிப்பொரு
　ளோதது சொல்லுவீர் வாரீர்
　ஈத லுடையீரே வாரீர்.　　வாரீர் ௭௪

ஏக பராபர யோக வெளிக்கப்பால்
　ஏக வெளிநின்றீர் வாரீர்
　ஏக ரனேகரே வாரீர்.　　வாரீர் ௭௫

ஏறி யிறங்கி யிருந்தே னிறங்காமல்
　ஏறவைத் தீரிங்கு வாரீர்
　தேறவைத் தீரிங்கு வாரீர்.　　வாரீர் ௭௬

ஏகாந்த நன்னிலை யோகாந்தத் துள்ளதென்
　றேகாந்தஞ் சொல்லினீர் வாரீர்
　தேகாந்த மில்லீரே வாரீர்.　　வாரீர் ௭௭

ஏகாத கல்விதான் சாகாத கல்வியென்
றேகாத லாற்சொன்னீர் வாரீர்
*வேகாத காலினீர் வாரீர். வாரீர் எஅ

ஏடா யிரமென்னை கோடா மொழியொன்றே
ஏடாவென் றீரிங்கு வாரீர்
ஈடாவா ரில்லீரே வாரீர். வாரீர் எகூ

ஏசாத தந்திரம் பேசாத மந்திரம்
ஈசான மேலென்றீர் வாரீர்
ஆசாதி யில்லீரே வாரீர். வாரீர் அ0

ஏனென்பார் வேறிலை நானன்பாற் கூவுகின்
றேனென்பா லேனென்பீர் வாரீர்
ஆனின்பா லாடுவீர் வாரீர். வாரீர் அக

ஐந்து மலங்களும் வெந்து விழவெழுத்
தைந்துஞ் செயுமென்றீர் வாரீர்
இந்து சிகாமணி வாரீர். வாரீர் அஉ

ஐயமுற் றேனையிவ் வையங் கரியாக
ஐயம்[174] தவிர்த்தீரே வாரீர்
மெய்யம் பலத்தீரே வாரீர். வாரீர் அங

ஐயர் நடம்புரி மெய்யரென் றேயுணர்ந்
தையர் தொழநின்றீர் வாரீர்
துய்ய ருளநின்றீர் வாரீர். வாரீர் அச

ஐவணங் காட்டிடும் மெய்வணம் வேட்டுநின்
றைவண ரேத்துவீர் வாரீர்
பொய்வணம் போக்குவீர் வாரீர். வாரீர் அரு

ஒன்றே சிவமதை யொன்றுசன் மார்க்கமும்
ஒன்றேயென் றீரிங்கு வாரீர்
நன்றேநின் றீரிங்கு வாரீர். வாரீர் அகூ

---

174. பையம்—பி-ம்.

ஒப்பாரில் வீருமக் கிப்பாரிற் பிள்ளைநான்
ஒப்பாரி யல்லகாண் வாரீர்
முப்பாழ் கடந்தீரே வாரீர். வாரீர் அஎ

ஒத்த விடந்தன்னில் நித்திரை செய்யென்றீர்
ஒத்த விடங்காட்ட வாரீர்
சித்த சிகாமணி வாரீர். வாரீர் அஅ

ஒட்டுமற் றில்லைநான் விட்டுப் பிரிகலேன்[175]
ஒட்டுவைத் தேனும்மேல் வாரீர்
எட்டுக் குணத்தீரே வாரீர். வாரீர் அகூ

ஒருமை நிலையி லிருமையுந் தந்த
ஒருமையி னீரிங்கு வாரீர்
பெருமையி னீரிங்கு வாரீர். வாரீர் கூ0

ஒண்மை விரும்பினேன் அண்மையி லீகுவீர்
உண்மைசொன் னேனிங்கு வாரீர்
பெண்மை[176] யிடங்கொண்டீர் வாரீர். வாரீர் கூக

ஓங்கார நாடகம் பாங்காகச்[177] செய்கின்ற
வோங்கார நாடரே வாரீர்
ஆங்கார நீக்கினீர் வாரீர். வாரீர் கூஉ

ஓங்கும்பிண் டாண்டங்கள் தாங்கும் பெருவெளி
யோங்கு நடேசரே வாரீர்
பாங்குசெய் வீரிங்கு வாரீர். வாரீர் கூங

ஓசையி னுள்ளேயோ ராசை[178] யுதிக்கமெல்[179]
ஓசைசெய் வித்தீரே வாரீர்
பாச மறுத்தீரே வாரீர். வாரீர் கூச

---

175. பிரிகிலேன்—பி-ம். 176. வன்மை—பி-ம்.

177. பாங்கார—பி-ம். 178. ஓசை—பி-ம். 179. மேல்—பி-ம்.

ஓரா துலகினைப் பாரா திருநினைக்
கோரா வகையென்றீர் வாரீர்
பேரா நிலைதந்தீர் வாரீர். வாரீர் கரு

ஓடாது மாயையை நாடாது நன்னெறி
யூடா திருவென்றீர் வாரீர்
வாடா திருவென்றீர் வாரீர்.[180] வாரீர் கசு

ஓலக் கபாடத்தைச் சாலத் திறந்தருள்
ஓலக்கங் காட்டினீர் வாரீர்
காலக் கணக்கில்லீர் வாரீர். வாரீர் கஎ

ஓடத்தி னின்றொரு மாடத்தி லேற்றிமெய்
யூடத்தைக் காட்டினீர் வாரீர்
வேடத்தைப் பூட்டினீர் வாரீர். வாரீர் கஅ

ஓமத்தி லேநடுச் சாமத்தி லேயெனை
யோமத்த ஞக்கினீர் வாரீர்
சாமத்த[181] நீக்கினீர் வாரீர். வாரீர் கக

ஓமென்ப தற்குமுன் ஞமென் றுரைத்துடன்
ஊமென்று காட்டினீர் வாரீர்
நாமென்று நாட்டினீர் வாரீர். வாரீர் க00

---

180. "ஓடாது மாயையீ ஊடாது நன்னெறி
வீடா தெனச்சொன்னீர் வாரீர்
வாடா திருவென்றீர் வாரீர்"

என்று இப்பாடல் சுவாமிகளது உபதேசக் குறிப்பொன்றில் காணப்படுகிறது. உபதேசப் பகுதி, திருவார்த்தைச் சிறு குறிப்புகள், 107-வது "அசுத்த நிவர்த்தி" பார்க்க.

181. சாமத்தை—1892-ம் வருஷப் பதிப்பு.

ஔவிய மார்க்கத்தின் வெவ்விய னீக்கியே[182]
செவ்விய ளுக்கினீர் வாரீர்
ஒவ்வியொன் ருக்கினீர் வாரீர். வாரீர் ௧0௧

கண்ணனை யீரும்மைக் காணவென் னுசைக்
கடல்பொங்கு கின்றது வாரீர்
உடல்தங்கு கின்றது வாரீர். வாரீர் ௧0௨

கண்டணை தாலன்றிக் காத லடங்காதென்
கண்மணி யீரிங்கு வாரீர்
உண்மணி யீரிங்கு வாரீர். வாரீர் ௧0௩.

கட்டிக்கொண் டும்மைக் கலந்து கொளல்வேண்டுங்
காரண ரேயிங்கு வாரீர்
பூரண ரேயிங்கு வாரீர்.

வாரீர் சிதம்பர வல்லி சிவகாம
வல்லி மணாளரே வாரீர்
மணிமன்ற வாணரே வாரீர். ௧0௪

திருச்சிற்றம்பலம்

---

## 3. அம்பலவாணர் ஆட வருகை[183]

திருச்சிற்றம்பலம்

### பல்லவி

ஆடவா ரீர்என்னோ டாடவா ரீர்
அம்பலத்தி லாடுகின்றீ ராடவா ரீர்.[184]

### சரணங்கள்

தன்மைபிறர்க் கறிவரியீ ராடவா ரீர்[185]
தனித்தலைமைப் பெரும்பதியீர் ஆடவா ரீர்
வன்மைமனத் தவர்க்கரியீர் ஆடவா ரீர்
வஞ்சமிலா நெஞ்சகத்தீர் ஆடவா ரீர்

---

183. சுவாமிகள் தெய்வத் திருக்கரத்தால் எழுதியுள்ள மூலமே இத்திருப்பாடலுக் காதாரம். இதற்குக் கிடைத்த அன்பர்கள் கையெழுத்துப் பிரதிகள் நான்கு.

இதில் கண்ட முதற்பாடல் பல்லவியோடு ஒரு சமயம் ஓரிடத்திலும், மற்றப் பத்துப் பாடல்கள் அவற்றின் பல்லவியோடு மற்றொரு சமயம் வேறோரிடத்திலும் சுவாமிகளால் எழுதப்பட்டிருக்கின்றன. மூலபாடத்தைப் பெயர்த்தெழுதிய அன்பர்கள் இவற்றின் ஒற்றுமையைக் கருதி இவற்றைத் தொடர்ந்த எண்ணிட்டு ஒரே பதிகமாகத் தொகுத்திருக்கிறார்கள். 185, 186, 187-வது அடிக் குறிப்புகளைப் பார்க்க.

184. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும்:—

(i) மோஹனம்—ஆதி

பல்லவி

ஆ ட வா ரீ ரென் னோ | டா ட வா | ரீர் ||
கா க கா கா கா ரீ | கா பா பா | பகதபகாரீ ||

அம் ப லத் தே யா டு கின் றீர் | ஆ ட வா | ரீர் ||
கா பா கா ரீ ஸா ஸா தா பா | ஸரி கா காபா | கரீஸா ||

தொன்மைமறை முடியமர்ந்தீர் ஆடவா ரீர்
  துரியபதங் கடந்தவரே யாடவா ரீர்
இன்மைதவிர்த் தெனையணைந்தீர் ஆடவா ரீர்
  என்னுடைய நாயகரே ஆடவா ரீர். ஆடவா ரீர் க

திருவாளர் போற்றவென்றோ டாடவா ரீர்[186]
  திருவனையார் வாழ்த்தவிங்கே யாடவா ரீர்
பெருவாய்மைப் பெருந்தகையீ ராடவா ரீர்
  பேராசை பொங்குகின்றே னாடவா ரீர்

---

சரணம்

(முதல் இரண்டு வரிகளுக்கும் மேற்கண்ட ஸ்வரங்களே.)

வன் மை ம னத் த வர்க் க றி யீர் |
கா கா பா தா ஸ் ஸா ஸ் ஸா ஸா |

ஆ ட வா | ரீர் ||
ரீ் கா ரீஸ் | தாஸாதபதா ||

வஞ் ச மி லா நெஞ் ச கத் தீர் |
தா ஸா ஸா ஸா தா ஸா த பதா |

ஆ ட வா | ரீர் ||
ஸா ஸா தாப | பகதபகரிஸரி ||

185. மூலத்தில் "தன்மைபிறர்க் கறிவரியீர்" என்ற இத் திருப்பாடலின் பல்லவியின் இரண்டாவது அடி "அணிவளர்சிற் றம்பலத்தீர் ஆடவா ரீர்" என்றிருக்கிறது. இவ் அடி "அம்பலவாணர் அணைய வருகை" என்னும் திருப்பதிகப் பல்லவியில் ஆளப்பட்டிருப்பதாலும், இத்திருப்பாடலோ டொத்து மற்றச் சரணங்களாகக் கொண்டவற்றின் பல்லவியில் இது காணப்படாததாலும், இவ் அடிக் குறிப்பில் மட்டுமே இது குறித்து வைக்கப்பட்டிருக்கிறது. 183, 186, 187-வது அடிக் குறிப்புக்களைப் பார்க்க.

186. மூலத்தில், "திருவாளர்" என்கிற இத்திருப்பாடலை முதலாகவுடைய பத்துப் பாடல்களின் பல்லவியின் இரண்டாவது அடி "அம்பலத்தி லாடுகின்றீ ராடவாரீர்" என்றிருக்கிறது. 183, 185, 187-வது அடிக் குறிப்புகளைப் பார்க்க.

உருவாகி யோங்குகின்றீ ராடவா ரீர்
உத்தமரே யிதுதருண மாடவா ரீர்
இருவாண ரேத்தநின்றீ ராடவா ரீர்
என்னுடைய நாயகரே யாடவா ரீர். ஆடவா ரீர் உ

வேற்றுமுகம் பாரேனென்றே டாடவா ரீர்
வெட்கமெல்லாம் விட்டுவிட்டே டாடவா ரீர்
மாற்றுதற்கெண் ணுதிரென்றே டாடவா ரீர்
மாற்றிலுயிர் மாய்ப்பேன்கண்டீ ராடவா ரீர்
கூற்றுதைத்த சேவடியீ ராடவா ரீர்
கொண்டுகுலங் குறியாதீ ராடவா ரீர்
ஏற்றதனித் தருணமீதே யாடவா ரீர்
என்னுடைய நாயகரே யாடவா ரீர். ஆடவா ரீர் ௩

இல்லாமை நீக்கிநின்றீ ராடவா ரீர்
என்னைமண மாலையிட்டீ ராடவா ரீர்
கொல்லாமை நெறியென்றீ ராடவா ரீர்
குற்றமெலாங் குணங்கொண்டீ ராடவா ரீர்
நல்லார்சொல் நல்லவரே யாடவா ரீர்
நற்றாயி னினியவரே யாடவா ரீர்
எல்லாஞ்செய் வல்லவரே யாடவா ரீர்
என்னுடைய நாயகரே யாடவா ரீர். ஆடவா ரீர் ௪

ஆசைகொண்டே னுடவென்றே டாடவா ரீர்
ஆசைவெட்க மறியாதா லாடவா ரீர்
ஓசைகொண்ட தெங்குமிங்கே யாடவா ரீர்
உம்மாணை யும்மைவிடே னுடவா ரீர்
காசுபணத் தாசையிலே னுடவா ரீர்
கைபிடித்தாற் போதுமென்றே டாடவா ரீர்
ஏசறனீத் தெனையாண்டீ ராடவா ரீர்
என்னுடைய நாயகரே யாடவா ரீர். ஆடவா ரீர் ௫

சன்மார்க்க நெறிவைத்தீ ராடவா ரீர்
சாகாத வரந்தந்தீ ராடவா ரீர்
கன்மார்க்க மனங்கரைத்தீ ராடவா ரீர்
கண்ணிசைந்த கணவரேநீ ராடவா ரீர்
சொன்மார்க்கப் பொருளானீ ராடவா ரீர்
சுத்தவருட் சோதியரே யாடவா ரீர்
என்மார்க்க முளத்துகந்தீர் ஆடவா ரீர்
என்னுடைய நாயகரே யாடவா ரீர். ஆடவா ரீர் ௬

அண்டமெலாங் கண்டவரே யாடவா ரீர்
அகண்டபரி பூரணரே யாடவா ரீர்
பண்டமெலாம் படைத்தவரே யாடவா ரீர்
பற்றொருவீ டில்லவரே யாடவா ரீர்
கொண்டெனைவந் தாண்டவரே யாடவா ரீர்
கூத்தாட வல்லவரே யாடவா ரீர்
எண்டகுபொற் சபையுடையீ ராடவா ரீர்
என்னுடைய நாயகரே யாடவா ரீர். ஆடவா ரீர் ௭

பேதநினை யாதுவிரைந் தாடவா ரீர்
பின்பாட்டுக் காலையிதே யாடவா ரீர்
ஓதவுல வாதவரே யாடவா ரீர்
உள்ளாசை பொங்குகின்ற தாடவா ரீர்
சாதலறுத் தெனையாண்டீ ராடவா ரீர்
தனித்தலைமைப் பெரும்பதியீ ராடவா ரீர்
ஏதமறுத் தவர்க்கினியீ ராடவா ரீர்
என்னுடைய நாயகரே யாடவா ரீர். ஆடவா ரீர் ௮

கள்ளமொன்று மறியேனு னாடவா ரீர்
கைகலந்து கொண்டீரென் னோடாடவா ரீர்
உள்ளபடி யுரைக்கின்றே னாடவா ரீர்
உம்மாசை பொங்குகின்ற தாடவா ரீர்

தள்ளரியே னென்னோடிங்கே யாடவா ரீர்
  தாழ்க்கிலிறை யுந்தரியே னாடவா ரீர்
எள்ளலறுத் தாண்டுகொண்ட ராடவா ரீர்
  என்னுடைய நாயகரே யாடவா ரீர். ஆடவா ரீர் ௯

நச்சுகின்றே னிச்சலிங்கே யாடவா ரீர்
  நாணமச்சம் விட்டேனென்னோ டாடவா ரீர்
விச்சையெலாந் தந்துகளித் தாடவா ரீர்
  வியந்துரைத்த தருணமிதே யாடவா ரீர்
எச்சுகமு மாகிநின்றீ ராடவா ரீர்
  எல்லாஞ்செய் வல்லவரே யாடவா ரீர்
இச்சைமய மாயிருந்தே னாடவா ரீர்
  என்னுடைய நாயகரே யாடவா ரீர். ஆடவா ரீர் ௧௦

என்னுயிருக் குயிரானீ ராடவா ரீர்
  என்னறிவுக் கறிவானீ ராடவா ரீர்
என்னுடையென் பிற்கலந்தீ ராடவா ரீர்
  என்னுடையுள் ளத்திருந்தீ ராடவா ரீர்
என்னுரிமைத் தாயனையீ ராடவா ரீர்
  எனதுதனித் தந்தையரே யாடவா ரீர்
என்னொருமைச் சற்குருவே யாடவா ரீர்
  என்னுடைய நாயகரே யாடவா ரீர்.

ஆடவா ரீர்என்னோ டாடவா ரீர்
அம்பலத்தி லாடுகின்றீ ராடவா ரீர்.[187] ௧௧

திருச்சிற்றம்பலம்

---

187. மூலத்தில் திருப்பாடல்களின் இறுதியில் பல்லவியைத் திருப்பி எழுதியபோது, அதன் இரண்டாவது அடியில், 2, 3, 6, 7, 8, 9-ம் திருப்பாடல்கள் சார்பாக "அம்பலத்தே யாடுகின்றீர்" என்றும், 4, 5, 11-ம் திருப்பாடல்கள் சார்பாக "அம்பலத்தி லாடுகின்றீர்" என்றும் எழுதியிருக்கிறது. 10-வது திருப்பாடலின் இறுதியில் பல்லவி குறிக்கவில்லை. 183, 185, 186-வது அடிக்குறிப்புக்களைப் பார்க்க.

## 4. அம்பலவாணர் அணைய வருகை[188]

திருச்சிற்றம்பலம்

### பல்லவி

*அணையவா ரீர்என்னை அணையவா ரீர்*
*அணிவளர்சிற் றம்பலத்தீர் அணையவா ரீர்.*[189]

### சரணங்கள்

*இயற்கையுண்மை வடிவினரே யணையவா ரீர்*
*எல்லாஞ்செய் வல்லவரே யணையவா ரீர்*
*இயற்கைவிளக் கத்தவரே யணையவா ரீர்*
*எல்லார்க்கும் நல்லவரே யணையவா ரீர்*

---

188. 183-வது அடிக்குறிப்பைப் பார்க்க. இத் திருப்பாடலும் அப்படியே.

189. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும்:—

(i) ஸாவேரி—மிச்ர சாபு

(ii) பல்லவி

அ ணை ய வா | ரீ ரென் னை ||
ஸ ரீ மா மா | பாம தப தா ||

அ ணை ய வா | ரீர் ||
ப மா பா தா | தபமகரீஸா ||

அ ணி வ ளர் | சிற் றம் ப ||
ஸ ரி கா ரீ | ஸரிக ஸா ஸா ||

லத் தீர் அ | ணை ய வா ரீர் ||
ஸரீ மா மா | ப மா பமா தாபா ||

இயற்கையின்ப மானவரே யணையவா நீர்
  இறைமையெலா முடையவரே யணையவா நீர்
இயற்கைநிறை வானவரே யணையவா நீர்
  என்னுடைய நாயகரே யணையவா நீர். அணையவா நீர் க

உலகமெல்லாம் உடையவரே யணையவா நீர்[190]
  உண்மையுரைக் கின்றவரே யணையவா நீர்
கலகமறுத் தாண்டவரே யணையவா நீர்
  கண்ணனைய காதலரே யணையவா நீர்
அலகறியாப் பெருமையரே யணையவா நீர்
  அற்புதப்பொற் சோதியரே யணையவா நீர்
இலகுசபா பதியவரே யணையவா நீர்
  என்னுடைய நாயகரே யணையவா நீர். அணையவா நீர் உ

---

சரணம்

(முதல் இரண்டு வரிகளுக்கும் மேற்கண்ட ஸ்வரங்களே.)

இ யற் கை வி | ளக் கத் த வ ||
ப மா பா தா | ஸா ஸா ஸா ஸா ||

ரே ய ணை | ய வா நீர் ||
ஸ்ரீ க்ஸ் ரீ | ஸா நித பதா ||

எல் லார்க் கும் | நல் ல வ |
பதா ரீ ஸா | நித பா தா |

ரே ய ணை | ய வா நீர் ||
பதா நீ பதா | தபமா கரீ ஸா ||

190. மூலத்தில் "உலகமெல்லாம்" என்னும் இத்திருப் பாடலின் இறுதியில் உள்ள பல்லவியின் இரண்டாவது அடியில் "அணிகிளர்" என்றும், "கலந்து கொள்" என்னும் கடைசித் திருப்பாடலின் இறுதியில் பல்லவி திருப்பி எழுதப்பட்டிருப்பதில் "இயற்கை யுண்மை" என்னும் முதல் திருப்பாடலுக்குக் குறித் திருப்பது போல் "அணிவளர்" என்றும் எழுதப்பட்டிருக்கிறது.

பொதுவினடிக் கின்றவரே யணையவா ரீர்
பொற்புடைய புண்ணியரே யணையவா ரீர்
மதுவிலினிக் கின்றவரே யணையவா ரீர்
மன்னியவென் மன்னவரே யணையவா ரீர்
விதுவினமு தானவரே யணையவா ரீர்
மெய்யுரைத்த வித்தகரே யணையவா ரீர்
இதுதருண மிறையவரே யணையவா ரீர்
என்னுடைய நாயகரே யணையவாரீர். அணையவா ரீர் ௩

வினைமாலை நீத்தவரே யணையவா ரீர்
வேதமுடிப் பொருளவரே யணையவா ரீர்
அனைமாலைக் காத்தவரே யணையவா ரீர்
அருட்பெருஞ்சோ திப்பதியீ ரணையவா ரீர்
புனைமாலை வேய்ந்தவரே யணையவா ரீர்
பொதுவினிறை பூரணரே யணையவா ரீர்
எனைமாலை யிட்டவரே யணையவா ரீர்
என்னுடைய நாயகரே யணையவா ரீர். அணையவா ரீர் ௪

சிறுவயதி லெனைவிழைந்தீ ரணையவா ரீர்
சித்தசிகா மணியேநீ ரணையவா ரீர்
உறுவயதிங் கிதுதருண மணையவா ரீர்
உண்மைசொன்ன வுத்தமரே யணையவா ரீர்
பொறுமைமிக வுடையவரே யணையவா ரீர்
பொய்யாத வாசகரே யணையவா ரீர்
இறுதிதவிர்த் தாண்டவரே யணையவா ரீர்
என்னுடைய நாயகரே யணையவா ரீர். அணையவா ரீர் ரு

சாதிமதந் தவிர்த்தவரே யணையவா ரீர்
தனித்தலைமைப் பெரும்பதியீ ரணையவா ரீர்
ஆதியந்த மில்லவரே யணையவா ரீர்
ஆரணங்கள் போற்றநின்றீ ரணையவா ரீர்

ஓதியுணர் வரியவரே யணையவா ரீர்
உள்ளபடி யுரைத்தவரே யணையவா ரீர்
ஈதிசைந்த தருணமிங்கே யணையவா ரீர்
என்னுடைய நாயகரே யணையவா ரீர். அணையவா ரீர் ௬

அன்பாட்டை விழைந்தவரே யணையவா ரீர்
அருட்சோதி வடிவினரே யணையவா ரீர்
துன்பாட்டை யொழித்தவரே யணையவா ரீர்
துரியநிறை பெரியவரே யணையவா ரீர்
பின்பாட்டுக் காலையிதே யணையவா ரீர்
பிச்சேற்று கின்றவரே யணையவா ரீர்
என்பாட்டை யேற்றவரே யணையவா ரீர்
என்னுடைய நாயகரே யணையவா ரீர். அணையவா ரீர் ௭

அரைக்கணமுந் தரியேனு னணையவா ரீர்
ஆணையும்மே லாணையென்னை யணையவா ரீர்
புரைக்கணங்கண் டறியேனு னணையவா ரீர்
பொன்மேனிப் புண்ணியரே யணையவா ரீர்
வரைக்கணஞ்செய் வித்தவரே யணையவா ரீர்
மன்றில்நடிக் கின்றவரே யணையவா ரீர்
இரைக்கணவு தருணமிதே யணையவா ரீர்
என்னுடைய நாயகரே யணையவா ரீர். அணையவா ரீர் ௮

கருணைநடஞ் செய்பவரே யணையவா ரீர்
கண்மணியிற் கலந்தவரே யணையவா ரீர்
அருணிறைசிற் சபையவரே யணையவா ரீர்
அன்பர்குறை தீர்த்தவரே யணையவா ரீர்
தருணமிது விரைந்தென்னை யணையவா ரீர்
சத்தியரே நித்தியரே யணையவா ரீர்
இருணிறைந்தார்க் கறிவரியீ ரணையவா ரீர்
என்னுடைய நாயகரே யணையவா ரீர். அணையவா ரீர் ௯

சேரவும்மே லாசைகொண்டே னணையவா நீர்
திருவுளமே யறிந்ததெல்லா மணையவா நீர்
ஆரெனக்கிங் கும்மையல்லா லணையவா நீர்
அயலறியே னுணையும்மே லணையவா நீர்
ஈரகத்தே னல்லவிங்கே யணையவா நீர்
என்னுசை பொங்குகின்ற தணையவா நீர்
ஏரகத்தே யமர்ந்தருள்வீ ரணையவா நீர்
என்னுடைய நாயகரே யணையவா நீர். அணையவா நீர் கஎ

கலந்துகொள வேண்டுகின்றே னணையவா நீர்
காதல்பொங்கு கின்றதென்னை யணையவா நீர்
புலந்தறியேன் விரைகின்றே னணையவா நீர்
புணர்வதற்குத் தருணமிதே யணையவா நீர்
அலந்தவிடத் தருள்கின்றீ ரணையவா நீர்
அரைக்கணமு மினித்தரியே னணையவா நீர்
இலந்தைநறுங் கனியனையீ ரணையவா நீர்
என்னுடைய நாயகரே யணையவா நீர்.

அணையவா நீரென்னை யணையவா நீர்
அணிவளர்சிற் றம்பலத்தீ ரணையவா நீர்.[191]		கஅ

திருச்சிற்றம்பலம்

ச. வருகைப்பாடல்கள் முற்றுப் பெற்றன.

---

191. "பொதுவினடிக் கின்றவரே" என்னும் மூன்றாவது திருப்பாடலின் இறுதியிலும் அதை அடுத்து வரும் ஏழு திருப் பாடல்களின் இறுதியிலும் திருப்பி எழுதியுள்ள பல்லவியின் இரண்டாவது அடியில் "அணிகிளர்" என்ற பாடமே உண்டு. 188, 190-வது அடிக் குறிப்புகளைப் பார்க்க.

## ரு. ஆனந்தக் களிப்புகள்

### 1. நல்ல மருந்து[192]

திருச்சிற்றம்பலம்

**பல்லவி**

நல்ல மருந்திம் மருந்து—சுகம்
நல்கும் வைத்திய நாத மருந்து.[193]

**சரணங்கள்**

அருள்வடி வான மருந்து—நம்முள்
அற்புத மாக அமர்ந்த மருந்து
இருளற வோங்கும் மருந்து—அன்பர்க்
கின்புரு வாக இருந்த மருந்து. நல்ல க

---

192. ஸ்ரீ தருமலிங்க பிள்ளை அவர்கள் எழுதியுள்ள ஏட்டுப் பிரதியே இத்திருப்பாடலுக் காதாரம்.

193. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும்:—

(i) நாதராமக்கிரியை—மிச்ர சாபு

(ii) பல்லவி

நல் ல ம | ருந் திம் ம |
நீ ஸா ரீ | மா கா ரீ |

ருந் து | ,, சு கம் ||
கா மகரீ | கா ரீ ஸா ||

நல் கும் | வைத் திய | நா த ம | ருந் து ||
மா மாமா | மா மா | கா ரீ நி | ஸரீ கா ||

சரணம்

(முதல் மூன்று வரிகளுக்கும் மேற்கண்ட ஸ்வரங்களே.)

இன் பு ரு | வா க இ | ருந் த ம | ருந் து ||
பத நித ப | பாதா ப ம | கா ரி கீ | ஸரிகா ||

சஞ்சலந் தீர்க்கும் மருந்து—எங்குந்
 தானேதா னாகித் தழைக்கும் மருந்து
அஞ்சலென் றாளும் மருந்து—சச்சி
 தானந்த மாக அமர்ந்த மருந்து. நல்ல உ

வித்தக மான மருந்து—சதுர்
 வேத முடிவில் விளங்கு மருந்து
தத்துவா தீத மருந்து—என்னைத்
 தானாக்கிக் கொண்ட தயாள மருந்து. நல்ல ௩

பிறப்பை யொழிக்கு மருந்து—யார்க்கும்
 பேசப் படாத பெரிய மருந்து
இறப்பைத் தவிர்க்கும் மருந்து—என்னுள்
 என்று மதுரித் தினிக்கு மருந்து. நல்ல ௪

நாதமு வாகு மருந்து—பர
 ஞான வெளியில் நடிக்கு மருந்து
மோந வடிவா மருந்து—சீவன்
 முத்த ருளத்தே முடிக்கு மருந்து. நல்ல ௫

புத்தமு தாகு மருந்து—பார்த்த
 போதே பிணிகளைப் போக்கு மருந்து
பத்த ரருந்து மருந்து—அநு
 பானமுந் தானும் பரம மருந்து. நல்ல ௬

மாலயன் தேடு மருந்து—முன்ன
 மார்க்கண்ட ரைக்காக்க வந்த மருந்து
காலனைச் சாய்த்த மருந்து—தேவர்
 காணுங் கனவினுங் காணா மருந்து. நல்ல ௭

தற்பர யோக மருந்து—உப
 சாந்த ருளத்திடைச் சார்ந்த மருந்து
சிற்பர யோக மருந்து—உயர்
 தேவரெல் லாந்தொழுந் தெய்வ மருந்து. நல்ல ௮

அம்பலத் தாடு மருந்து—பர
மாநந்த வெள்ளத் தழுத்து மருந்து
எம்பல மாகு மருந்து—வேளூர்
என்னுந் தலத்தி லிருக்கு மருந்து. நல்ல ௯

சேதப்ப டாத மருந்து—உண்டால்
தேன்போ லினிக்குந் தெவிட்டா மருந்து
பேதப்ப டாத மருந்து—மலைப்
பெண்ணிடங் கொண்ட பெரிய மருந்து. நல்ல ௰

ஆர்க்கு மரிதா மருந்து—தானே
ஆதி யநாதியு மான மருந்து
சேர்க்கும் புனித மருந்து—தன்னைத்
தேடுவோர் தங்களை நாடு மருந்து. நல்ல ௧௧

புண்ணியர்க் கான மருந்து—பரி
பூரண மாகப் பொருந்து மருந்து
எண்ணிய வின்ப மருந்து—எம
தெண்ணமெல் லாமுடித் திட்ட மருந்து. நல்ல ௧௨

பால்வண்ண மாகு மருந்து—அதில்
பச்சை நிறமும் படர்ந்த மருந்து
நூல்வண்ண நாடு மருந்து—உள்ளே
நோக்குகின் றோர்களை நோக்கு மருந்து. நல்ல ௧௩

பார்க்கப் பசிபோ மருந்து—தன்னைப்
பாராத வர்களைச் சேரா மருந்து
கூர்க்கத் தெரிந்த மருந்து—அநு
கூல மருந்தென்று கொண்ட மருந்து. நல்ல ௧௪

கோதிலா தோங்கு மருந்து—அன்பர்
கொள்ளைகொண் டுண்ணக் குலாவு மருந்து
மாதொரு பாக மருந்து—என்னை
வாழ்வித்த என்கண் மணியா மருந்து. நல்ல ௧௫

ஏக வுருவா மருந்து—மிக்க
ஏழைக ளுக்கும் இரங்கு மருந்து
சோகந் தவிர்க்கு மருந்து—பரஞ்
சோதியென் றன்பர் துதிக்கு மருந்து. நல்ல கரு

கோமளங் கூடு மருந்து—நலங்
கொடுக்கத் துசங்கட்டிக் கொண்ட மருந்து
நாமளா வாத மருந்து—நம்மை
நாமறி யும்படி நண்ணு மருந்து. நல்ல கஎ

செல்வந் தழைக்கு மருந்து—என்றுந்
தீரா வினையெலாந் தீர்த்த மருந்து
நல்வந் தனைகொள் மருந்து—பர
நாதாந்த வீட்டினுள் நண்ணு மருந்து. நல்ல கஅ

வாய்பிடி யாத மருந்து—மத
வாதமும் பித்தமு மாய்க்கு மருந்து
நோய்பொடி யாக்கு மருந்து—அன்பர்
நோக்கிய நோக்கினுள் நோக்கு மருந்து. நல்ல கக

பெண்ணாசை தீர்க்கு மருந்து—பொருட்
பேராசை யெல்லாம் பிளக்கு மருந்து
மண்ணாசை தீர்க்கு மருந்து—எல்லாம்
வல்ல மருந்தென்று வாழ்த்து மருந்து. நல்ல உ0

என்றுங் கெடாத மருந்து—வரும்
எல்லாப் பிணிக்கு மிதுவே மருந்து
துன்றுஞ் சிவோக மருந்து—நம்மைச்
சூழ்ந்திரு மைக்குந் துணையா மருந்து. நல்ல உக

கண்ணொளி காட்டு மருந்து—அம்மை
கண்டு கலந்து களிக்கு மருந்து
விண்ணொளி யாகு மருந்து—பர
வீடு தருங்கங்கை வேணி மருந்து. நல்ல உஉ

8

காயாம்பூ வண்ண மருந்து—ஒரு
கஞ்ச மலர்மிசைக் காணு மருந்து
தாயாங் கருணை மருந்து—சிற்
சதாசிவ மானமெய்ஞ் ஞான மருந்து. நல்ல உங

அளவைக் கடந்த மருந்து—யார்க்கும்
அருமை யருமை யருமை மருந்து
உளவிற் கிடைக்கு மருந்து—ஒன்றும்
ஒப்புயர் வில்லா துயர்ந்த மருந்து. நல்ல உச

தன்மய மாகு மருந்து—சிவ
சாதனர் நெஞ்சில் தழைக்கு மருந்து
சின்மய ஜோதி மருந்து—அட்ட
சித்தியு முத்தியுஞ் சேர்க்கு மருந்து. நல்ல உரு

மறந்தா லொளிக்கு மருந்து—தன்னை
மறவா தவருள் வழங்கு மருந்து
இறந்தா லெழுப்பு மருந்து—எனக்
கென்றுந் துணையா யிருக்கு மருந்து. நல்ல உசா

கரும்பி லினிக்கு மருந்து—கடுங்
கண்டகர்க் கெல்லாங் கசக்கு மருந்து
இரும்பைக் குழைக்கு மருந்து—பே
ரின்ப வெள்ளத்தே யிழுக்கு மருந்து. நல்ல உஎ

அணிமணி கண்ட மருந்து—அருள்
ஆநந்த சுத்த வகண்ட மருந்து
பிணிதவி ரின்ப மருந்து—யார்க்கும்
பேசா மருந்தென்று பேசு மருந்து. நல்ல உஅ

மூவர்க் கரிய மருந்து—செல்வ
முத்துக் குமாரனை யீன்ற மருந்து
நாவிற் கினிய மருந்து—தைய
லுமையகி கண்டு தழுவு மருந்து.

நல்ல மருந்திம் மருந்து—சுகம்
நல்கும் வைத்திய நாத மருந்து.

திருச்சிற்றம்பலம்

---

## 2. ஞான மருந்து[194]

திருச்சிற்றம்பலம்

### பல்லவி

ஞான மருந்திம் மருந்து—சுகம்
நல்கிய சிற்சபா நாத மருந்து.[195]

### சரணங்கள்

அருட்பெருஞ் ஜோதி மருந்து—என்னை
ஐந்தொழில் செய்தற் களித்த மருந்து
பொருட்பெரும் போக மருந்து—என்னைப்
புறத்தும் அகத்தும் புணர்ந்த மருந்து. ஞான க

எல்லாஞ்செய் வல்ல மருந்து—என்னுள்
என்றும் விடாமல் இனிக்கு மருந்து
சொல்லால் அளவா மருந்து—சுயஞ்
ஜோதி யருட்பெருஞ் ஜோதி மருந்து. ஞான உ

காணாது காட்டு மருந்து—என்றன்
கையிற்பொற் கங்கணங் கட்டு மருந்து
ஆணாகிப் பெண்ணாம் மருந்து—அது
வாகி மணிமன்றி லாடு[196] மருந்து. ஞான ௩

---

194. இத்திருப்பாடலுக்காதாரம் அன்பர்கள் கையெழுத்தி லுள்ள ஐந்து பிரதிகளாகும்.

195. "நல்ல மருந்து" என்னும் திருப்பாடலுக்குக் குறித்திருக்கும் இராக தாள ஸ்வரங்களையே இத் திருப்பாடலுக்கும் கொள்க. 193-வது அடிக்குறிப்பைப் பார்க்க.

196. மன்றுளாடு—பி.ம்.

சுத்தசன் மார்க்க மருந்து — அருட்
　　சோதி மலையில் துலங்கு மருந்து
சித்துரு வான மருந்து — என்னைச்
　　சித்தெலாஞ் செய்யச்செய் வித்த மருந்து. ஞான ௪

அன்பர்க்[197] கெளிய மருந்து — மற்றை
　　ஐவர்க்குங் காண்டற் கரிய மருந்து
என்பற்றி[198] லோங்கு மருந்து — என்னை
　　இன்ப நிலையி லிருத்து மருந்து. ஞான ௫

நாதாந்த நாட்டு மருந்து — பர
　　ஞான வெளியில் நடிக்கு மருந்து
போதாந்தர்க் கெய்து மருந்து — என்னுள்
　　பொன்னடி காட்டிப் புணர்ந்த மருந்து. ஞான ௬

ஆதி அனாதி மருந்து — திரு
　　அம்பலத் தேநட மாடு மருந்து
ஜோதி மயமா மருந்து — என்னைச்
　　சோதியா தாண்ட துரிய மருந்து. ஞான ௭

ஆநந்தத்[199] தோங்கு மருந்து — அதற்
　　கப்பாலுக் கப்பாலு மான மருந்து
ஊறந்த[200] மில்லா மருந்து — எனக்
　　குள்ளே கலந்த உறவா மருந்து. ஞான ௮

என்னுயிர்க் கன்பா மருந்து — கலந்
　　தென்னுயிர்க் குள்ளே யிருந்த மருந்து
என்னுயிர் காக்கு மருந்து — என்றும்
　　என்னுயி ராகிய இன்ப மருந்து. ஞான ௯

என்னறி வுட்கொள் மருந்து — என்றும்
　　என்னறி வாகி யிலங்கு மருந்து
என்னறி வின்ப மருந்து — என்னுள்
　　என்னறி வுக்கறி வென்னு மருந்து. ஞான ௧௦

---

197. அமரர்க்கு—பி-ம். 198. இன்பத்தி—பி-ம்.
199. ஆனந்த—பி-ம். 200. ஊனந்த—பி-ம்.

என்குரு வான மருந்து — என்றும்
என்தெய்வ மாகி யிருக்கு மருந்து
என்னன்னை யென்னு மருந்து — என்றும்
என்தந்தை யாகிய வின்ப மருந்து. ஞான கக

என்பெரு வாழ்வா மருந்து — என்றும்
என்செல்வ மாகி யிருக்கு மருந்து
என்னுயிர் நட்பா மருந்து — எனக்
கெட்டெட்டுச் சித்தியு மீந்த மருந்து. ஞான கஉ

என்னிறை யான மருந்து — மகிழ்ந்
தெனக்குத்தன் பொன்மேனி யீந்த மருந்து
தன்னறி வாகு மருந்து — என்னைத்
தந்த மருந்தென்றன் சொந்த மருந்து. ஞான கங

உள்ளத்தி னுள்ளா மருந்து — என்றன்
உயிருக் கனுதி யுறவா மருந்து
தெள்ளத் தெளிக்கு மருந்து — என்னைச்
சிவமாக்கிக் கொண்ட சிவாய மருந்து. ஞான கச

மெய்ப்பொரு ளென்னு மருந்து — எல்லா
வேதா கமத்தும் விளங்கு மருந்து
கைப்பொரு ளான மருந்து — மூன்று
கண்கொண்ட என்னிரு கண்ணுண் மருந்து. ஞான கரு

மதியில் விளைந்த மருந்து — யார்க்கும்
மதிக்கப்ப டாதபொன் வண்ண மருந்து
கதிதரு மின்ப மருந்து — அருட்
கண்ணாலென் றன்னைக் கலந்த மருந்து. ஞான கசு

கற்பூர ஜோதி மருந்து — பசுங்
கற்பூர நன்மணங் காட்டு மருந்து
பொற்பூவி னோங்கு மருந்து — என்தற்[201]
போதந் தவிர்த்த[202]சிற் போத மருந்து. ஞான கஎ

201. என்மன — பி-ம். 202. போத மொழித்த — பி-ம்.

மேலை வெளியா மருந்து—நான்
வேண்டுந்தோ றெல்லாம் விளையு மருந்து
சாலை விளக்கு மருந்து—சுத்த
சமரச சன்மார்க்க சங்க மருந்து. ஞான கஅ

என்னைத்தா னாக்கு மருந்து—இங்கே
இறந்தாரை யெல்லா மெழுப்பு மருந்து
துன்னுமெய்ச் சோதி மருந்து—அருட்
சோதியா லென்னைத் துலக்கு மருந்து. ஞான கசு

பொய்யர்க் கரிதா மருந்து—என்னைப்
புறத்தும் அகத்தும் புணர்ந்த மருந்து
கையிற் கிடைத்த மருந்து—சிவ
காமக் கொடியைக் கலந்த மருந்து. ஞான உ0

ஆணவந் தீர்க்கு மருந்து—பர
மானந்தத் தாண்டவ மாடும் மருந்து
மாணவ வண்ண மருந்து—என்னை
வலிய வழைத்து வளர்க்கு மருந்து. ஞான உக

வானடு வான மருந்து—என்னை
மாமணி மேடைமேல் வைத்த மருந்து
ஊனந் தவிர்த்த மருந்து—கலந்
துள்ளே யினிக்கின்ற வுண்மை மருந்து. ஞான உஉ

மலையிலக் கான மருந்து—என்றன்
மறைப்பைத் தவிர்த்தமெய் வாழ்க்கை மருந்து
கலைநலங் காட்டு மருந்து—எங்குங்
கண்ணுகிக் காணுங் கனத்த மருந்து. ஞான உங

அற்புத ஜோதி மருந்து—எல்லாம்
ஆகியன் றாகி யமர்ந்த மருந்து
தற்பதந் தந்த மருந்து—எங்குந்
தானேதா னாகித் தனித்த மருந்து. ஞான உச

தன்னை யளித்த மருந்து—என்றுஞ்
சாகாத நல்வரந் தந்த மருந்து
பொன்னடி யீந்த மருந்து—அருட்
போனகந் தந்த புனித மருந்து. ஞான உரு

கண்ணுக் கினிய மருந்து—என்றன்
கைப்பொரு ளாந்தங்கக் கட்டி மருந்து
எண்ணுக் கடங்கா மருந்து—என்னை
ஏதக்குழிவிட் டெடுத்த மருந்து. ஞான உசு

சுட்டப் படாத மருந்து—என்றன்
தூக்கமுஞ் சோர்வுந் தொலைத்த மருந்து
எட்டுதற் கொண்ணு மருந்து—நான்
எட்டிப் பிடிக்க விசைந்த மருந்து. ஞான உஎ

உன்னற் கரிதா மருந்து—எனக்
குள்ளும் புறத்தும் உலாவு மருந்து
தன்னந் தனித்த மருந்து—சுத்தச்
சாக்கிரா தீதச் சபேச மருந்து. ஞான உஅ

ஒன்றிலொன் றான மருந்து—அந்த
ஒன்றி லிரண்டாகி யோங்கு மருந்து
அன்றிமூன் றான மருந்து—நான்
காகியைந் தாகி யமர்ந்த மருந்து. ஞான உகூ

வெளிக்குள் வெளியா மருந்து—எல்லா
வெளியுங் கடந்து விளங்கு மருந்து
ஒளிக்குள் ளொளியா மருந்து—எல்லா
ஒளியுந்தா னாகிய வுண்மை மருந்து. ஞான ௩0

ஆறாறுக் கப்பான் மருந்து—அதற்
கப்புறத் தீராறுக் கப்பான் மருந்து
ஈறுதி யில்லா[203] மருந்து—என்னை
எல்லாஞ் செயச்செய்த வின்ப மருந்து. ஞான ௩க

203. யல்லா, யெல்லா—பி-ம்.

ஆரணத் தோங்கு மருந்து — அருள்
ஆகம மாகிஅண் ணிக்கு மருந்து
காரணங் காட்டு மருந்து — எல்லாங்
கண்ட மருந்தென்னுட் கொண்ட மருந்து. ஞான ௩௨

மலமைந்து நீக்கு மருந்து — புவி
வானண்ட மெல்லாம் வளர்க்கு[204] மருந்து
நலமிக் கருளு மருந்து — தானே
நானுகித் தானுளு நாட்டு மருந்து.

ஞான மருந்திம் மருந்து — சுகம்
நல்கிய சிற்சபா நாத மருந்து.[205] ௩௩

திருச்சிற்றம்பலம்

## 3. சிவசிவ ஜோதி[206]

திருச்சிற்றம்பலம்

### பல்லவி

சிவசிவ சிவசிவ ஜோதி — சிவ
சிவசிவ சிவசிவ சிவசிவ ஜோதி
சிவசிவ சிவசிவ ஜோதி.[207]

---

204. அளிக்கும்—பி-ம்.

205. இரண்டு பிரதிகளில் முதலிலும் இறுதியிலும் பல்லவியின் மூன்முவது வரியாகப் பின்னும் "ஞான மருந்திம் மருந்து" என்றெழுதி யிருக்கிறது.

206. இதற்குக் கிடைத்த அன்பர்கள் கையெழுத்துப்பிரதிகள் நான்கு. அவற்றுள் இரண்டில் "ஆனந்தக் களிப்பு" என்று இதன் தலைப்பு எழுதப்பட்டிருக்கிறது. பிரதிகளில் "சோதி" என்றிருப்பதை வழங்கும் உச்சரிப்பைத் தழுவி இங்கு "ஜோதி" என்று கொண்டிருக்கிறது.

207. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும்:—
(i) அஸாவேரி—ஆதி

சரணங்கள்

சிற்பர மாம்பரஞ் ஜோதி—அருட்
சித்தெல்லாம் வல்ல சிதம்பர ஜோதி
தற்பர தத்துவ ஜோதி—என்னைத்
தானாக்கிக் கொண்ட தயாநிதி ஜோதி. சிவ க

சித்துரு வாஞ்சுயஞ் ஜோதி—எல்லாஞ்
செய்திட வல்ல சிதம்பர ஜோதி
அத்துவி தானந்த ஜோதி—என்னை
ஆட்கொண் டருளுஞ்சிற் றம்பல ஜோதி. சிவ உ

சின்மய மாம்பெருஞ் ஜோதி—அருட்
செல்வ மளிக்குஞ் சிதம்பர ஜோதி
தன்மய மாய்நிறை ஜோதி—என்னைத்
தந்தமெய் ஜோதி சதானந்த ஜோதி. சிவ ௩

ஆதியீ றில்லாமுற் ஜோதி—அரன்
ஆதியர் தம்மை யளித்தபிற் ஜோதி
ஓதி யுணர்வருஞ் ஜோதி—எல்லா
உயிர்களி னுள்ளு மொளிர்கின்ற ஜோதி. சிவ ௪

---

(ii) பல்லவி

| சி | வ | சி | வ | சி | வ | சி | வ |
|---|---|---|---|---|---|---|---|
| ரீ | ரீ | மா | மா | பா | பா | தா | பா |

| ஜோ | தி | ,, | சி | வ |
|---|---|---|---|---|
| பா | பாப | மதபம | கா | ரீஸ |

| சி | வ | சி | வ | சி | வ | சி | வ |
|---|---|---|---|---|---|---|---|
| ஸரி | கா | ரீ | ஸ | ஸரி | நீ | ஸா | ஸா |

| சி | வ | சி | வ | ஜோ | தி |
|---|---|---|---|---|---|
| ரீ | மா | பா | பா | மதபமா | காரிஸ |

| சி | வ | சி | வ | சி | வ | சி | வ |
|---|---|---|---|---|---|---|---|
| ரி | ரீ | மா | மா | பா | பா | தா | பா |

| ஜோ | தி | ,, | ,, |
|---|---|---|---|
| பாமா | பா | பா | ,, |

மன்னிய பொன்வண்ண ஜோதி—சுக
வண்ணத்த தாம்பெரு மாணிக்க ஜோதி
துன்னிய வச்சிர ஜோதி—முத்து
ஜோதி மரகத ஜோதியுட் ஜோதி. சிவ ரு

பார்முத லைந்துமாஞ் ஜோதி—ஐந்திற்
பக்கமேல் கீழ்நடுப் பற்றிய ஜோதி
ஓரைம் பொறியுரு ஜோதி—பொறிக்
குள்ளும் புறத்தும் ஒளிர்கின்ற ஜோதி. சிவ சு

ஐம்புல மூந்தானுஞ் ஜோதி—புலத்
தகத்தும் புறத்து மலர்ந்தொளிர் ஜோதி
பொய்ம்மயல் போக்குமுட் ஜோதி—மற்றைப்
பொறிபுலன் உள்ளும் புறத்துமாஞ் ஜோதி. சிவ எ

மனமாதி யெல்லாமாஞ் ஜோதி—அவை
வாழ அகம்புறம் வாழ்கின்ற ஜோதி
இனமான உள்ளக ஜோதி—சற்றும்
ஏறு திறங்கா தியக்குமோர் ஜோதி. சிவ அ

முக்குண மும்மூன்றுஞ் ஜோதி—அவை
முன்பின் னியங்க முடுக்கிய ஜோதி
எக்குணத் துள்ளுமாஞ் ஜோதி—குணம்
எல்லாங் கடந்தே யிலங்கிய[208] ஜோதி. சிவ கூ

பகுதிமூன் றாகிய ஜோதி—மூலப்
பகுதிகள் மூன்றும் படைத்தருள் ஜோதி
விகுதி பலவாக்குஞ் ஜோதி—சற்றும்
விகுதியொன் றின்றி விளக்கிய ஜோதி. சிவ க0

கால முதற்காட்டுஞ் ஜோதி—கால
காரணத் தப்பால் கடந்தொளிர் ஜோதி
கோலம் பலவாகுஞ் ஜோதி—ஒன்றுங்
குறிக்கப் படாச்சிற் குணப்பெருஞ் ஜோதி[209]. சிவ கக

---

208. இயங்கிய—பி - ம்.
209. குறிக்கப் படாசகசிற் றம்பலச் சோதி—பி - ம்.

தத்துவ மெல்லாமாஞ் ஜோதி—அந்தத்
    தத்துவ மெல்லாந் தருவிக்குஞ் ஜோதி
அத்துவி தப்பெருஞ் ஜோதி—எல்லாம்
    அருளில் விளங்க அமர்த்திய ஜோதி. சிவ கஉ

சத்தர்க ளெல்லாமாஞ் ஜோதி—அவர்
    சத்திக ளெல்லாந் தழைப்பிக்குஞ் ஜோதி
மூத்த ரனுபவ ஜோதி—பர
    முத்தியாஞ் ஜோதிமெய்ச் சித்தியாஞ் ஜோதி. சிவ கங

ஆறந்தத் தேநிறை ஜோதி—அவைக்
    கப்புறத் தப்பாலு மாகிய ஜோதி
வீறும் பெருவெளி ஜோதி—மேலும்
    வெட்ட வெளியில் விளங்கிய ஜோதி. சிவ கச

பேரருட் ஜோதியுட் ஜோதி—அண்ட
    பிண்டங்க ளெல்லாம் பிறங்கிய ஜோதி
வாரமுற் றோங்கிய ஜோதி—மன
    வாக்குக் கெட்டாததோர் மாமணி[210] ஜோதி. சிவ கரு

ஒன்றான பூரண ஜோதி—அன்பில்
    ஒன்றாத உள்ளத்தி லொன்றாத ஜோதி
என்று மொளிர்கின்ற ஜோதி—என்னுள்
    என்றும் விளங்கிய என்னுயிர் ஜோதி. சிவ கசு

மெய்யேமெய் யாகிய ஜோதி—சுத்த
    வேதாந்த வீட்டில் விளங்கிய ஜோதி
துய்ய சிவானந்த ஜோதி—குரு
    துரியத் தலத்தே துலங்கிய ஜோதி. சிவ கஎ

சிவமய மாஞ்சுத்த ஜோதி—சுத்த
    சித்தாந்த வீட்டில் சிறந்தொளிர் ஜோதி
உவமையில் லாப்பெருஞ் ஜோதி—என
    துள்ளே நிரம்பி யொளிர்கின்ற ஜோதி. சிவ கஅ

---

210. மாணிக்க—பி - ம்.

என்னைத்தா னாக்கிய ஜோதி—இங்கே
இறந்தாரை யெல்லா மெழுப்புமோர் ஜோதி
அன்னைக்கு மிக்கருட் ஜோதி—என்னை
ஆண்டமு தந்தந்த ஆனந்த ஜோதி. சிவ க௯

சித்தஞ் சிவமாக்குஞ் ஜோதி—நான்
செய்த தவத்தால் தெரிந்தவுட் ஜோதி
புத்தமு தாகிய ஜோதி—சுக
பூரண மாயொளிர் காரண ஜோதி. சிவ உ0

தம்பத்தி லேற்றிய ஜோதி—அப்பால்
சார்மணி மேடைமேல் தான்வைத்த ஜோதி
விம்பப் பெருவெளி ஜோதி—அங்கே
வீதியும் வீடும் விளக்கிய ஜோதி. சிவ உக

சுகமய மாகிய ஜோதி—எல்லா
ஜோதியு மான சொரூபவுட் ஜோதி
அகமிதந் தீர்த்தருள் ஜோதி—சச்சி
தானந்த ஜோதி சதானந்த ஜோதி. சிவ உஉ

நித்த பரானந்த ஜோதி—சுத்த
நிரதிச யானந்த நித்திய ஜோதி
அத்துவி தானந்த ஜோதி—எல்லா
ஆனந்த வண்ணமு மாகிய ஜோதி. சிவ உ௩

பொய்யாத புண்ணிய ஜோதி—எல்லாப்
பொருளும் விளங்கப் புணர்த்திய ஜோதி
ஐயா தருள்செய்த ஜோதி—ஒரு
நானுந்தா னும்மொன்றாய் நண்ணிய ஜோதி. சிவ உ௪

கண்ணிற் கலந்தருள் ஜோதி—உளக்
கண்ணுயிர்க் கண்ணருட் கண்ணுமாஞ் ஜோதி
எண்ணிற் படாப்பெருஞ் ஜோதி—நான்
எண்ணிய வண்ண மியற்றிய ஜோதி. சிவ உ௫

விந்து வொளிநடு ஜோதி—பர
   விந்து வொளிக்குள் விளங்கிய ஜோதி
நந்துயர் தீர்த்தருள் ஜோதி—பர
   நாதாந்த நாட்டுக்கு நாயக ஜோதி. சிவ உசு

தானன்றி யொன்றிலா ஜோதி—என்னைத்
   தன்மய மாக்கிய சத்திய ஜோதி
நானின்று [211] கண்டதோர் ஜோதி—தானே
   நானாகி வாழ்ந்திட நல்கிய ஜோதி. சிவ உஎ

தன்னிக ரில்லதோர் ஜோதி—சுத்த
   சன்மார்க்க சங்கந் தழுவிய ஜோதி
என்னுள் நிறைந்தமெய் ஜோதி—என்னை
   ஐந்தொழில் செய்யென் றேவிய ஜோதி. உஅ

அச்சந் தவிர்த்தமெய் ஜோதி—என்னை
   ஆட்கொண் டருளிய அம்பல ஜோதி
இச்சையெ லாந்தந்த ஜோதி—உயிர்க்
   கிங்குமங் கென்றும லெங்குமாஞ் ஜோதி. சிவ உகூ

காலையில் நான்கண்ட ஜோதி—எல்லாக்
   காட்சியும் நான்காணக் காட்டிய ஜோதி
ஞாலமும் வானுமாஞ் ஜோதி—என்னுள்
   நானாகித் தானாகி நண்ணிய ஜோதி. சிவ ௩0

ஏகாந்த மாகிய ஜோதி—என்னுள்
   என்றும் பிரியா திருக்கின்ற ஜோதி
சாகா வரந்தந்த ஜோதி—என்னைத்
   தானாக்கிக் கொண்டதோர் சத்திய ஜோதி. சிவ ௩க

சுத்த சிவமய ஜோதி—என்னை
   ஜோதி மணிமுடி சூட்டிய ஜோதி
சத்திய மாம்பெருஞ் ஜோதி—நானே
   தானாகி யாளத் தயவுசெய் ஜோதி.

---

211. அன்று—பி - ம்.

சிவசிவ சிவசிவ ஜோதி—சிவ
சிவசிவ சிவசிவ சிவசிவ ஜோதி
சிவசிவ சிவசிவ ஜோதி.[212] கூஉ

திருச்சிற்றம்பலம்

---

## 4. ஜோதியுட் ஜோதி[213]

திருச்சிற்றம்பலம்

### பல்லவி

ஜோதியுட் ஜோதியுட் ஜோதி—சுத்த
ஜோதி சிவஜோதி ஜோதியுட் ஜோதி
ஜோதியுட் ஜோதியுட் ஜோதி.[214]

---

212. இத்திருப்பதிக முடிவில் "திருச்சிற்றம்பலத் தந்தையார் திருவடி வாழ்க" என்று ஓர் பிரதியில் குறித்திருக்கிறது.

213. இத்திருப்பாடலுக்குக் கிடைத்த அன்பர்கள் கையெழுத்துப் பிரதிகள் மூன்று. ஸ்ரீ இறுக்கம் இரத்தின முதலியாரவர்களது பிரதியில் "ஆநந்தக் களிப்பு" என்றும் "சித்து வண்ணம்" என்றும் இதன் தலைப்பில் எழுதியிருக்கிறது. "ஜோதி" என்பதைக் குறித்து 206-வது அடிக்குறிப்பைப் பார்க்க. இதுவுமது.

214. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும்:—

(i) மத்யமாதி—ஆதி

(ii) பல்லவி

ஜோ தி யுட் ஜோ தி யுட் |
ரிமா ரீ ஸ ஸா நி ஸா |

ஜோ தி | ,, ,, சுத் த ||
ரிஸ ரீ | ரீ ரீ ரி ரி ||

ஜோ தி சி வ ஜோ தி |
ரீ ம பா நீ ஸ் ரி |

**சரணங்கள்**

சிவமே பொருளென்று தேற்றி—என்னைச்
சிவவெளிக் கேறுஞ் சிகரத்தி லேற்றிச்
சிவமாக்கிக் கொண்டது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி க

வித்தெல்லா மொன்றென்று நாட்டி—அதில்
விளைவு பலபல வேறென்று காட்டிச்
சித்தெல்லாந் தந்தது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி உ

சொல்வந்த அந்தங்க ளாறும்—ஒரு
சொல்லாலே ஆமென்றச் சொல்லாலே வீறும்[215]
செல்வங் கொடுத்தது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி ௩

தங்கோ லளவெனக் கோதிச்—சுத்த
சமரச சத்திய சன்மார்க்க நீதிச்
செங்கோ லளித்தது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி ௪

ஆபத்தை நீக்கி வளர்த்தே—சற்றும்
அசையாமல் அவியாம லடியே னுளத்தே
தீபத்தை வைத்தது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி ௫

---

ஜோ தி யுட் | ஜோ தி ||
நிஸா நி பாமா | மநிப ரீ ||

ஜோ தி யுட் ஜோ தி யுட் |
ரிம ரீ ஸ ஸா நி ஸா |

ஜோ | தி ,, ||
ரீபம | ரீ ஸா ||

215. தீரும்—பி - ம்.

மெய்யொன்று சன்மார்க்க மேதான் — என்றும்
விளங்கப் படைப்பாதி மெய்த்தொழில் நீதான்
செய்யென்று தந்தது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி ௬

என்பால் வருபவர்க் கின்றே — அருள்
ஈகின்றேன் ஈகின்றேன் ஈகின்றே[216] னென்றே
தென்பா விருந்தது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி ௭

துரியத் தலமூன்றின் மேலே — சுத்தத்
துரியப் பதியி லதுவத னாலே
தெரியத் தெரிவது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி ௮

பரைதூக்கிக் காட்டிய காலே — ஆதி
பரையிவர்க் கப்பாலப் பாலென்று மேலே
திரைதூக்கிக் காட்டுதல் பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி ௯

தற்பர மேவடி வாகி — அது
தன்னைக் கடந்து தனியுரு வாகிச்
சிற்பரத் துள்ளது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி ௰

நவவெளி நால்வகை யாதி — ஒரு
நடுவெளிக் குள்ளே நடத்திய நீதிச்
சிவவெளி யாமிது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி ௧௧

மேருவெற் புச்சியின் பாலே — நின்று
விளங்குமோர் தம்பத்தின் மேலுக்கு மேலே
சேருமோர் மேடைமேற் பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி ௧௨

---

216. ஈகின்றோம் ஈகின்றோம் ஈகின்றோம் — பி. ம.

ஆரண வீதிக் கடையும் — சுத்த
ஆகம வீதிக ளந்தக் கடையும்
சேர நடுக்கடை பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி கரு

பாடல் மறைகளோர் கோடி — அருட்
பாத உருவ சொரூபங்கள் பாடி
தேட இருந்தது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி கச

நீடு சிவாகமங் கோடி — அருள்
நேருறப் பாடியு மாடியு மோடித்
தேட இருந்தது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி கரு

பத்தி நெறியிற் செழித்தே — அன்பிற்[217]
பாடுமெய் யன்பர் பதியிற் பழுத்தே
தித்தித் திருப்பது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி கசு

பித்தாடு[218] மாயைக்கு மேலே — சுத்தப்
பிரம வெளியினிற் பேரரு ளாலே
சித்தாடு கின்றது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி கஎ

தருநெறி யெல்லாமுள் வாங்கும் — சுத்த
சன்மார்க்க மென்றோர் தனிப்பேர்கொண் டோங்குந்
திருநெறிக் கேசென்று பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி கஅ

எம்பொருள் எம்பொரு ளென்றே — சொல்லும்
எல்லாச் சமயத்து ளெல்லார்க்கு மொன்றே
செம்பொரு ளென்பது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி கக

---

217. அன்பால் — பி - ம். 218. பித்தாரு — பி - ம்.

சைவ முதலாக நாட்டும்—பல
சமயங்க ளெல்லாந் தனித்தனிக் காட்டும்
தெய்வ மிதுவந்து பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி ௨0

எள்ளலில் வான்முதல் மண்ணும்—அமு
தெல்லா மிதிலோ ரிறையள வென்னும்
தெள்ளமு தாமிது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி ௨௧

எத்தாலு மாகாதே யம்மா—என்றே
எல்லா உலகு மியம்புதல் சும்மா
செத்தாரை மீட்பது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி ௨௨

பிறந்து பிறந்துழன் றேனை—என்றும்
பிறவா திறவாப் பெருமைதந் தானைச்
சிறந்தொளிர் வித்தது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி ௨௩

வருவித்த வண்ணமும் நானே—இந்த
மாநிலத் தேசெயும் வண்ணமுந் தானே
தெரிவித் தருளிற்றுப் பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி ௨௪

பாரிடம் வானிட மற்றும்—இடம்
பற்றிய முத்தர்கள் சித்தர்கள்[219] முற்றும்
சேரிட மாமிது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி ௨௫

உய்பிள்ளை பற்பல ராவல்—கொண்டே
உலகத் திருப்பவிங் கென்னைத்தன் னேவல்
செய்பிள்ளை யாக்கிற்றுப் பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி ௨௬

---

219. சித்தர்கள் முத்தர்கள்—பி - ம்.

உருவு முணர்வுஞ்செய் நன்றி — அறி
 வுளமு மெனக்கே[220] யுதவிய தன்றித்
திருவுங் கொடுத்தது பாரீர் — திருச்
 சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி உஎ

எண்ணிய எண்ணங்க ளெல்லாம் — நான்
 எண்ணிய வாறே யினிதுதந் தென்னைத்
திண்ணிய னாக்கிற்றுப் பாரீர் — திருச்
 சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி உஅ

பேருல கெல்லா மதிக்கத் — தன்
 பிள்ளையென் றென்னைப் பெயரிட் டழைத்தே[221]
சீருறச் செய்தது பாரீர் — திருச்
 சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

 ஜோதியுட் ஜோதியுட் ஜோதி — சுத்த
 ஜோதி சிவஜோதி ஜோதியுட் ஜோதி
 ஜோதியுட் ஜோதியுட் ஜோதி. உகூ

திருச்சிற்றம்பலம்

---

## 5. ஆடிய பாதம்[222]

திருச்சிற்றம்பலம்

### பல்லவி

ஆடிய பாதமன் றாடிய பாதம்
ஆடிய பாதநின் றாடிய பாதம்.[223] ஆடிய

---

220. எனக்கிங்கு—பி - ம். 221. அழைக்க—பி - ம்.

222. இத் திருப்பாடலுக்குக் கிடைத்த அன்பர்கள் கையெழுத்துப் பிரதிகள் ஐந்து. இவற்றுள் ஸ்ரீ இறுக்கம் இரத்தின முதலியார் அவர்கள் பிரதியிலும் மற்றொரு பிரதியிலும் திருப்பாடலின் தலைப்பில் "ஈரடிமேல் வைப்பு" என்று குறித்திருக்கிறது.

**சரணங்கள்**

பாடிய வேதங்கள் தேடிய பாதம்
 பத்திசெய் பத்தர்க்குத் தித்திக்கும் பாதம்
நாடிய மாதவன்[224] நேடிய பாதம்
 நாதாந்த நாட்டுக்கு நாயக பாதம். ஆடிய க

தீராத வல்வினை தீர்க்கின்ற பாதம்
 தெய்வங்க ளெல்லாந் தெரிசிக்கும் பாதம்
வாரா வரவாகி வந்தபொற் பாதம்
 வஞ்ச மனத்தில் வசியாத பாதம். ஆடிய உ

ஆரா அமுதாகி யண்ணிக்கும் பாதம்
 அன்ப ருளத்தே யமர்ந்தருள் பாதம்
நாரா யணன்விழி நண்ணிய பாதம்
 நான்புனை பாடல் நயந்தபொற் பாதம். ஆடிய ந

---

223. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும்:—

(i) தன்யாசி—சாபு

(ii) **பல்லவி**

ஆ | டி ய || பா | த மன் ||
நிஸா | நீ ஸா || ஸ்நீ | தா பா ||

ரு | டி ய || பா | தம் ||
மபா | மா கா || கமா | பா ; ||

ஆ | டி ய || பா | த நின் ||
மபா | தா பா || மகா | நீ ஸா ||

ரு | டி ய || பா | தம் ||
நிஸநி | தா பா || நிநீ | ஸா ; ||

**சரணம்**

பா | டி ய || வே | தங் கள் ||
மபா | கா மா || பநீ | நித பா ||

தே | டி ய || பா | தம் ||
பநீ | நித பம || மபா | நீ ; ||

நல்லவ ரெல்லாம் நயக்கின்ற பாதம்
நாத முடிவில் நடிக்கின்ற பாதம்
வல்லவர் சொல்லெல்லாம் வல்லபொற் பாதம்
மந்திர யந்திர தந்திர பாதம். ஆடிய ௬

எச்சம யத்து மிலங்கிய பாதம்
எள்ளுக்கு ளெண்ணெய்போ லெங்குமாம் பாதம்
அச்சந் தவிர்த்தென்னை யாட்கொண்ட பாதம்
ஆனந்த நாட்டுக் கதிபதி பாதம். ஆடிய ௭

தேவர்க ளெல்லாருஞ் சிந்திக்கும் பாதம்
தெள்ளமு தாயுளந் தித்திக்கும் பாதம்
மூவருங் காணா முழுமுதற் பாதம்
முப்பாழுக் கப்பால் முளைத்தபொற் பாதம். ஆடிய ௮

துரிய வெளிக்கே யுரியபொற் பாதம்
சுகமய மாகிய சுந்தரப் பாதம்
பெரிய பொருளென்று பேசும் பொற்பாதம்
பேறெல்லாந் தந்த பெரும்புகழ்ப் பாதம். ஆடிய ௯

---

பத் | தி செய் || பத் | தர்க் குத் ||
பநீ | நிப பம || பா, | பா மா ||

தித் | திக் கும் || பா | தம் ||
பா, | நீ நீ || ஸ்ா, | ஸ்ா ; ||

நா | டி ய || மா | த வன் ||
மபா | நீ நீ || ஸ்ம்ா | க்ரி ஸ்ா ||

தே | டி ய || பா | தம் ||
நீ, | ஸ்ா நீ || நிஸ்நி | நிதபா ||

நா | தாந் த || நாட் | டுக் கு ||
பா, | ஸ்ா ஸ்ா || நிஸ்நி | பா மா ||

நா | ய க || பா | தம் || ( ஆ )
மபா | மக மா || பநிம | பநிஸ்ா || (நிஸ்ா)

224. மாதவர்—பி - ம்.

சாகா வரந்தந்த தாரகப் பாதம்
சச்சிதா னந்த சதோதய பாதம்
தேகாதி யெல்லாஞ் சிருட்டிக்கும் பாதம்
திதிமுத லைந்தொழில் செய்கின்ற பாதம். ஆடிய ௮

ஓங்கார பீடத் தொளிர்கின்ற பாதம்
ஒன்று யிரண்டாகி[225] யோங்கிய பாதம்
தூங்காத தூக்கத்திற் றூக்கிய பாதந்
துரியத்தி லூன்றித் துலங்கிய பாதம். ஆடிய ௯

ஐவண்ண முங்கொண்ட அற்புதப் பாதம்
அபய[226] ரெல்லார்க்கு மமுதான பாதம்
கைவண்ண நெல்லிக் கனியாகும் பாதங்
கண்ணுங் கருத்துங் கலந்தபொற் பாதம். ஆடிய ௰

ஆருயிர்க் காதார மாகிய பாதம்
அண்ட பிண்டங்க ளளிக்கின்ற பாதம்
சாருயிர்க் கின்பந் தருகின்ற பாதஞ்
சத்திய ஞான தயாநிதி பாதம். ஆடிய ௧௧

தாங்கி யெனைப்பெற்ற தாயாகும் பாதம்
தந்தையு மாகித் தயவுசெய் பாதம்
ஓங்கியென் னுள்ளே யுறைகின்ற பாதம்
உண்மை விளங்க வுரைத்தபொற் பாதம். ஆடிய ௧௨

எண்ணிய வாறே யெனக்கருள் பாதம்
இறவா நிலையி லிருத்திய பாதம்
புண்ணியர் கையுட் பொருளாகும் பாதம்
பொய்ய ருளத்திற் பொருந்தாத பாதம். ஆடிய ௧௩

ஆறந்தத் துள்ளு மமர்ந்தபொற் பாதம்
ஆதி யனாதியு மாகிய பாதம்
மாறந்த மில்லாவென் வாழ்முதற் பாதம்
மண்முத லைந்தாய் வழங்கிய பாதம். ஆடிய ௧௪

225. ஒன்று கிரண்டாகி—பி - ம். 226. ஐயர்—பி - ம்.

அருட்பெருஞ் ஜோதிய தாகிய பாதம்
அம்மையு மப்பனு மாகிய பாதம்
பொருட்பெரும் போகம் புணர்த்திய பாதம்
பொன்வண்ண மாகிய புண்ணிய பாதம். ஆடிய கரு

நாரண னாதியர் நாடரும் பாதம்
நான்தவத் தாற்பெற்ற நற்றுணைப் பாதம்
ஆரண மாகமம் போற்றிய பாதம்
ஆசைவிட் டார்க்கே அணிமையாம் பாதம்.

ஆடிய பாதமன் றாடிய பாதம்
ஆடிய பாதநின் றாடிய பாதம். கசு

திருச்சிற்றம்பலம்

---

## 6. அருள் அற்புதம்[227]

திருச்சிற்றம்பலம்

### பல்லவி

அற்புதம் அற்புத மே—அரு
ளற்புத மற்புத மே.[228]

### சரணங்கள்

சிற்பதம் பொற்பதஞ் சீரே சிறந்தது
சித்தாடு கின்ற திருநாள் பிறந்தது
கற்பத நெஞ்சக் கரிசு துறந்தது
கற்றபொய்ந் நூல்கள் கணத்தே மறந்தது. அற் க

---

227. இத்திருப்பாடலுக் காதாரம் சுவாமிகள் தெய்வத் திருக்கரத்தால் எழுதிய மூலமே. இதற்குக் கிடைத்த அன்பர்கள் கையெழுத்துப் பிரதிகள் ஆறு. இவற்றுள் ஒன்றில் திருப்பாடலின் தலைப்பில் "கீர்த்தனம்" என்று குறித்திருக்கிறது.

செத்தா ரெழுகின்ற திருநா ளடுத்தது
சிவநெறி யொன்றே யெங்குந்தலை யெடுத்தது
இத்தா ரணிமுதல் வானு முடுத்தது
இறவா வரந்தா னெனக்குக் கொடுத்தது. அற் ௨

ஆனந்த நாடக மாடுதல் சார்ந்தது
அடுத்த தருண மிதுவாக நேர்ந்தது
ஈனந்த மாயை யிருள்வினை சோர்ந்தது
என்னருட் சோதியென் னுள்ளத்தி லார்ந்தது. அற் ௩

சத்திய ஞான சபையென்னுட் கண்டனன்
சன்மார்க்க சித்தியை நான்பெற்றுக் கொண்டனன்
நித்திய ஞான நிறையமு துண்டனன்
நிந்தை யுலகியற் சந்தையை விண்டனன். அற் ௪

---

228. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும்:—

(i) தர்பார்—மிச்ர சாபு

(ii) பல்லவி

அற் | பு தம் || அற் | புத |
ஸரீ | ஸநி ஸா || நிஸா | ரீஸா |

மே | || அ | ருள் ||
ரீ, | ; ; || ரிமா | பாபா ||

அற் | பு தம் || அற் | புத ||
மபா | பத பா || ரிகா | ரீஸா ||

மே | || அ | ||
ரீ, | ; ; || ஸா, | ; ; ||

சரணம்

சிற் | ப தம் || பொற் | ப தஞ் ||
ரிமா | பா தா || பமா | பா தா ||

சே | ரே சி || றந் | த து ||
நிநீ | தா பா || ரிகா | ரீ ஸா ||

சித் | தா டு || கின் | ற தி ||
ஸரீ | ஸநி ஸா || ரீ, | ரீ ரீ ||

வஞ்சக ரஞ்சினர் வாய்மூடிச் சென்றனர்
வந்து திரும்பவும் வாயிலில் நின்றனர்
தஞ்ச மெமக்கருள் சாமிநீ யென்றனர்
சன்மார்க்க சங்கத் தவர்களே வென்றனர். அற் ரு

புறங்கூறி ஞரெலாம் புல்லெனப் போயினர்
பொற்படிக் கீழ்ப்புற மீளவு மேயினர்
மறங்கூறி ஞேமென்செய் வோமென்று கூயினர்
வாழிய வென்றுசொல் வாயின ராயினர். அற் சு

வெவ்வினைக் காடெலாம் வேரொடு வெந்தது
வெய்ய மாமாயை விரிவற்று நொந்தது
செவ்விய ஞானஞ் சிறப்புற வந்தது
சித்திகள் யாவையுஞ் செய்திடத் தந்தது. அற் எ

சாதி சமயச் சழக்கெலாம் அற்றது
சன்மார்க்க ஞான சபைநிலை பெற்றது
மேதியிற் சாகாத வித்தையைக் கற்றது
மெய்யருட் சோதியென் னுள்ளத்தி லுற்றது.

அற்புத மற்புத மே—அருள்
அற்புத மற்புத மே. அ

திருச்சிற்றம்பலம்

---

ரு | நாள் பி || றங் | த து ||
ரிமா | பநி தப || ககா | ரீ ஸா ||

கற் | ப த || நெஞ் | சக் க ||
பமா | பா தா || ரீ, | ஸ்ா ரீ ||

ரி | சு து || றங் | த து ||
ரிக்ா | ரீ ஸ்ா || நிநீ | தா பா ||

கம் | ற பொய்ந் || நூல் | கள் க ||
தநீ | ஸ்ா ரீ || நிநீ | தா பா ||

ணை ந் | தே ம || றங் | த து || (அற்)
தநிஸ் | பாத ப || ரிகா | ரீஸா || (ஸாரீ)

## 7. ஆணிப்பொன் னம்பலம்[229]

திருச்சிற்றம்பலம்

### பல்லவி

ஆணிப்பொன் னம்பலத் தேகண்ட காட்சிகள்
அற்புதக் காட்சிய டி—அம்மா
அற்புதக் காட்சிய டி.[230]

### சரணங்கள்

ஜோதி மலையொன்று தோன்றிற் றதிலொரு
வீதியுண் டாச்சுத டி—அம்மா
வீதியுண் டாச்சுத டி. ஆணி க

வீதியிற் சென்றேனவ் வீதி நடுவொரு
மேடை யிருந்தத டி[231]—அம்மா
மேடை யிருந்தத டி. ஆணி உ

மேடைமே லேறினேன் மேடைமே லங்கொரு
கூட மிருந்தத டி—அம்மா
கூட மிருந்தத டி. ஆணி ௩

கூடத்தை நாடவக் கூடமே லேழ்நிலை
மாட மிருந்தத டி—அம்மா
மாட மிருந்தத டி. ஆணி ச

---

229. இத் திருப்பாடலுக்குக் கிடைத்த அன்பர்கள் கையெழுத்துப் பிரதிகள் ஐந்து. ஸ்ரீ இருக்கம் இரத்தின முதலியார் அவர்கள் பிரதியிலுள்ளபடி இது இங்கு அச்சிட்டிருக்கிறது.

230. "வானத்தின் மீது" என்னுந் திருப்பாடலுக்கு உரிய இராக தாள ஸ்வரங்களே இத்திருப்பாடலுக்கும் பொருந்தும். 243-வது அடிக் குறிப்பைப் பார்க்க.

231. உண்டாச்சுத டி—பி - ம்.

ஏழ்நிலைக் குள்ளு மிருந்த அதிசயம்
என்னென்று சொல்வன டி[232] — அம்மா
என்னென்று சொல்வன டி. ஆணி ௫

ஓர்நிலை தன்னி லொளிர்முத்து வெண்மணி
சீர்நீல மாச்சுத டி — அம்மா
சீர்நீல மாச்சுத டி. ஆணி ௬

பாரோர் நிலையிற் கருநீலஞ் செய்ய
பவளம தாச்சுத டி — அம்மா
பவளம தாச்சுத டி. ஆணி ௭

மற்றோர் நிலையில் மரகதப் பச்சைசெம்
மாணிக்க மாச்சுத டி — அம்மா
மாணிக்க மாச்சுத டி. ஆணி ௮

பின்னோர் நிலையிற் பெருமுத்து வச்சிரப்
பேர்மணி யாச்சுத டி — அம்மா
பேர்மணி யாச்சுத டி. ஆணி ௯

வேறோர் நிலையில் விரும்பவ ளத்திரள்
வெண்மணி யாச்சுத டி — அம்மா
வெண்மணி யாச்சுத டி. ஆணி ௧௦

புகலோர் நிலையிற் பொருந்திய பன்மணி
பொன்மணி யாச்சுத டி — அம்மா
பொன்மணி யாச்சுத டி. ஆணி ௧௧

பதியோர் நிலையிற் பகர்மணி யெல்லாம்
படிகம தாச்சுத டி — அம்மா
படிகம தாச்சுத டி. ஆணி ௧௨

ஏழ்நிலை மேலே யிருந்ததோர் தம்பம்
இசைந்தபொற் றம்பம டி — அம்மா
இசைந்தபொற் றம்பம டி. ஆணி. ௧௩

---

232. சொல்வேனடி—பி - ம்.

பொற்றம்பங் கண்டேறும் போதுநான் கண்ட
புதுமையென் சொல்வன டி[233] — அம்மா
புதுமையென் சொல்வன டி. ஆணி கச

ஏறும்போ தங்கே யெதிர்ந்த வகைசொல
என்னள வல்லவ டி — அம்மா
என்னள வல்லவ டி. ஆணி கரு

ஆங்காங்கே சத்திக ளாயிர மாயிர
மாகவந் தார்கள டி — அம்மா
ஆகவந் தார்கள டி. ஆணி கசு

வந்து மயக்க மயங்காமல் நானருள்
வல்லபம் பெற்றன டி[234] — அம்மா
வல்லபம் பெற்றன டி. ஆணி கஎ

வல்லபத் தாலந்த மாதம்பத் தேறி
மணிமுடி கண்டேன டி — அம்மா
மணிமுடி கண்டேன டி. ஆணி கஅ

மணிமுடி மேலோர் கொடிமுடி[235] நின்றது
மற்றது[236] கண்டேன டி — அம்மா
மற்றது கண்டேன டி. ஆணி கசு

கொடிமுடி[235] மேலாயி ரத்தெட்டு மாற்றுப்பொற்
கோயி லிருந்தத டி — அம்மா
கோயி லிருந்தத டி. ஆணி உ0

கோயிலைக் கண்டங்கே கோபுர வாயிலில்[237]
கூசாது சென்றன டி[238] — அம்மா
கூசாது சென்றன டி. ஆணி உக

---

233. சொல்வேனடி—பி - ம். 234. பெற்றேனடி—பி - ம்.
235. கொடுமுடி—பி - ம் (1885-ம் வருஷப் பதிப்பு).
236. மற்றதுங்—பி - ம். 237. வாயலில்—பி - ம்.
238. சென்றேனடி—பி - ம்.

கோபுர வாயிலுள் சத்திகள் சத்தர்கள்
கோடிபல் கோடிய டி — அம்மா
கோடிபல் கோடிய டி.  ஆணி உஉ

ஆங்கவர் வண்ணம்வெள் வண்ணஞ்செவ் வண்ணமுன்
ஐவண்ண மாகும டி — அம்மா
ஐவண்ண மாகும டி.  ஆணி உ௩

அங்கவ[239] ரெல்லாமிங் காரிவ ரென்னவும்
அப்பாலே சென்றன டி[240] — அம்மா
அப்பாலே சென்றன டி.  ஆணி உச

அப்பாலே சென்றேனங் கோர்திரு வாயிலில்
ஐவ ரிருந்தார டி — அம்மா
ஐவ ரிருந்தார டி.  ஆணி உரு

மற்றவர் நின்று வழிகாட்ட மேலோர்
மணிவாயி லுற்றேன டி — அம்மா
மணிவாயி லுற்றேன டி.  ஆணி உசா

எண்ணுமவ் வாயிலிற் பெண்ணோ டாணை
இருவ ரிருந்தார டி — அம்மா
இருவ ரிருந்தார டி.  ஆணி உஎ

அங்கவர்[241] காட்ட அணுக்கத் திருவாயில்
அன்பொடு கண்டேன டி — அம்மா
அன்பொடு கண்டேன டி.  ஆணி உஅ

அத்திரு வாயிலி லானந்த வல்லியென்
அம்மை யிருந்தாள டி — அம்மா
அம்மை யிருந்தாள டி.  ஆணி உகூ

அம்மையைக் கண்டே னவளருள் கொண்டேன்
அமுதமு முண்டேன டி — அம்மா
அமுதமு முண்டேன டி.  ஆணி ௩௰

---

239. ஆங்கவர் — பி - ம்.  240. சென்றேனடி —
241. ஆங்கவர் — பி - ம்.

தாங்கு மவளரு ளாலே நடராஜர்
சந்நிதி கண்டேன டி—அம்மா
சந்நிதி கண்டேன டி. ஆணி ௰௧

சந்நிதி யிற்சென்று நான்பெற்ற பேறது
சாமி யறிவார டி—அம்மா
சாமி யறிவார டி.

ஆணிப்பொன் னம்பலத் தேகண்ட காட்சிகள்
அற்புதக் காட்சிய டி—அம்மா
அற்புதக் காட்சிய டி. ௰௨

திருச்சிற்றம்பலம்

---

## 8. அருட் காட்சி[242]

திருச்சிற்றம்பலம்

வானத்தின் மீது மயிலாடக் கண்டேன்
மயில்குயி லாச்சுத டி—அக்கச்சி
மயில்குயி லாச்சுத டி.[243] க

துள்ளலே விட்டுத் தொடங்கினேன் மன்றாடும்
வள்ளலைக் கண்டேன டி—அக்கச்சி
வள்ளலைக் கண்டேன டி. உ

---

242. இத்திருப்பாடலுக் காதாரம் அன்பர்களது கையெழுத்துப் பிரதிகள் நான்கு. இதன் அளவு கருதி, இதைச் சுவாமிகளின் தனிப்பாடல்களோடு, அவற்றில் குறித்து வைத்திருக்கிறது.

243. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும்:—

(i) எதுகுலகாம்போதி—மிச்ர சாபு

(ii) வா | னத் தின் ‖ மீ | து ‖
பதா | ஸ்நி தா ‖ தநித | பமபா ‖

ம யில் | ஆ டக் ‖ கண் | டேன் ‖
ப தஸ் | தப மா ‖ மகரி | ரிகஸா ‖

சாதி சமயச் சழக்கைவிட் டேனருட்
சோதியைக் கண்டேன டி—அக்கச்சி
சோதியைக் கண்டேன டி. ௫

பொய்மை யொழித்துப் புறப்பட்டேன் மன்றாடும்
ஐயரைக் கண்டேன டி—அக்கச்சி
ஐயரைக் கண்டேன டி. ௬

திருச்சிற்றம்பலம்

---

## 9. ஆனந்தப் பரிவு[244]

(1)

திருச்சிற்றம்பலம்

ஆனந்த மடையாதெந் நாளினுமுள்
ளவனாகி நடிக்கும் வண்ணம்
ஆனந்த நடம்புரிவா னானந்த
வமுதளித்தா னந்தோ வந்தோ.[245] க

---

மயில் | குயி || லாச் | சுத || டி | ||
ஸ ரீ | மக கரி || கஸா | நிஸ ரிஸ || ரீ, | ; ; ||

அக் | கச் சி ||
நிஸா | ரிஸ ரீ ||

மயில் | குயி || லாச் | சுத || டி | ||
ஸ ரீ | மக கரி || ரிஸா | பா தா || ஸா, | ; ; ||

244. சுவாமிகள் தெய்வத் திருக்கரத்தால் எழுதிய மூலமே இதற்காதாரம். இதற்குக் கிடைத்த அன்பர்கள் கையெழுத்துப் பிரதிகள் ஐந்து.

ஓரன்பர் பிரதியில் "வெள்ளை விருத்தம்" என்றும், 1885-ம் வருஷ அச்சுப் பிரதியில் "கலித்தாழிசை" என்றும் இத்திருப் பதிகப் பாவினம் குறித்திருக்கிறது.

சாதிமதஞ் சமயமுதற் சங்கற்ப
விகற்பமெலாந் தவிர்ந்து போக
ஆதிநடம் புரிகின்ற வருட்சோதி
எனக்களித்தா னந்தோ வந்தோ. உ

துரியபத மடைந்தபெருஞ் சுத்தர்களு
முத்தர்களுந் துணிந்து சொல்லற்
கரியபத மெனக்களித்தா னம்பலத்தி
லாடுகின்ற வனந்தோ வந்தோ. ௩

மருட்பெருஞ்சோ தனையெனது மட்டுமிலா
வணங்கருணை வைத்தே மன்றில்
அருட்பெருஞ்சோ திப்பெருமா னருளமுத
மெனக்களித்தா னந்தோ வந்தோ. ௪

---

245. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும்:—

(i) சுத்த ஸாவேரி—ஆதி

(ii) நா னந் த ம டை யா |
தா த ப ப ப பா |

தெந் நா | வி னு முன் ||
தஸ்ா தாப | மாபம ரீ ரீஸா ||

ள வ ரு கி க டிக் | கும் வண் | ணம் ||
ரி ம ரீ ஸா ஸா ரீமா | பாதஸ் தா | பா ||

ஆ னந் த நடம் பு ரி |
பாமா பா தா ஸ்ாஸ்ா ரீ ரீ |

வா னு | னந் த ||
ரீம்ாரீஸ் ஸ்ா | தா ப ||

அ மு த ளித் தான் |
த ரீ ஸ்ா ஸ்ா தாஸ்ாதாபா |

அந் தோ | அந் தோ ||
ஸ்ா தாபா | மதபம ரீஸா ||

துன்பமெலா மொருகணத்திற் றொலைத்தருளி
　　எந்நாளுஞ் சுகத்தி லோங்க
அன்புடையா னம்பலத்தா னருட்சோதி
　　யெனக்களித்தா னந்தோ வந்தோ.　　௫

பந்தமெலாந் தவிர்த்தருளிப் பதந்தருயோ
　　காந்தமுதற் பகரா நின்ற
அந்தமெலாங் கடந்திடச்செய் தருளமுத
　　மெனக்களித்தா னந்தோ வந்தோ.　　௬

பேராலு மறிவாலும் பெரியரெனச்
　　சிறப்பாகப் பேச நின்றோர்
ஆராலும் பெறலரிய தியாததனைப்
　　பெறுவித்தா னந்தோ வந்தோ.　　௭

தினைத்தனையு மறிவறியாச் சிறியனென
　　நினையாமற் சித்தி யான
வனைத்துமென்றன் வசமாக்கி யருளமுத
　　மெனக்களித்தா னந்தோ வந்தோ.　　௮

பொதுவாகிப் பொதுவில்நடம் புரிகின்ற
　　பேரின்பப் பொருள்தான் யாதோ
அதுநானய் நானதுவா யத்துவித
　　மாகின்றே னந்தோ வந்தோ.　　௯

மருள்வடிவே யென்றென்றும் எவ்விடத்து
　　மெதனாலு மாய்வி லாத
அருள்வடிவா யிம்மையிலே யடைந்திடப்பெற்
　　றுடுகின்றே னந்தோ வந்தோ.　　௧௦

திருச்சிற்றம்பலம்

(2)

திருச்சிற்றம்பலம்

எக்கரையுங் காணாதே இருட்கடலிற்[246]
கிடந்தேனை எடுத்தாட் கொண்டு[247]
அக்கரைசேர்த் தருளெனுமோர் சர்க்கரையும்
எனக்களித்தா னந்தோ வந்தோ.[248]

திருச்சிற்றம்பலம்

## 10. மெய்யருள் வியப்பு[249]

திருச்சிற்றம்பலம்

பல்லவி

எனக்கும் உனக்கும் இசைந்த பொருத்தம்
என்ன பொருத்த மோ
இந்தப் பொருத்தம் உலகிற் பிறருக்
கெய்தும் பொருத்த மோ.[250]

---

246. இத் திருப்பாடலுக்குக் கிடைத்த அன்பர்கள் கையெழுத்துப் பிரதிகள் நான்கு. அவற்றுள் ஒன்றில் இதன் தலைப்பு "பூரணானுபவம்" என்று குறித்திருக்கிறது. இது சுவாமிகளின் தனிப்பாடல்களில் ஒன்றெனத் தெரிகிறது.

247. கொண்டே—பி-ம். (1885-ஆம் வருஷப் பதிப்பு.)

248. இதன் இராக தாளங்கள்: எதுகுல காம்போதி-சாப்பு.

249. சுவாமிகள் தெய்வத் திருக்கரத்தால் எழுதிய மூலமே இத்திருப்பாடலுக் காதாரம். இதற்குக் கிடைத்த அன்பர்கள் கையெழுத்துப் பிரதிகள் ஆறு. அவற்றுள் ஸ்ரீ இறுக்கம் இரத்தின முதலியார் அவர்கள் பிரதியில், திருப்பாடலின் தலைப்பிலும் இறுதியிலும், வேறு சில பிரதிகளில் இருப்பதுபோல், முறையே "மெய்யருள் வியப்பு" என்றும் "திருச்சிற்றம்பலத் தந்தையார் திருவடி வாழ்க" என்றும் குறித்திருப்பதோடு, தலைப்பில் "ஈரடி மேல் வைப்பு" என்றும் கண்டிருக்கிறது. 'மெய்யருள் வியப்பு மாலை'' என்பது ஸ்ரீ சி. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் பிரதியிலுள்ள இதன் தலைப்பு ஆகும்.

சரணங்கள்

தனக்கு நிகரிங் கில்லா துயர்ந்த
தம்ப மொன்ற தே
தாவிப் போகப் போக நூலின்
றரத்தி னின்ற தே
கனக்கத் திகைப்புற் றங்கே நானுங்
கலங்கி வருந்த வே
கலக்க நீக்கித் தூக்கி வைத்தாய்
நிலைபொ ருந்த வே. எனக்கும் க

---

250. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும் :—

(i) செஞ்சுருட்டி—ரூபகம்

(ii) பல்லவி

எ னக் | கும் உ னக் கும் ||
ஸா ரீ | கா ரீ ஸா ஸா ||

இ சைந் | த பொ ருத் தம் ||
ஸா ரீ | மா மா மா மா ||

என் ன | பொ ருத் த ||
மா பா | மா கா ரீரீ ||

மோ | ||
கா ; | ; ; ; ; ||

இந் தப் | பொ ருத் தம் ||
ஸா ரீ | கா கா காரீ ||

உ ல | கில் பி ற ருக் ||
ஸா ரீ | கா ஸா ஸா ஸா ||

கெய் | தம் பொ ருத் த ||
ரீகா | ரீ ஸா ரீ தா ||

மோ | ||
ஸா ; | ; ; ; ; ||

இங்கோர் மலையி னடுவி லுயர்ந்த
தம்பம் நணுக வே
ஏறிப் போகப் போக நூலி
னிழைபோல் நுணுக வே
அங்கே திகைத்து நடுங்கும் போதென்
னடுக்க நீக்கி யே
அதன்மே லுயர்ந்த நிலையில் வைத்தா
யடிமை யாக்கி யே. எனக்கும் உ

இரவிற் பெரிய வெள்ளம் பரவி
யெங்குந் தயங்க வே
யானுஞ் சிலரும் படகி லேறி
யேம யங்க வே
யிரவிற் றனித்தங் கென்னை யொருகன்
மேட்டி லேற்றி யே
விண்ணி லுயர்ந்த மாடத் திருக்க
விதித்தாய் போற்றி யே. எனக்கும் ௩

மேலைப் பாற்சிவ கங்கை யென்னுமோர்
தீர்த்தந் தன்னை யே
மேவிப் படியிற் றவறி நீரில்
விழுந்த என்னை யே
ஏலத் துகிலும் உடம்பும் நனையா
தெடுத்த தேவொன் றே
எடுத்தென் கரத்திற் பொற்பூ ணணிந்த
இறைவ னீயன் றே. எனக்கும் ௪

என்ன துடலு முயிரும் பொருளு
நின்ன தல்ல வோ
எந்தா யிதனைப் பெறுக வெனநா
னின்று சொல்ல வோ
சின்ன வயதி லென்னை யாண்ட
திறத்தை நினைக்கு தே
சிந்தை நினைக்கக் கண்ணீர் பெருக்கி
யுடம்பை நனைக்கு தே. எனக்கும் ௫

அப்பா நின்னை யன்றி யெங்கும்
அணைப்பா ரில்லை யே
அந்தோ நின்னை யன்றி யெங்கும்
அருள்வா ரில்லை யே
எப்பா லவர்க்கும் நின்னை யன்றி
யிறைமை யில்லை யே
எனக்கு நின்மே லன்றி யுலகி
லிச்சை யில்லை யே. எனக்கும் ௬

அரசே வுன்னை யணைக்க வெனக்கு
ளாசை பொங்கு தே
அணைப்போ மென்னு முண்மை யாலென்
னுவி தங்கு தே
விரைசேர் பாதம் பிடிக்க வென்கை
விரைந்து நீளு தே
மேவிப் பிடித்துக் கொள்ளுந் தோறு
முவகை யாளு தே. எனக்கும் ௭

தனியென் மேல்நீ வைத்த தயவு
தாய்க்கு மில்லை யே
தருமைந் தொழிலும் வேண்டுந் தோறுந்
தருதல் வல்லை யே
வினவு மெனக்கென் னுயிரைப் பார்க்க
மிகவு நல்லை யே
மிகவு நான்செய் குற்றங் குறித்து
விடுவா யல்லை யே. எனக்கும் ௮

என்னை யாண்ட வண்ண மெண்ணி
லுள்ள முருகு தே
என்னை விழுங்கி யெங்கு மின்ப
வெள்ளம் பெருகு தே
உன்ன வுன்ன மனமு முயிரு
முடம்பு மினிக்கு தே
உன்றே டென்னை வேறென் றெண்ணின்
மிகவும் பனிக்கு தே. எனக்கும் ௯

உன்பே ரருளை நினைக்குந் தோறும்
உடம்பு பொடிக்குதே
உண்டு பசிதீர்ந் தாற்போற் காதல்
மிகவுந் தடிக்குதே
அன்பே யமையு மென்ற பெரியர்
வார்த்தை போயிற்றே
அன்போ ரணுவு மில்லா வெனக்கிங்
கருள லாயிற்றே. எனக்கும் ௰

நினைக்க நினைக்கத் தித்திப் பெனது
நினைவிற் கொடுக்குதே
நின்பா லன்றிப் பிறர்பாற் செல்ல
நெஞ்ச நடுக்குதே
எனைத்துன் பொழித்தாட் கொண்ட நின்னை
யன்னை யென்பனே
எந்தா யன்பி லேனின் னடிக்கு
முன்னை யன்பனே. எனக்கும் ௧௧

உன்னை மறக்கி லெந்தா யுயிரென்
னுடம்பில் வாழுமோ
உன்பா லன்றிப் பிறர்பா லென்ற
னுள்ளஞ் சூழுமோ
என்னைக் கொடுக்க வாங்கிக் கொண்ட
தென்ன கருதியோ
எந்தாய் நின்னைக் கொடுக்க என்பா
லின்று வருதியோ. எனக்கும் ௧௨

நெடுநாண் முயன்றுங் காண்டற் கரிய
நிலையைக் காட்டியே
நிறைந்தென் னகத்தும் புறத்துஞ் சூழ்ந்தா
யொளியை நாட்டியே
நடுநா டியநின் னருளுக் கென்மே
லென்ன நாட்டமோ
நாய்க்குத் தவிசிட் டனைநின் றனக்கிங்
கிதுவோ ராட்டமோ. எனக்கும் ௧௩

நாகா திபனு மயனு மாலும்
நறுமு றென்ன வே
ஞான வமுத மளித்தாய் நானு
முண்டு துன்ன வே
சாகாக் கலையை யெனக்குப் பயிற்றித்
தந்த தயவை யே
சாற்றற் கரிது நினக்கென் கொடுப்ப
தேதும் வியவை யே. எனக்கும் கச

யாது கருதி யென்னை யாண்ட
தைய வைய வோ
யானுன் னடிப்பொற் றுணைகட் குவந்து
தொழும்பு செய்ய வோ
ஓது கடவுட் கூட்ட மனைத்தும்
அடிமை யல்ல வோ
உடையா யவர்க்கு ளெனையு மொருவ
னென்று சொல்ல வோ. எனக்கும் கரு

தலையுங் காலுந் திரித்து நோக்கித்
தருக்கி னேனை யே
தாங்கித் தெரித்த தயவை நினைக்கி
லுருக்கு தூனை யே
புலையுங் கொலையுந் தவிர்ந்த நெறியிற்
புனிதர் மதிக்க வே
புகுவித் தாயை யென்வாய் துடிப்ப
தேத்தித் துதிக்க வே. எனக்கும் கசு

தாயே யெனக்குத் தயவு புரிந்த
தருணத் தந்தை யே
தனியே நின்னை நினைக்கக் கிளர்வ
தெனது சிந்தை யே
நாயே னெண்ண மனைத்து முடித்துக்
கொடுத்த பண்ப னே
நான்செய் தவத்தா லெனக்குக் கிடைத்த
நல்ல நண்ப னே. எனக்கும் கஎ

ஏறு நிலையில் விரைந்து விரைந்திங்
கென்னை யேற்றி யே
இறங்கா திறங்கும் படிகண் முழுது
மெடுத்தாய் போற்றி யே
மாறாக் கருணை யென்மேல் வைக்க
வந்த தென்னை யோ
மதியி லேனின் னருட்குச் செய்த
தவந்தான் முன்னை யோ. எனக்கும் கஅ

இடமும் வலமும் இதுவென் றறியா
திருந்த என்னை யே
எல்லா மறிவித் தருள்செய் கருணை
யென்னை யென்னை யே
நடமு நடஞ்செய் யிடமு மெனக்கு
நன்று காட்டி யே
நாயி னேனை வளர்க்கின் றாய்நல்
லமுத மூட்டி யே. எனக்கும் கசு

விதுவுங் கதிரு மிதுவென் றறியும்
விளக்க மின்றி யே
விழித்து மயங்கி னேன்பாற் பெரிய
கருணை யொன்றி யே
அதுவு மதுவு மிதுவென் றெனக்குள்
ளறியக் காட்டி யே
அடிய னேனை வளர்க்கின் றாய்நல்
லமுத மூட்டி யே. எனக்கும் உ0

இருளு மொளியும் வந்த வகையை
யெண்ணி யெண்ணி யே
இரவும் பகலு மயங்கி னேனை
யினிது நண்ணி யே
அருளும் பொருளுங் கொடுத்து மயக்க
நீக்கிக் காட்டி யே
அன்பா லென்னை வளர்க்கின் றாய்நல்
லமுத மூட்டி யே. எனக்கும் உக

அண்டத் தகத்தும் புறத்தும் உன்ற
ருணை செல்லு தே
அவனே யெல்லாம் வல்லா னென்று
மறைகள் சொல்லு தே
பிண்டத் தகத்தும் புறத்தும் நிறைந்த
பெரிய சோதி யே
பேயே னளவில் விளங்கு கின்ற
தென்ன நீதி யே. எனக்கும் உஉ

கருணை நிதிநின் றன்னைக் காணக்
கண்கள் துடிக்கு தே
காண்போ மென்று நினைக்குந் தோறும்
உடம்பு பொடிக்கு தே
அருணை டகஞ்செய் பதங்கள் பாடி
யாட விரைவ தே
ஆடும் பொதுவை நினைக்க நினைக்க
நெஞ்சங் கரைவ தே. எனக்கும் உரு

அருளார் சோதி யென்னுள் விளங்க
அளித்த காலத் தே
அடியேன் குறைகள் யாவுந் தவிர்ந்த
திந்த ஞாலத் தே
பொருளா யெனையு நினைக்க வந்த
புதுமை யென்னை யோ
பொன்னென் றைய மதிப்ப துதவாத்
துரும்பு தன்னை யோ. எனக்கும் உச

எனக்குள் நீயும் உனக்குள் நானும்
இருக்குந் தன்மை யே
இன்று காட்டிக் கலக்கந் தவிர்த்துக்
கொடுத்தாய் நன்மை யே
தனக்குள் ளதுதன் றலைவர்க் குளதென்
றறிஞர் சொல்வ தே
சரியென் றெண்ணி யெனது மனது
களித்து வெல்வ தே. எனக்கும் உரு

கருணைப் பொதுவிற் பெரிய சோதித்
    தருவிற் கனித்த தே
கனித்த பெரிய தனித்த கனியென்
    கருத்து ளினித்த தே
தருணத் துண்டு மகிழ்வுற் றேனம்
    மகிழ்ச்சி சொல்ல வே
தனித்துக் கரைந்த வெனது கருத்தின்
    றரத்த தல்ல வே. எனக்கும் உசு

என்னு ருயிர்க்குத் துணைவ நின்னை
    நான்று திக்க வே
என்ன தவஞ்செய் தேன்முன் னுலகு
    ளோர்ம திக்க வே
பொன்னூர் புயனு மயனும் பிறரும்
    பொருந்த லரிய தே
புலைய னேனுக் களித்த கருணை
    மிகவும் பெரிய தே. எனக்கும் உஎ

என்கண் மணியு ளிருக்குந் தலைவ
    நின்னைக் காண வே
என்ன தவஞ்செய் தேன்முன் னயனு
    மரியு நாண வே
புன்க ணொழித்துத் தெள்ளா ரமுதம்
    புகட்டி யென்னை யே
பொருளா யெண்ணி வளர்க்கின் றாய்நீ
    எனக்கோ ரன்னை யே. எனக்கும் உஅ

அறிவி லேன்செய் குற்ற மனைத்தும்
    பொறுத்த தன்றி யே
அமுது மளித்தா யார்செய் வார்க
    ளிந்த நன்றி யே
செறிவி லாத பொறியு மனமுஞ்
    செறிந்து நிற்க வே
செய்தாய் மேலுந் தெரித்தாய் சாகாக்
    கல்வி கற்க வே. எனக்கும் உகூ

ஒருநா ழிகையில் யோக நிலையை
யுணர்த்தி மாலை யே
யோகப் பயனை முழுது மளித்தாய்
மறுநாட் காலை யே
திருநா ணிலையுந் தீர்த்த நிலையுந்
தெய்வ நிலையு மே
சிறியே னறியக் காட்டித் தெரித்தாய்
வேதக் கலையு மே. எனக்கும் ௩0

அண்டப் பரப்பின் றிறங்க ளனைத்து
மறிய வேண்டி யே
ஆசைப் பட்ட தறிந்து தெரித்தா
யறிவைத் தூண்டி யே
பிண்டத் துயிர்கள் பொருந்தும் வகையும்
பிண்டந் தன்னை யே
பிரியும் வகையும் பிரியா வகையுந்
தெரித்தாய் பின்னை யே. எனக்கும் ௩௧

வேதா கமங்கள் புகன்ற விரிவை
யொன்றொன் றாக வே
விளங்க விரைந்து தெரித்தாய் பயிலு
மாசை போக வே
பூதா திகளைப் பொருத்தும் பகுதிப்
பொருத்த முற்று மே
பொய்மை நீக்கிக் காணக் காட்டித்
தெரித்தாய் மற்று மே. எனக்கும் ௩௨

வள்ளா லுன்னைப் பாடப் பாட
வாய்ம ணக்கு தே
வஞ்ச வினைக ளெனைவிட் டோடித்
தலைவ ணக்கு தே
எள்ளா துனது புகழைக் கேட்கச்
செவிந யக்கு தே
எந்தாய் நயவை யெண்ணுந் தோறு
முளம்வி யக்கு தே. எனக்கும் ௩௩

இறைவா நின்னைக் கனவி லேனும்
யான்ம றப்ப னோ
எந்தா யுலகத் தவர்கள் போல்நா
னினியி றப்ப னோ
மறைவா சகமும் பொருளும் பயனு
மதிக்கு மதியி லே
வாய்க்கக் கருணை புரிந்து வைத்தா
யுயர்ந்த பதியி லே. எனக்கும் ரு௪

தலைவா வெனக்குக் கருணை யமுதந்
தரவித் தலத்தி லே
தவஞ்செய் தேனத் தவமு முன்ற
னருள்வ லத்தி லே
அலைவா ரிதியிற் றுரும்பு போல
வயனு மாலு மே
அலைய வெனக்கே யளிக்கின் றாய்நீ
மேலு மேலு மே. எனக்கும் ரு௫

உடையா யெனக்குப் புரிந்த தயவை
யுன்ன வுன்ன வே
உடம்பு பூரிக் கின்ற தொளிர்பொன்
மலைய தென்ன வே
தடையா தினியுண் மூல மலத்தின்
றடையும் போயிற் றே
சமய விகற்ப மெல்லா நீங்கிச்
சமம தாயிற் றே. எனக்கும் ரு௬

மயங்குந் தோறு முள்ளும் புறத்து
மயக்க நீக்கி யே
மகிழ்விக் கின்றா யொருகா லூன்றி
யொருகாற் றூக்கி யே
உயங்கு மலங்க ளைந்தும் பசையற்
றொழிந்து வெந்த தே
உன்பே ரருட்பொற் சோதி வாய்க்குந்
தருணம் வந்த தே. எனக்கும் ரு௭

எனக்கும் நின்னைப் போல நுதற்கண்
　　ணீந்து மதனை யே
எரிப்பித் தாய்பின் னெழுப்பிக் கொடுத்தா
　　யருவ மதனை யே
சினக்குங் கூற்றை யுதைப்பித் தொழித்துச்
　　சிதைவு மாற்றி யே
தேவர் கற்பம் பலவுங் காணச்
　　செய்தாய் போற்றி யே. எனக்கும் ௩௯

கள்ள மறியே னின்றாற் கண்ட
　　காட்சி யொன்று மே
கருத்தி லுளது வேறோர் விடயங்
　　காணே னென்று மே
உள்ள துரைக்கின் றேனின் னடிமே
　　லாணை முன்னை யே
உள்ளே விளங்கிக் காண்கின் றுய்க்கிங்
　　கொளிப்ப தென்னை யே. எனக்கும் ௩௧

என்னை யடிமை கொண்டாய் நானும்
　　நினக்கு நல்ல னே
எல்லாம் வல்ல தலைவ நினக்கு
　　நல்ல னல்ல னே
முன்னை வினைக ளனைத்து நீக்கி
　　யமுத மூட்டி யே
மூவர்க் கரிய நிலையில் வைத்தா
　　யென்னை நாட்டி யே. எனக்கும் ௬௦

சோதி மலையில் கண்டே னின்னைக்
　　கண்க ளிக்க வே
துய்த்தே னமுத மகத்தும் புறத்தும்
　　பரிம ளிக்க வே
ஓதி யுணர்தற் கரிய பெரிய
　　வுணர்வை நண்ணி யே
ஓதா தனைத்து முணர்கின் றேனின்
　　னருளை யெண்ணி யே. எனக்கும் ௬௧

ஏழு நிலைக ளோங்குந் தெய்வ
மாட மொன்றி லே
ஏற்றிக் களிக்க வைத்தா யதன்மே
லிலங்கு குன்றி லே
வாழும் பரிசு கவிக்குங் குடையு
மதிக்குந் தூசு மே
மகிழ்ந்து கொடுத்துப் பின்னுங் கொடுத்தாய்
மணிப்பொற் காசு மே. எனக்கும் சஉ

இந்த வுலகி லுள்ளார் பலரு
மிகவு நன்மை யே
என்பாற்செய்ய வைத்தா யிதுநின்
னருளின் றன்மை யே
அந்த வுலகி லுள்ளார் பலரும்
என்னை நோக்கி யே
அப்பா வாழி யெனவும் புரிந்தா
யடிமை யாக்கி யே. எனக்கும் சங

அழியாக் கருணை யமுத வடிவி
னோங்குஞ் சோதி யே
அரசே யெனக்குள் விளங்கு மாதி
யாம னாதி யே
ஒழியாத் துயரை யொழித்த பெரிய
கருணை யாள னே
ஒன்றா யொன்றி லுபய மாகி
யொளிருந் தாள னே. எனக்கும் சச

பாலுந் தேனுங் கலந்த தென்ன
வென்னு ளினிக்க வே
பரம ஞான வமுத மளிக்கின்
றூய்த னிக்க வே
எலு முயிர்க ளெல்லா நினக்குப்
பொதுவ தென்ப ரே
இன்று நோக்கி யோர வார
னென்ப ரன்ப ரே. எனக்கும் சரு

ஐயா நான்செய் பிழைக ளேழு
கடலிற் பெரிய தே
அனைத்தும் பொறுத்த தயவு பிறருக்
கரிய தரிய தே
மெய்யா நீசெய் யுதவி யொருகைம்
மாறு வேண்டு மே
வேண்டா தென்ன வறிந்து மெனக்குள்
ளாசை தூண்டு மே. எனக்கும் சசு

பூத வெளியி னடமும் பகுதி
வெளியி னூட்ட மும்
போக வெளியிற் கூத்தும் யோக
வெளியு ளாட்ட மு
நாத வெளியிற் குனிப்பும் பரம
நாத நடமு மே
நன்று காட்டிக் கொடுத்தா யென்று
நலியாத் திடமு மே. எனக்கும் சஎ

எட்டு மிரண்டு மிதுவென் றெனக்குச்
சுட்டிக் காட்டி யே
எட்டா நிலையி லிருக்கப் புரிந்தா
யிட்டுக் கூட்டி யே
துட்ட வினையைத் தீர்த்து ஞானச்
சுடருள் ளேற்றி யே
தூண்டா தென்றும் விளங்க வைத்தா
யுண்மை சாற்றி யே. எனக்கும் சஅ

அருளாம் பெரிய வெளிக்குட் சோதி
வடிவ னாகி யே
அரசு செலுத்துந் தனித்த தலைமைப்
பரம யோகி யே
பொருளா யெனையு முளங்கொண் டளித்த
புனித நாத னே
போற்று நாத முடிவில் நடஞ்செய்
கமல பாத னே. எனக்கும் சகூ

உருவு மருவு மூபய நிலையு
முடைய நித்த னே
உயிரு ணிறைந்த தலைவ வெல்லாம்
வல்ல சித்த னே
மருவுந் துரிய வரையு ணிறைந்து
வயங்கும் பரம மே
மன்றிற் பரமா னந்த நடஞ்செய்
கின்ற பிரம மே. எனக்கும் ௩0

அன்னே யென்னை யாண்ட தலைவ
வடிய னுள்ள மே
அமர்ந்த துணைவ எனக்குக் கிடைத்த
வமுத வெள்ள மே
பொன்னே பொன்னிற் பொலிந்து நிறைந்த
புனித வான மே
புனித வானத் துள்ளே விளங்கும்
புரண ஞான மே. எனக்கும் ௩௧

சமயத் தெய்வம் பலவுஞ் சிறிய
துரும்ப தென்ன வே
சாற்றப் புகினுஞ் சாலா ரருளின்
பெருமை யுன்ன வே
அமையு மண்டப் பகுதி பலவு
மணுவின் பொடியி லே
அனந்தத் தொன்றென் றுரைத்துஞ் சாலா
நின்பொன் னடியி லே. எனக்கும் ௩௨

அப்பா நின்னை யடைந்த வென்னை
யொப்பார் யாவ ரே
ஆரு றகன்ற நிலையை யடைந்தா
னென்பர் தேவ ரே
இப்பா ராதி பூத மடங்குங்
காலு நின்னை யே
எத்திக் களித்து வாழ்வே னிதற்கு
மைய மென்னை யே. எனக்கும் ௩௩

என்னை மறைத்த மறைப்பை நீக்கி
யென்னைக் காட்டி யே
இறைவ நினையுங் காட்டி வளர்த்தா
யமுத மூட்டி யே
முன்னை மறைக்கு மெட்டா தினது
பெருமை தன்னை யே
முன்னி மகிழ்ந்து பாடப் புரிந்தா
யடிமை யென்னை யே. எனக்கும் ருச

எண்ணுந் தோறு மெண்ணுந் தோறு
மென்னு ளினிக்கு தே
இறைவ நின்னைப் பாட நாவி
லமுதஞ் சனிக்கு தே
கண்ணுங் கருத்து நின்பா லன்றிப்
பிறர்பாற் செல்லு மோ
கண்டே னுன்னை யினிமே லென்னை
மாயை வெல்லு மோ. எனக்கும் ருரு

விந்தோ நாத வெளியுங் கடந்து
மேலு நீளு தே
மேலை வெளியுங் கடந்துன் னடிய
ராணை யாளு தே
அந்தோ வுனது பெருமை சிறிது
மறிவா ரில்லை யே
அறிந்தா லுருகி யின்ப வடிவ
மாவ ரொல்லை யே. எனக்கும் ருசு

இறுகப் பிடித்துக் கொண்டேன் பதத்தை
யினிநான் விடுவ னோ
எந்தாய் பாதம் பிடித்த கையால்
வேறு தொடுவ னோ
குறுகப் பயந்து கூற்று மோடிக்
குலைந்து போயிற் றே
கோவே யுன்ற னருட்சிற் சோதி
யென்ன தாயிற் றே. எனக்கும் ருஎ

காய்க்கும் பருவந் தன்னைப் பழுத்த
　　பருவ மாக்கி யே
கனக சபையில் நடிக்கின் றுயோர்
　　காலைத் தூக்கி யே
நாய்க்குத் தவிசிட் டொருபொன் முடியு
　　நன்று சூட்டி யே
நட்ட நடுவே வைத்தாய் கருணை
　　யமுத மூட்டி யே.　　　　எனக்கும் ௯அ

கல்லை நோக்கிக் கனிந்து பழுத்த
　　கனிய தாக்கி யே
கனக சபையி னடிக்கின் றுயோர்
　　காலைத் தூக்கி யே
புல்லை முடிக்கு மணிகின் றுயென்
　　புன்சொன் மாலை யே
புனைந்தென் னுளத்தி லிருக்கப் புரிந்தாய்
　　நின்பொற் காலை யே.　　　　எனக்கும் ௯௯

சாதல் பிறத்த லென்னு மவத்தைத்
　　தவிர்த்துக் காலை யே
தனித்துன் னருளி னமுதம் புகட்டிக்
　　கொடுத்தாய் மேலை யே
ஓத லுணர்த லுவத்த லெனக்கு
　　நின்பொற் பாத மே
உலக விடயக் காட்டிற் செல்லா
　　தெனது போத மே.　　　　எனக்கும் ௱

அருளும் பொருளும் பெற்றே னடிய
　　னுகி நானு மே
அஞ்சேன் மாயை வினைகட் கொருசிற்
　　றளவ தேனு மே
இருளு நிறத்துக் கூற்றைத் துரத்தி
　　யருட்சிற் சோதி யே
என்ற னகத்தும் புறத்தும் விளங்கு
　　கின்ற தாதி யே.　　　　எனக்கும் ௱க

காமக் கடலைக் கடந்து வெகுளிக்
    கடலை நீந்தி னேன்
கடிய மயக்கக் கடலைத் தாண்டி
    யடியை யேந்தி னேன்
சேமப் பொதுவி னடங்கண் டெனது
    சிறுமை நீங்கி னேன்
சிற்றம் பலத்து நடங்கண் டுவந்து
    மிகவு மோங்கி னேன். எனக்கும் ௬௨

தூங்கல் விடுத லிரண்டு மெனக்குச்
    சமம தாயிற் றே
சகத்தில் வழங்கு மாயை வழக்குத்
    தவிர்ந்து போயிற் றே
ஏங்கல் சலித்த லிரண்டு மின்றி
    யிளைப்பு நீங்கி னேன்
எந்தாய் கருணை யமுதுண் டின்பப்
    பொருப்பி லோங்கி னேன். எனக்கும் ௬௩

உறவு பகையென் றிரண்டு மெனக்கிங்
    கொன்ற தாயிற் றே
ஒன்றென் றிரண்டென் றுளரும் பேத
    மோடிப் போயிற் றே
மறவு நினைவென் றென்னை வலித்த
    வலிப்பு நீங்கி னேன்
மன்றிற் பரமா னந்த நடங்கண்
    டின்ப மோங்கி னேன். எனக்கும் ௬௪

உன்னைக் கண்டு கொண்டேன் கண்ட
    வுடனிங் கென்னை யே
உலக மெல்லாங் கண்டு கொண்ட
    வுவப்பி தென்னை யே
என்னைக் கண்டு கொண்ட காலத்
    திறைவ நின்னை யே
யாருங் கண்டு கொண்டா ரில்லை
    யாங்க தென்னை யே. எனக்கும் ௬௫

மலத்திற் புழுத்த புழுவு நிகர
மாட்டா நாயி னேன்
வள்ளல் கருணை யமுதுண் டின்ப
நாட்டா னாயி னேன்
குலத்திற் குறியிற் குணத்திற் பெருமை
கொள்ளா நாயி னேன்
கோதி லமுதுண் டெல்லா நலமு
முள்ளா னாயி னேன். எனக்கும் ௬௬

கடைய நாயிற் கடைய நாய்க்குங்
கடைய னாயி னேன்
கருணை யமுதுண் டின்ப நாட்டுக்
குடைய னாயி னேன்
விடயக் காட்டி லோடித் திரிந்த
வெள்ளை நாயி னேன்
விடையாய் நினக்கு மிகவுஞ் சொந்தப்
பிள்ளை யாயி னேன். எனக்கும் ௬௭

அயனு மாலுந் தேடித் தேடி
யலந்து போயி னார்
அந்தோ விவன்முன் செய்த தவம்யா
தென்ப ராயி னார்
மயனுங் கருத மாட்டாத் தவள
மாடத் துச்சி யே
வயங்கு மணைமேல் வைத்தாய் சிறிய
நாயை மெச்சி யே. எனக்கும் ௬௮

வல்லா யுனது கருணை யமுதென்
வாய்க்கு வந்த தே
மலமு மாயைக் குலமும் வினையு
முழுதும் வெந்த தே
எல்லா நலமு மான வதனை
யுண்டு வந்த தே
இறவா தென்று மோங்கும் வடிவ
மெனக்கு வந்த தே. எனக்கும் ௬௯

சிற்றம் பலத்தி னடங்கண் டவர்காற்
 பொடிகொள் புல்ல தே
சிருட்டி முதலோ ரைந்து தொழிலுஞ்
 செய்ய வல்ல தே
பற்றம் பலத்தில் வைத்தார் தம்மைப்
 பணியும் பத்த ரே
பரம பதத்த ரென்று பகர்வர்
 பரம முத்த ரே. எனக்கும் எ௰

சிருட்டி முதலோ ரைந்து தொழிலுஞ்
 செய்யென் றென்னை யே
செல்வப் பிள்ளை யாக்கி வளர்க்கின்
 றாயி தென்னை யே
தெருட்டித் திருப்பொற் பதத்தைக் காட்டி
 யமுத மூட்டி யே
திகழ நடுவைத் தாய்சன் மார்க்க
 சங்கங் கூட்டி யே. எனக்கும் எக

அடிய னாக்கிப் பிள்ளை யாக்கி
 நேய னாக்கி யே
யடிக ளாக்கிக் கொண்டா யென்னை
 யவல நீக்கி யே
படியு ளோரும் வானு ளோரு
 மிதனை நோக்கி யே
பதியு மோர வார னென்பர்
 பரிவு தேக்கி யே. எனக்கும் எஉ

அண்ணா வெனையும் பொருளென் றெண்ணி
 யிரவும் பகலு மே
அகத்தும் புறத்துந் திரிகின் றாயிவ்
 வுலகென் புகலு மே
தண்ணா ரமுத மிகவு மெனக்குத்
 தந்த தன்றி யே
தனியே யின்னுந் தருகின் றாயென்
 னறிவி னென்றி யே. எனக்கும் எங

வேதா கமத்தி னடியு நடுவு
முடியு மற்று மே
வெட்ட வெளிய தாகி விளங்கக்
கண்டேன் முற்று மே
காதா சிறிய நாய்க்குங் கடையேன்
முற்றுங் கண்ட தே
நானே கண்டே னெந்தாய் கருணை
நாட்டங் கண்ட தே. எனக்கும் ௭௪

புழுவிற் புழுத்த புழுவு நிகரப்
போதா நாயி னேன்
பொதுவில் நடிக்குந் தலைவ நினக்கே
யடிமை யாயி னேன்
தழுவற் கரிய பெரிய துரியத்
தம்பத் தேறி னேன்
தனித்தப் பாலோர் தவள மாடத்
திருந்து தேறி னேன். எனக்கும் ௭௫

கடைய னெனது கொடிய கடின
நெஞ்சக் கல்லை யே
கனிய தாக்கித் தூக்கிக் கொண்டாய்
துரியத் தெல்லை யே
உடையாய் துரியத் தலத்தின் மேனின்
றோங்குந் தலத்தி லே
உன்பா லிருக்க வைத்தா யென்னை
யுவந்து வலத்தி லே. எனக்கும் ௭௬

அறிந்த நாள்கள் தொடங்கி யிற்றைப்
பகலின் வரையு மே
அடியேன் பட்ட பாட்டை நினைக்கிற்
கல்லுங் கரையு மே
எறிந்தப் பாடு முழுதும் பெரிய
வின்ப மாயிற் றே
எந்தாய் கருணை யெனக்கு மிகவுஞ்
சொந்த மாயிற் றே. எனக்கும் ௭௭

பனிரண் டாண்டு தொடங்கி யிற்றைப்
 பகலின் வரையு மே
படியிற் பட்ட பாட்டை நினைக்கின்
 மலையுங் கரையு மே
துனியா தந்தப் பாடு முழுதுஞ்
 சுகம தாயிற் றே
துரையே நின்மெய் யருளிங் கெனக்குச்
 சொந்த மாயிற் றே. எனக்கும் எஅ

ஈரா றாண்டு தொடங்கி யிற்றைப்
 பகலின் வரையு மே
எளியேன் பட்ட பாட்டை நினைக்கி
 லிரும்புங் கரையு மே
ஏரா யந்தப் பாடு முழுது
 மின்ப மாயிற் றே
இறைவா நின்மெய் யருளிங் கெனக்குச்
 சொந்த மாயிற் றே. எனக்கும் எகூ

பாட்டா லுனது பதத்தை நாடிப்
 பாடும் வாய ரே
பதியே யிந்த வுலகி லெனக்கு
 மிகவு நேய ரே
நாட்டா ரெனினு நின்னை யுளத்து
 நாட்டா ராயி லோ
நயவேன் சிறிது நயத்தல் கயக்கு
 மெட்டிக் காயி லோ. எனக்கும் அ0

சின்ன வயது தொடங்கி யென்னைக்
 காக்குந் தெய்வ மே
சிறியேன் மயங்குந் தோறு மயக்கந்
 தீர்க்குந் தெய்வ மே
என்னை யவத்தைக் கடல்நின் றிங்கு
 னெடுத்த தெய்வ மே
எல்லா நலமுந் தருமின் னமுதங்
 கொடுத்த தெய்வ மே. எனக்கும் அக

அச்சந் தீர்த்திங் கென்னை யாட்கொண்
டருளு மமுத னே
அடியேன் பிழைக ளனைத்தும் பொறுத்துள்
ளமர்ந்த வமுத னே
இச்சை யாவு முடித்துக் கொடுத்துள்
ளிலங்குங் குரவ னே
என்று மிறவாக் கல்வி யடியேற்
கீய்ந்த குரவ னே. எனக்கும் ௮௨

உள்ளும் புறத்துங் கருணை யமுத
மூட்டு மன்னை யே
ஓதா துணர வுணரு முணர்வை
யுதவு மன்னை யே
தெள்ளுங் கருணைச் செங்கோல் செலுத்தச்
செய்த அப்ப னே
செல்வப் பிள்ளை யாக்கி யென்னுட்
சேர்ந்த அப்ப னே. எனக்கும் ௮௩

இரவும் பகலு மென்னைக் காத்துள்
ளிருக்கு மிறைவ னே
எல்லா வுலகும் புகழ வெனைமே
லேற்று மிறைவ னே
கரவு நினையா தெனக்கு மெய்ம்மை
காட்டுந் துணைவ னே
களித்தென் றனையுஞ் சன்மார்க் கத்தில்
நாட்டுந் துணைவ னே. எனக்கும் ௮௪

சற்றும் வருந்தப் பாரா தென்னைத்
தாங்கு நேய னே
தானா னென்று பிரித்தற் கரிய
தரத்து நேய னே
முற்றுந் தனதை யெனக்குக் கொடுத்து
முயங்கு நேய னே
முன்னே நான்செய் தவத்தி லெனக்குள்
முளைத்த நேய னே. எனக்கும் ௮௫

நேயா நின்னை நினைக்க நினைக்க
நெஞ்சங் களிக்குதே
நெடிய விழிக ளிரண்டு மின்ப
நீர்துளிக்குதே
ஓயா துனது பெருமை நினைக்க
வுவகை நீடுதே
உரைப்பா ரெவரென் றுலகிற் பலரை
யோடித் தேடுதே. எனக்கும் ௬௬

பொன்னே நின்னை யுன்ன வுடம்பு
புளக மூடுதே
பொதுவைக் காண வுள்ளே யாசை
பொங்கி யாடுதே
என்னே பிறர்தம் வரவு நோக்கக்
கண்கள் வெதும்புதே
எந்தாய் வரவை நினைக்கக் களிப்புப்
பொங்கித் ததும்புதே. எனக்கும் ௬௭

மணியே நின்னைப் பொதுவிற் கண்ட
மனிதர் தேவரே
மனிதர் கண்ணிற் பட்ட புல்லு
மரமுந் தேவரே
அணியே நின்னைப் பாடு மடியர்
தாமோ மூவரே
அவரைக் கண்டா ரவரைக் கண்டா
ரவர்கண் மூவரே. எனக்கும் ௬௮

வாழ்வே நினது நடங்கண் டவரைச்
சுத்த ரென்பரே
மலங்கண் மூன்றுந் தவிர்த்த சுத்த
முத்த ரென்பரே
ஏழ்வே தனையு நீக்கி வாழு
நித்த ரென்பரே
எல்லாஞ் செய்ய வல்ல ஞான
சித்த ரென்பரே. எனக்கும் ௬௯

சிவமே நின்னைப் பொதுவிற் கண்ட
செல்வர் தம்மை யே
தேவர் கண்டு கொண்டு வணங்கு
கின்ற ரிம்மை யே
தவமே புரிந்து நின்னை யுணர்ந்த
சாந்த சித்த ரே
தகுமைந் தொழிலுந் தாமே யியற்ற
வாய்ந்த சித்த ரே. எனக்கும் ௧0

ஐவ ராலு நின்னை யறிதற்
கருமை யருமை யே
ஆரே யறிவர் மறையு மறியா
நினது பெருமை யே
பொய்வ ராத வாய்கொண் டுன்னைப்
போற்று மன்ப ரே
பொருளே நின்னை யறிவ ரவரே
யழியா வின்ப ரே. எனக்கும் ௧௧

என்னைக் காட்டி யென்னு ளிலங்கு
நின்னைக் காட்டி யே
இறங்கா நிலையி லேற்றி ஞான
வமுத மூட்டி யே
பொன்னைக் காட்டிப் பொன்னே நினது
புகழைப் பாடி யே
புந்தி களிக்க வைத்தா யழியா
தென்னை நாடி யே. எனக்கும் ௧௨

அண்ட கோடி யனைத்துங் காணுங்
கண்க ளெய்தி யே
அறிந்தே னங்கைக் கனிபோ லவற்றி
லுள்ள செய்தி யே
பிண்ட கோடி முழுதுங் காணப்
பெற்று நின்னை யே
பேசிப் பேசி வியக்கின் றேனிப்
பிறவி தன்னை யே. எனக்கும் ௧௩

சிற்றம் பலத்தி னடநங் காட்டிச்
சிவத்தைக் காட்டி யே
சிறப்பா யெல்லாம் வல்ல சித்தித்
திறத்தைக் காட்டி யே
குற்றம் பலவுந் தீர்த்தென் றனக்கோர்
முடியுஞ் சூட்டி யே
கோவே நீயு மென்னுட் கலந்து
கொண்டாய் நாட்டி யே. எனக்கும் கச

சுத்த நிலையி னடுநின் றெங்குந்
தோன்றுஞ் சோதி யே
துரிய வெளியைக் கடந்தப் பாலுந்
துலங்குஞ் சோதி யே
சித்த ருளத்திற் சுடர்செய் தோங்குந்
தெய்வச் சோதி யே
சிற்றம் பலத்தி னடஞ்செய் தெனக்குட்
சிறந்த சோதி யே. எனக்கும் கரு

அன்றே யென்னை யடிய னாக்கி
யாண்ட சோதி யே
அதன்பின் பிள்ளை யாக்கி யருளிங்
களித்த சோதி யே
நன்றே மீட்டு நேய னாக்கி
நயந்த சோதி யே
நானு நீயு மொன்றென் றுரைத்து
நல்கு சோதி யே. எனக்கும் கசு

நீயே வலிந்திங் கென்னை யாண்ட
நீதிச் சோதி யே
நின்னைப் பாட வென்னை வளர்க்கு
நிமலச் சோதி யே
தாயே யெனவந் தென்னைக் காத்த
தருமச் சோதி யே
தன்மை பிறரா லறிதற் கரிய
தலைமைச் சோதி யே. எனக்கும் கஎ

சாகாக் கல்வி யெனக்குப் பயிற்றித்
தந்த சோதி யே
தன்னோர் முடியொன் றெனது முடியிற்
றரித்த சோதி யே
ஏகாக் கரப்பொற் பீடத் தென்னை
யேற்று சோதி யே
எல்லாம் வல்ல சித்தி யாட்சி
யீய்ந்த சோதி யே. எனக்கும் கஅ

சோதி யெவையும் விளங்க விளங்கு
சோதி வாழி யே
துரிய வெளியி னடுநின் றோங்குஞ்
சோதி வாழி யே
சூதி லாமெய்ச் சிற்றம் பலத்துச்
சோதி வெல்க வே
துலங்கப் பொன்னம் பலத்தி லாடுஞ்
சோதி வெல்க வே. எனக்கும் கக

சுத்த சிவசன் மார்க்க நீதிச்
சோதி போற்றி யே
சுகவாழ் வளித்த சிற்றம் பலத்துச்
சோதி போற்றி யே
சுத்த சுடர்ப்பொற் சபையி லாடுஞ்
சோதி போற்றி யே
சோதி முழுதும் விளங்க விளங்குஞ்
சோதி போற்றி யே.

எனக்கு முனக்கு மிசைந்த பொருத்த
மென்ன பொருத்த மோ
இந்தப் பொருத்த முலகில் பிறருக்
கெய்தும் பொருத்த மோ. ௩௰

திருச்சிற்றம்பலம்

கூ. ஆனந்தக் களிப்புகள் முற்றுப் பெற்றன.

# சா. பண்கள்[251]

## 1. வளர்பதி விளக்கம்[252]

திருச்சிற்றம்பலம்

உரைவளர் கலையே கலைவள ருரையே
வுரைகலை வளர்தரு பொருளே
விரைவளர் மலரே மலர்வளர் விரையே
விரைமலர் வளர்தரு நறவே
கரைவளர் தருவே தருவளர் கரையே
கரைதரு வளர்கிளர் கனியே
பரைவள ரொளியே வொளிவளர் பரையே
பரையொளி வளர்சிவ பதியே.[253]

---

251. இந்தத் தலைப்பின் கீழ்ச் சேர்க்கப்பட்டிருக்கும் "கண்ணே கண்மணியே," "விரைசேர் பொன்மலரே" என்னும் இரண்டு திருப்பதிகங்களின் தலைப்பில் "பண்-நட்டராகம்" என்று 1885-ம் வருஷ அச்சுப் பிரதியில் குறித்திருக்கிறதையும், "உரைவளர் கலையே" என்னும் மற்றத் திருப்பதிகம் சிலப்பதிகாரம் கானல் வரியில் உள்ள "பொழில்தரு நறுமலரே" முதலிய வரிப்பாடல்கள் போன்றிருப்பதையும் கொண்டு, இவை "பண்கள்" என்னும் தலைப்பின் கீழ் இங்கு அச்சிடப்பட்டிருக்கின்றன.

252. சுவாமிகள் தெய்வத் திருக்கரத்தால் எழுதியுள்ள மூலமே இத்திருப்பாடலுக்கு ஆதாரம். இதற்குக் கிடைத்த அன்பர்கள் கையெழுத்துப் பிரதிகள் மூன்று.

253. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும்:—

(i) காம்போஜி—ஆதி

(ii) உ ரை வ ளர் க லை யே க லை வ ளர் உ ரை யே |
ப த ஸ் ரி ரி த தா ப த ரி த த ப பம |

உ ரை க லை வ ளர் த ரு | பொ ரு ளே ||
ப த ரி த ப ப ம க | ப த ஸா ; ; ||

ஒளிவள ருயிரே வுயிர்வள ரொளியே
　　வொளியுயிர் வளர்தரு முணர்வே
வெளிவளர் நிறைவே நிறைவளர் வெளியே
　　வெளிநிறை வளர்தரு விளைவே
வளிவள ரசைவே யசைவளர் வளியே
　　வளியசை வளர்தரு செயலே
அளிவள ரனலே யனல்வள ரளியே
　　அளியனல் வளர்சிவ பதியே. ௨

அடிவள ரியலே யியல்வள ரடியே
　　யடியியல் வளர்தரு கதியே
முடிவளர் பொருளே பொருள்வளர் முடியே
　　முடிபொருள் வளர்சுக நிதியே
படிவளர் விதையே விதைவளர் படியே
　　படிவிதை வளர்பல நிகழ்வே
தடிவளர் முகிலே முகில்வளர் தடியே
　　தடிமுகில் வளர்சிவ பதியே. ௩

சிரம்வளர் முதலே முதல்வளர் சிரமே
　　சிரமுதல் வளர்தரு செறிவே
தரம்வளர் நிலையே நிலைவளர் தரமே
　　தரநிலை வளர்தரு தகவே
வரம்வளர் நிறையே நிறைவளர் வரமே
　　வரநிறை வளர்தரு வயமே
பரம்வளர் பதமே பதம்வளர் பரமே
　　பரபதம் வளர்சிவ பதியே. ௪

---

வி ரை வ ளர் ம ல ரே ம லர் வ ளர் வி ரை யே |
ப த ஸ் ஸ் ஸ் நி தப ம த ப ம க ஸ ரீ |

வி ரை ம லர் வ ளர் த ரு | ந ற வே ||
ரி ப ம க ரி ஸ நி த | ப த ஸா ; ; ||

(மற்ற இரண்டடிகளுக்கும் மேற்கண்ட ஸ்வரங்களே.)

திருவளர் வளமே வளம்வளர் திருவே
திருவளம் வளர்தரு திகழ்வே
உருவளர் வடிவே வடிவள ருருவே
வுருவடி வளர்தரு முறைவே
கருவள ரருவே யருவளர் கருவே
கருவரு வளர்நவ கதியே
குருவளர் நெறியே நெறிவளர் குருவே
குருநெறி வளர்சிவ பதியே. ரு

நிறைவளர் முறையே முறைவளர் நிறையே
நிறைமுறை வளர்பெரு நெறியே
பொறைவளர் புவியே புவிவளர் பொறையே
புவிபொறை வளர்தரு புனலே
துறைவளர் கடலே கடல்வளர் துறையே
துறைகடல் வளர்தரு சுதையே
மறைவளர் பொருளே பொருள்வளர் மறையே
மறைபொருள் வளர்சிவ பதியே. சு

தவம்வளர் தயையே தயைவளர் தவமே
தவநிறை தயைவளர் சதுரே
நவம்வளர் புரமே புரம்வளர் நவமே
நவபுரம் வளர்தரு மிறையே
துவம்வளர் குணமே குணம்வளர் துவமே
துவகுணம் வளர்தரு திகழ்வே
சிவம்வளர் பதமே பதம்வளர் சிவமே
சிவபதம் வளர்சிவ பதியே. எ

நடம்வளர் நலமே நலம்வளர் நடமே
நடநலம் வளர்தரும் ஒளியே
இடம்வளர் வலமே வலம்வள ரிடமே
யிடம்வலம் வளர்தரு மிசைவே
திடம்வள ருளமே யுளம்வளர் திடமே
திடவுளம் வளர்தரு திருவே
கடம்வள ருயிரே யுயிர்வளர் கடமே
கடமுயிர் வளர்சிவ பதியே. அ

அதுவள ரணுவே யணுவள ரதுவே
யதுவணு வளர்தரு முறவே
விதுவள ரொளியே யொளிவளர் விதுவே
விதுவொளி வளர்தரு செயலே
மதுவளர் சுவையே சுவைவளர் மதுவே
மதுவுறு சுவைவள ரியலே
பொதுவளர் வெளியே வெளிவளர் பொதுவே
பொதுவெளி வளர்சிவ பதியே. க

நிதிவளர் நிலமே நிலம்வளர் நிதியே
நிதிநிலம் வளர்தரு நிறைவே
மதிவளர் நலமே நலம்வளர் மதியே
மதிநலம் வளர்தரு பரமே
கதிவளர் நிலையே நிலைவளர் கதியே
கதிநிலை வளர்தரு பொருளே
பதிவளர் பதமே பதம்வளர் பதியே
பதிபதம் வளர்சிவ பதியே. க0

திருச்சிற்றம்பலம்

---

## 2. ஞானோபதேசம்[254]

திருச்சிற்றம்பலம்

கண்ணே கண்மணி யே—கருத்
தேகருத் தின்கனி வே
விண்ணே விண்ணிறை வே—சிவ
மேதனி மெய்ப்பொரு ளே
தண்ணே ரொண்மதி யே—யெனைத்
தந்த தயாநிதி யே
உண்ணே ருள்ளொளி யே—யெனக்
குண்மை யுரைத்தரு ளே.[255] க

---

254. சுவாமிகள் தெய்வத் திருக்கரத்தால் எழுதியுள்ள மூலமே இத் திருப்பாடலுக்கு ஆதாரம். இதற்குக் கிடைத்த

வளியே வெண்ணெருப் பே—குளிர்
　　மாமதி யேகன லே
வெளியே மெய்ப்பொரு ளே—பொருள்
　　மேவிய மேனிலை யே
அளியே யற்புத மே—யமு
　　தேயறி வேயர சே
ஒளியே யுத்தம னே—யெனக்
　　குண்மை யுரைத்தரு ளே. உ

அன்பே யென்னர சே—திரு
　　வம்பலத் தாரமு தே
யென்பே யுள்ளுரு கக்—கலந்
　　தென்னு ளிருந்தவ னே
யின்பே யென்னறி வே—பர
　　மேசிவ மேயென வே
உன்பே ரோதுகின் றே—னெனக்
　　குண்மை யுரைத்தரு ளே. ௩

---

அன்பர்கள் கையெழுத்துப் பிரதிகள் ஐந்து. 1885-ம் வருஷ அச்சுப் பிரதியில் இதன் தலைப்பில் "பண்-நட்டராகம்" என்று குறித்திருக்கிறது.

255. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும்:—

(i) நீலாம்பரி—ரூபகம்

(ii)
கண் ணே | க ண் ம ணி || யே | க ருத் ||
ஸா ஸா | நீ ஸா கா கா || மா ; | ; ; மா கா ||

தே க | ருத் தின் க ண் || வே | ||
கம பா | பா பா பா பத || பா ; | ; ; ; ; ||

விண் ணே | விண் ணி றை || வே | சி வ ||
கம பா | ; பா ஸா நீ || பா ; | ; ; மா கா ||

மே த | ணி மெய்ப் பொ ரு || ளே | ||
மா பா | மா கா மா நீ || மா ; | ; காஸா ; ||

(மற்ற இரண்டடிகளுக்கும் மேற்கண்ட ஸ்வரங்களே.)

தனையா வென்றழைத் தே—யருட்
சத்தி யளித்தவ னே
அனையா யப்பனு மா—யெனக்
காரிய ஞனவ னே
இனையா தென்னையு மே—ணிலை
யேற்றுவித் தாண்டவ னே
உனையா னேத்துகின் றே—னெனக்
குண்மை யுரைத்தரு ளே.

துப்பார் செஞ்சுட ரே—யருட்
சோதி சுகக்கட லே
அப்பா வென்னர சே—திரு
வம்பலத் தாரமு தே
இப்பா ரிற்பசிக் கே—தந்த
வின்சுவை நல்லுண வே
ஒப்பாய் ஒப்பரி யா—யெனக்
குண்மை யுரைத்தரு ளே.

என்றே யென்று ஞறுஞ்—சுட
ரேயெனை யீன்றவ னே
நன்றே நண்பெனக் கே—மிக
நல்கிய நாயக னே
மன்றோர் மாமணி யே—சுக
வாழ்க்கையின் மெய்ப்பொரு ளே
ஒன்றே யென்றுணை யே—யெனக்
குண்மை யுரைத்தரு ளே.

திருவே தெள்ளமு தே—அருட்
சித்த சிகாமணி யே
கருவே ரற்றிட வே—களை
கின்றவென் கண்ணுத லே

மருவே மாமல ரே—மலர்
வாழ்கின்ற வானவ ளும்
உருவே யென்குரு வே—யெனக்
குண்மை யுரைத்தரு ளே. எ

தடையா வுந்தவிர்த் தே—யெனைத்
தாங்கிக்கொண் டாண்டவ னே
அடையா யன்பிலர் பால்—எனக்
கன்பொடு தந்தபெ ருங்
கொடையாய் குற்றமெ லாங்—குணங்
கொண்டகு ணக்குன்ற மே
உடையா யுத்தம னே—யெனக்
குண்மை யுரைத்தரு ளே. அ

பெண்ணு யாணுரு வாய்—எனைப்
பெற்றபெ ருந்தகை யே
அண்ணு என்னர சே—திரு
வம்பலத் தாடுகின் ருேய்
எண்ணு நாயடி யேன்—களித்
திட்டவு ணவையெ லாம்
உண்ணு துண்டவ னே—யெனக்
குண்மை யுரைத்தரு ளே. கூ

நந்நா லுங்கடந் தே—யொளிர்
ஞானச பாபதி யே
பொன்னு ருஞ்சபை யா—யருட்
பூரண புண்ணிய னே
என்னு லாவதொன் று—முனக்
கில்லையெ னினுமெந் தாய்
உன்னுல் வாழுகின் றே—னெனக்
குண்மை யுரைத்தரு ளே. க0

திருச்சிற்றம்பலம்

## 3. ஆரமுதப் பேறு[256]

திருச்சிற்றம்பலம்

விரைசேர் பொன்மல ரே—யதின்
மேவிய செந்தே னே
கரைசேர் முக்கனி யே—கனி
யிற்சுவை யின்பய னே
பரைசே ருள்ளொளி யே—பெரும்
பற்றம்ப லநடஞ் செய்
அரைசே தந்தனை யே—யரு
ளாரமு தந்தனை யே.[257] க

---

256. சுவாமிகள் தெய்வத் திருக்கரத்தால் எழுதிய மூலமே இத் திருப்பதிகத்தின் முதற் பத்துப் பாடல்களுக்கு ஆதாரம். இதற்குக் கிடைத்த அன்பர்கள் கையெழுத்துப் பிரதிகள் மூன்று. அவற்றுள் இரண்டில்—ஸ்ரீ இருக்கம் இரத்தின முதலியார் அவர்கள், ஸ்ரீ ஆபேர் சபாபதி சிவாசாரியார் அவர்கள் பிரதிகளில்—இங்கு அச்சிடப்பட்டிருக்கிற அ, கூ, ம-வது எண்கள் இட்ட மூன்று பாடல்களும் வேறு தனிடாக எழுதப்பட்டு, தொடர்ந்த எண் இட்டு எழுதப்பட்ட—இங்கு க, உ, ங, ச, ரு, சு, எ, கக, கஉ, கங எண்கள் இட்ட—மற்றப் பத்துப் பாடல்களின் தொடர்ச்சி என்று குறித்து வைத்திருக்கிறது. மற்றதாகிய ஸ்ரீ வேங்கடேசய்யர் அவர்கள் பிரதியில் இப்பதின்மூன்று பாடல் களும் ஒருசேரத் தொடர்ந்து அவ்விரு பிரதிகளின் எண் வரிசைப் படி எழுதப்பட்டிருக்கின்றன. 251-வது அடிக்குறிப்பைப் பார்க்க.

257. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும்:—

(i) சங்கராபரணம்—ரூபகம்.

(ii)

| வி ரை சேர் | பொ ன் ம ல ‖ ரே | அ தி ன் ‖ |
| --- | --- | --- |
| ஸ ஸ ஸா | நீ ஸா கா ரீ ‖ கா ; | ; ; மா கா ‖ |

விண்ணோர் செஞ்சுட ரே—சுடர்
மேவிய வுள்ளொளி யே
தண்ணார் வெண்மதி யே—யதிற்
றங்கிய தண்ணமு தே
கண்ணார் மெய்க்கன லே—சிவ
காமப்பெண் காதல னே
அண்ணா தந்தனை யே—யரு
ளாரமு தந்தனை யே. ௨

துப்பார் செஞ்சடை யாய்—அருட்
சோதிச் சுகக்கட லே
செப்பா மேனிலைக் கே—சிறி
யேனைச் செலுத்திய வா
எப்பா லும்புக ழும்—பொது
வின்ப நடம்புரி யும்
அப்பா தந்தனை யே—யரு
ளாரமு தந்தனை யே. ௩

மெய்யா மெய்யரு ளே—என்று
மேவிய மெய்ப்பொரு ளே
கையா ருங்கனி யே—நுதற்
கண்கொண்ட செங்கரும் பே
செய்யாய் வெண்ணிறத் தாய்—திருச்
சிற்றம்ப லநடஞ் செய்
ஐயா தந்தனை யே—யரு
ளாரமு தந்தனை யே. ௪

---

மே வி | ய செந் தே || னே | ||
மா பா | மா ரீகா மா || பா ; | ; ; ; ; ||
க ரை சேர் | முக் க னி || யே | க னி ||
க க மா | ; பா தா நீ || ஸா ; | ; ; மா கா ||
யிற் சு | வை யின் பய || னே | ||
மா பா | மா ரீ காபா || ரீ ; | ; ஸா ; ; ||

(மற்ற இரண்டடிகளுக்கும் மேற்கண்ட ஸ்வரங்களே.)

பொறிவே றின்றி நினை—நிதம்
போற்றும் புனிதரு ளே
குறிவே றின்றி நின்ற—பெருஞ்
சோதிக் கொழுஞ்சுட ரே
செறிவே தங்களெ லாம்—உரை
செய்ய நிறைந்திடும் பேர்
அறிவே தந்தனை யே—யரு
ளாரமு தந்தனை யே. ௫

முத்தா முத்தரு ளே—யொளிர்
கின்ற முழுமுத லே
சித்தா சித்தியெ லாந்—தர
வல்ல செழுஞ்சுட ரே
பித்தா பித்தனெ னை—வலிந்
தாண்ட பெருந்தகை யே
அத்தா தந்தனை யே—யரு
ளாரமு தந்தனை யே. ௬

தன்னே ரில்லவ னே—யெனைத்
தந்த தயாநிதி யே
மன்னே மன்றிடத் தே—நடஞ்
செய்யுமென் வாழ்முத லே
பொன்னே யென்னுயி ரே—யுயி
ருண்ணிறை பூரண மே
அன்னே தந்தனை யே—யரு
ளாரமு தந்தனை யே. ௭

ஒளியே யவ்வொளி யின்—நடு
வுள்ளொளிக் குள்ளொளி யே
வெளியே யெவ்வெளி யும்—அடங்
கின்ற வெறுவெளி யே

தளியே யம்பலத் தே—நடஞ்
செய்யுந் தயாநிதி யே
அளியே தந்தனை யே—யரு
ளாரமு தந்தனை யே. அ

மருளேய் நெஞ்சக னேன்—மன
வாட்டமெ லாந்தவிர்த் தே
தெருளே யோர்வடி வா—புறச்
செய்த செழுஞ்சுட ரே
பொருளே சிற்சபை வாழ்—வுறு
கின்றவென் புண்ணிய னே
அருளே தந்தனை யே—யரு
ளாரமு தந்தனை யே. கூ

முன்பே யென்றனை யே—வலிந்
தாட்கொண்ட முன்னவ னே
இன்பே யென்னுயி ரே—யெனை
யீன்ற விறையவ னே
பொன்பே ரம்பல வா—சிவ
போகஞ்செய் சிற்சபை வாழ்
அன்பே தந்தனை யே—யரு
ளாரமு தந்தனை யே. கo

பவனே வெம்பவ நோய்—தனைத்
தீர்க்கும் பரஞ்சுட ரே
சிவனே செம்பொரு ளே—திருச்
சிற்றம் பலநடிப் பாய்
தவநே யம்பெறு வார்—தமைத்
தாங்கி யருள்செய வல்
லவனே தந்தனை யே—யரு
ளாரமு தந்தனை யே. கக

தேனாய்த் தீம்பழ மாய்ச்—சுவை
சேர்கரும் பாயமு தம்
தானா யன்பரு ளே—யினிக்
கின்ற தனிப்பொரு ளே
வானாய்க் காலன லாய்ப்—புன
லாயதில் வாழ்புவி யாய்
ஆனாய் தந்தனை யே—யரு
ளாரமு தந்தனை யே.

பொடியேற் கும்புய னே—யருட்
பொன்னம் பலத்தர சே
செடியேற் கன்றளித் தாய்—திருச்
சிற்றம் பலச்சுட ரே
கடியேற் கன்னையெ னுஞ்—சிவ
காமக் கொடியுடை யாய்
அடியேற் கின்றளித் தா—யரு
ளாரமு தந்தனை யே.

திருச்சிற்றம்பலம்

---

௬. பண்கள் முற்றுப் பெற்றன.

# எ. கீர்த்தனங்கள்

## 1. இன்னந் தயவு

திருச்சிற்றம்பலம்

### பல்லவி

இன்னந் தயவுவர விலையா — உனக்கென்மீதில்
என்ன வர்மஞ் சொலையா.[259]

### சரணங்கள்

அன்னம் பாலிக்குந்தில்லைப் பொன்னம் பலத்திலாடும்
அரசே — அரசே — அரசேயென் றலறவும். இன் க

சின்னஞ் சிறுவயதி லென்னை யடிமைகொண்ட
சிவமே — சிவமே — சிவமேயென் றலறவும். இன் உ

---

258. இத் திருப்பாடல் ஸ்ரீ வேங்கடேசய்யர் அவர்கள் கையெழுத்துப் பிரதி ஒன்றில் மட்டும் "என்ன புண்ணியம்" "அற்புதம் அற்புதம்" என்னும் திருப்பாடல்களுக்கு இடையில் எழுதப்பட்டிருக்கிறது. 1867-ம் வருஷம் முதல் முதலாகத் திருவருட்பா ஸ்ரீ தொழுவூர் வேலாயுத முதலியார் அவர்களால் அச்சிடப்பட்ட போதே இது அதில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

259. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும்:—

(i) காம்போஜி—ஆதி

(ii) பல்லவி

இன் னம் த ய வு வ ர | வி லை யா | உ ||
ஸ்ா, நி, தா பா தா மா கா | பா தா ஸ்ா; | ; ; ; நீ ||

னக் கென் மீ தில் என் ன | வர் மஞ் சொ லை | யா ||
கா பா மா கா நிகமா; கா | நீ ஸா பா தா | ஸா;;; ||

முன்னம் பிழைபொறுத்தா யின்னம் பொறுதுவிட்டால்
முறையோ—முறையோ—முறையோவென் றலறவும். ரு

தன்னை யறியாவென்னை யின்ன லுறச்செய்தாயே
தகுமோ—தகுமோ—தகுமோவென் றலறவும். இன் சு

பண்டு மகிழ்ந்தெனையாட் கொண்டு கருணைசெய்த
பரமே—பரமே—பரமேயென் றலறவும். இன் ஙு

கொண்டு குலம்பேசுவா ருண்டோ வுலகிலெங்கள்
குருவே—குருவே—குருவேயென் றலறவும்.

இன்னந் தயவுவர விலையா—உனக்கென்மீதில்
என்ன வர்மஞ் சொலையா. அ

திருச்சிற்றம்பலம்

---

சரணம்

அன் னம் பா லிக் குந் தில் லைப் | பொன் னம் ப |
மா பா; தா ஸா ஸா ரீ க்ர | ம்க் ஸா; ஸா |

லத் தி லா டும் ||
நீ தா பா தா ||

அ ர சே அ ர சே | அ ர சே யென் |
பா தா ஸா; நீ தா பா; | பா பா தா பா |

ற ல ர வும் || (இன்)
மா கா பா தா || (ஸா)

## 2. அபயம் அபயம்[260]

திருச்சிற்றம்பலம்

### பல்லவி

அபயம் அபயம் அபயம்[261]

### சரணங்கள்

உபயம தாயென் னுறவாய்ச் சிதம்பரச்
சபையில் நடஞ்செயுஞ்[262] சாமிபா தத்திற்கே.[263]　　க

---

260. இத் திருப்பாடலுக்குக் கிடைத்த அன்பர்கள் கையெழுத்துப் பிரதிகள் ஐந்து. ஸ்ரீ மகாதேவ முதலியார் அவர்கள் பிரதியில் பல்லவியின்றி முதல் மூன்று சரணங்கள் மட்டுமே எழுதி "இல் பாக்கி யிருக்கிறது" என்று குறித்து வைத்திருக்கிறது. ஸ்ரீ ஆடூர் சபாபதி சிவாசாரியர் அவர்கள் பிரதியில் இறுதியில் "சத்தியஞானத் திருச்சபையி லானந்த நடனம் புரியு மருட்பிரகாசப் பெருமான் திருவடி வாழ்க" என்றெழுதி யிருக்கிறது. ஸ்ரீ சமரச பஜனை ச. மு. கந்தசாமி பிள்ளை அவர்களது 1924-ம் வருஷப் பதிப்பில் பல்லவியை முதலிலும் கடைசியிலும் "அபயம் அபயம் அபயம் அபயம்" என்று அச்சிட்டிருக்கிறது.

261. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும்:—

(i) தோடி—ஆதி

(ii) பல்லவி

அ ப யம் அ ப யம் | அ ப யம் | அ ப யம் ||
;ஸரி கா மா ;பத நிஸ் தா | ;ம ப கா; | ரீ நீ ஸா; ||

சரணம்

உ ப ய ம தாய் என் | உ ற வாய்ச் |
;க கா ம மா தா ; மா ; | ; த நி ஸா ; |
சி தம் ப ர ||
ரீ நீ ஸா ஸா ||

எம்பலத் தாலெம்மை[264] யேன்றுகொ ளத்தில்லை
அம்பலத் தாடுமெம் ஐயர்பா தத்திற்கே. அபயம் ௨

தவசிதம் பரமாகித் தன்மய மாய்ச்செயுஞ்[265]
சிவசிதம் பரமகா தேவர்பா தத்திற்கே. அபயம் ௩

ஒன்றும் பதத்திற் குயர்பொரு ளாகியே
என்றுமென் னுள்ளத் தினிக்கும்பா தத்திற்கே. அப ௪

வானந்த மாந்தில்லை மன்றிடை யென்றுநின்
றானந்தத் தாண்டவ மாடும்பா தத்திற்கே. அபயம் ௫

நாரா யணனொடு நான்முக னாதியர்
பாரா யணஞ்செயும் பதுமபா தத்திற்கே. அபயம் ௬

அன்பர் செயும்பிழை ஆயிர மும்பொறுத்
தின்ப மளிக்குநம் ஈசர்பா தத்திற்கே. அபயம் ௭

குற்றஞ் செயினுங் குணமாகக் கொண்டுநம்
அற்றந் தவிர்க்குநம் அப்பர்[266]பா தத்திற்கே. அபயம் ௮

செம்பொரு ளாகிச் சிதம்பரத் தேயென்றும்
சம்பொரு ளான நடேசர்பா தத்திற்கே. அபயம் ௯

வெச்சென்ற மாயை வினையாதி யால்வந்த
அச்சந் தவிர்க்குநம் ஐயர்பா தத்திற்கே. அபயம் ௧0

---

ச பை யில் ந டஞ் செ யுஞ் | சா மி பா |
க்ரி ஸா நீ தா நீ ஸா | ;ரி ஸாரி தப |

தத் திற் கே || (அப)
மாகா ரீ நீ || (ஸரி)

262. செய்யும் — பி-ம்.

263. பதத்திற்கே—பி-ம். இப்படியே பின்வரும் எல்லா இடங்களிலும் கொள்க. 264. எமை—பி-ம்.

265. செய்யும்—பி-ம். 266. நமையர்—பி-ம்.

எண்ணிய எண்ணங்க ளெல்லா முடிக்குநம்
புண்ணிய ஞர்[267] தெய்வப் பொன்னடிப் போதுக்கே. கக

மன்னம் பரத்தே வடிவில் வடிவாகிப்
பொன்னம் பலத்தாடும் பொன்னடிப் போதுக்கே. கஉ

நாத முடியில்[268] நடம்புரிந் தன்பர்க்குப்
போத மளிக்கின்ற பொன்னடிப் போதுக்கே.[269] கங

உச்சி தாழ்கின்ற உறவோர் உறவான
சச்சி தானந்தத் தனிநடப் போதுக்கே.[269] அபயம் கச

சித்தமு முள்ளமுந் தித்தித் தினிக்கின்ற
புத்தமு தாகிய பொன்னடிப் போதுக்கே.[269]

அபயம் அபயம் அபயம். கரு

திருச்சிற்றம்பலம்

---

## 3. அஞ்சாதே நேஞ்சே[270]

திருச்சிற்றம்பலம்

### பல்லவி

அஞ்சா தேநெஞ்சே அஞ்சா தே
அஞ்சா தேநெஞ்சே அஞ்சா தே.[271]

---

267. புண்ணிய—பி-ம். 268. முடிவில்—பி-ம்.

269. இரண்டு பிரதிகளில் "நாத முடியில்" என்னும் சரணத்தை கச-வதாகவும் "சித்தமு முள்ளமும்" என்பதை கங-வதாகவும் "உச்சி தாழ்கின்ற" என்பதை கரு-வதாகவும் கொண்டிருக்கிறது.

270. இத் திருப்பாடலுக்குக் கிடைத்த அன்பர்கள் கையெழுத்துப் பிரதிகள் ஐந்து. அவற்றுள் இரண்டு பிரதிகளில் பல்லவி ஓரடியளவிலேயே இருப்பதோடு, ஒன்றில் "பல்லவி" என்றும் குறித்திருக்கிறது.

### சரணங்கள்

வஞ்சமி லார்நாம் வருந்திடி லப்போதே
அஞ்சலென் பாரிதோ அம்பலத் திருக்கின்றார். அஞ் க

துய்ய ரருட்பெருஞ் சோதியார் நம்முடை
ஐய[272] ரிதோதிரு வம்பலத் திருக்கின்றார். அஞ் உ

மண்ணில் நமையாண்ட வள்ளலார் நம்முடை
அண்ண லிதோதிரு வம்பலத் திருக்கின்றார். அஞ் ங

இப்புவி யில்நம்மை யேன்றுகொண் டாண்டநம்
அப்ப ரிதோதிரு வம்பலத் திருக்கின்றார். அஞ் ச

சித்த ரெலாம்வல்ல தேவர் நமையாண்ட
அத்த ரிதோதிரு வம்பலத் திருக்கின்றார். அஞ் ரு

---

271. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும் :—

(i) ஹிந்துஸ்தான் காபி—சாப்பு

(ii) பல்லவி

அஞ் | சா தே || நெஞ் | சே அஞ் || சா |
ஸா, | ரீ ரீ || ரீ, | ஸா ரீ || கரீ |

தே || | ||
ஸா ; || ; , | ; ; ||

அஞ் | சா தே || நெஞ் | சே அஞ் || சா |
ஸா, | கா கா || கா, | கா கா || மபா |

தே || | ||
மா ; || ; , | ; ; ||

சரணம்

வஞ் | ச மி || லா | நாம் || வ ருந் | தி டில் ||
பநீ | மா பா || நிநீ | ஸ்ா ; || ஸ்ரீ | க்ா ரீ ||

அப் | போ தே ||
ஸ்ரீ | நீ ஸ்ா ||

சோதி யருட்பெருஞ் சோதியார் நம்முடை
ஆதி யிதோதிரு வம்பலத் திருக்கின்றார். அஞ் சு

தாண்டவ ஞரென்னைத்[273] தான்தடுத் தாட்கொண்ட
ஆண்டவ ஞரிதோ அம்பலத் திருக்கின்றார். அஞ் எ

வன்பர் மனத்தை மதியா தவர்நம
தன்ப ரிதோதிரு வம்பலத் திருக்கின்றார். அஞ் அ

தெருளுடை யாரெலாஞ்[274] செய்யவல் லார்திரு
அருளுடை யாரிதோ அம்பலத் திருக்கின்றார். அஞ் கூ

நம்மை யாட்கொள்ள நடம்புரி வார்நம
தம்மையி ஞேடிதோ அம்பலத் திருக்கின்றார். அஞ் க0

தன்னையொப் பார்சிற் சபைநடஞ் செய்கின்றார்
அன்னையொப் பாரிதோ அம்பலத் திருக்கின்றார். அஞ் கக

பாடுகின் றார்க்கருட் பண்பினர் ஞானக்கூத்
தாடுகின் றாரிதோ அம்பலத் திருக்கின்றார். அஞ் கஉ

காதரிப் பார்கட்குக் காட்டிக் கொடார்நம்மை
ஆதரிப் பாரிதோ அம்பலத் திருக்கின்றார். அஞ் கங

நீளவல் லார்க்குமேல் நீளவல்லார் நம்மை
ஆளவல் லாரிதோ அம்பலத் திருக்கின்றார். அஞ் கச

---

அஞ் | ச லென் || பா | ரி தோ || அம் |
பபா | ஸ்ா ஸ்ா || தநீ | பா மா || தநீ |

பலத் || தி ருக் | கின் றார் ||
பா மா || க ரீ | ரீ ஸா ||

272. அய்யர்—பி - ம். 273. என்னை—பி - ம்.
274. எல்லாம் = பி - ம்.

இன்புடை யார்நம் மிதயத் தமர்ந்தபே
ரன்புடையா ரிதோ அம்பலத் திருக்கின்றார். அஞ் ௧௫

உபய பதத்தைநம் முச்சிமேற் சூட்டிய
அபய ரிதோதிரு வம்பலத் திருக்கின்றார். அஞ் ௧௬

வேண்டுகொண் டாரென்னை மேனிலைக் கேற்றியே
ஆண்டுகொண் டாரிதோ அம்பலத் திருக்கின்றார். அஞ் ௧௭

எச்சம்பெ றேல்மக னேயென்றென் னுள்ளுற்ற
அச்சந் தவிர்த்தவர் அம்பலத் திருக்கின்றார். அஞ் ௧௮

நமுதன் முதற்பல நன்மையு மாம்ஞான
அமுத ரிதோதிரு வம்பலத் திருக்கின்றார். அஞ் ௧௯

செடிகள் தவிர்த்தருட் செல்வ மளிக்கின்ற
அடிக ளிதோதிரு வம்பலத் திருக்கின்றார். அஞ் ௨0

விரசுல கெல்லாம் விரித்தைந் தொழில்தரும்
அரசுடை யாரிதோ அம்பலத் திருக்கின்றார். அஞ் ௨௧

செறிவுடை யாருளத் தேநடஞ் செய்கின்ற
அறிவுரு வாரிதோ[275] அம்பலத் திருக்கின்றார்.

அஞ்சா தேநெஞ்சே அஞ்சா தே
அஞ்சா தேநெஞ்சே அஞ்சா தே. ௨௨

திருச்சிற்றம்பலம்

---

275. அறிவுடை யாரிதோ—பி - ம்.

## 4. தெண்டனிட்டேன்[276]

திருச்சிற்றம்பலம்

### பல்லவி

தெண்டனிட்டே னென்று சொல்லடி
— சுவாமிக்குநான்
தெண்டனிட்டே னென்று சொல்லடி.[277]

### அநுபல்லவி

தண்டலை விளங்குந் தில்லைத்
தலத்திற்பொன் னம்பலத்தே
கண்டவர் மயங்கவேடங்
கட்டியாடு கின்றவர்க்கு. தெண்ட

---

276. இத் திருப்பாடலுக்கு இதுவரையில் ஒரு கையெழுத்துப் பிரதிகூடக் கிடைக்கவில்லை. 1867-ல் ஸ்ரீ தொழுவூர் வேலாயுத முதலியாரவர்கள் அச்சிட்டிருக்கிற பாடமே இங்கு மேற்கொள்ளப் பட்டிருக்கிறது.

277. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும் :—

(i) தோடி—ஆதி

(ii) பல்லவி

தெண் ட னிட் டே னென் று சொல் ல |
ஸா ரீ கா மா பா தா நீ நீ |

டி சு |
ஸ்ா ; ; மா |

வா மிக் கு நான் ||
நீ தா மா கா ||

தெண் ட னிட் டே னென் று சொல் ல |
நீ தா பா மா கா ரீ ஸா நீ |

டி | ||
ஸா ; ; கா | ரீ ஸா ரீ நீ ||

### சரணங்கள்

கற்பூர வாசம்வீசும்
　　பொற்பார்ந்தி ருமுகத்தே
களிந்தபுன் னகையாடக்
　　கருணைக்க டைக்கணுட
அற்பார்பொன் னம்பலத்தே
　　ஆநந்தத் தாண்டவம்
ஆடிக்கொண் டேயென்னை
　　ஆட்டங்கண் டாருக்கு. தெண்ட க

இழிந்தாலு நம்மையிங்கே
　　யேற்றுவா ரென்றடைந்தால்
எற்றுவார் போலேபின்னு
　　மிழியவைப் பாருக்குப்

---

#### அநுபல்லவி

தண் ட லை வி ளங் குந் தில் லைத் |
மா பா கா மா பா தா நீ தா |

　தி லத் திற் பொன் | னம் ப லத் தே ||
　தா நீ ஸ்ா நீ | ஸ்ா ஸ்ா ஸ்ா ஸ்ா ||

கண் ட வர் ம யங் க வே டம் |
தா க்ா ரீ ஸ்ா நீ தா பா தா |

　கட் டி யா டு | கின் ற வர் க்கு || (தெண்)
　நீ தா பா மா | கா ரீ ஸா நீ || (ஸா)

#### சரணம்

கற் பூ ர வா சம் வீ சும் | பொற் பார்ந் தி |
பா பா; மா பா பா கா மா | பத நீ; தா |

　ரு முகத் தே ||
　நீ ஸ்ா நீ தா ||

க ளிந் த புன் ன கை யா டக் |
கா நீ ஸ்ா ஸ்ா ஸ்ா ஸ்ா ஸ்ா நீ |

பழந்தான் நழுவிமெல்லப்
    பாலில் விழுந்ததென்னப்
பசப்பிப் பசப்பியன்பர்
    பண்டம் பறிப்பவர்க்கு. தெண்ட உ

சுட்டதிரு நீறுபூசித்
    தொந்தோமென் றாடுவோர்க்குத்
தோன்றுதலை மாலையணி
    தோள்விளங்க வருவார்க்குப்
பிட்டுக்காசைப் பட்டுமாறன்
    பிரம்படி பட்டவர்க்குப்
பிள்ளைக்கறிக் காசைகொண்ட
    கள்ளத்தவ வேடருக்கு. தெண்ட ௩

வாழ்ந்தாரை மேன்மேலும்
    வாழச்செய் பவருக்கு
மாசுபறித் தவர்கையிற்
    காசுபறிக் கின்றவர்க்குத்
தாழ்ந்தாரை யடிக்கடி
    தாழக்காண் பவருக்குத்
தானுகி நானுகித்
    தனியேநின் றவருக்கு. தெண்ட ௪

---

க ரு ணைக் க | டைக் க ளு ட ||
நீ நீ தா தா | நீ ஸ்ா நீ தா ||

அற் பார் பொன் னம் ப லத் தே |
பா பா ; தா நீ நீ ஸ்ா ஸ்ா |

ஆ நந் தத் | தா ண் ட வம் ||
தா க்ா ரீ ஸ்ா | நீ தா நீ ஸ்ா ||

ஆ டிக் கொ ண் டே யென் னை |
தாநீ ஸ்ா நீ தா மா கா மா |

ஆ ட் டங் கண் | டா ருக் கு || (தெண்)
சா நீ தா மா | காரீ ஸா நீ || (ஸா)

ஆதியந்த நடுவில்லா
    ஆநந்த நாடருக்கு
அண்டருயிர் காத்தமணி
    கண்டசசி கண்டருக்குச்
சோதிமய மாய்விளங்குந்
    தூயவடி வாளருக்குத்
தொண்டர்குடி கெடுக்கவே
    துஜங்கட்டிக் கொண்டவர்க்கு. தெண்ட ௫

பாட்டுக்காசைப் பட்டுமுன்னம்
    பரவைதன் வாயிலிற்போய்ப்
பண்புரைத்துத் தூதனென்றே
    பட்டங்கட்டிக் கொண்டவர்க்கு
வீட்டுக்காசைப் படுவாரை
    வீட்டைவிட்டுத் துரத்தியே
வேட்டாண்டி யாயுலகில்
    ஓட்டாண்டி யாக்குவார்க்கு. தெண்ட ௬

தாய்வயிற்றிற் பிறவாது
    தானே முளைத்தவர்க்குச்
சாதிகுல மறியாது
    தாண்டவஞ்செய் கின்றவர்க்கு
ஏய தொழிலருளு
    மென்பிராண நாயகர்க்கு
ஏமாந்த வரையெல்லாம்
    ஏமாத்து* மீசருக்கு.

தெண்டனிட்டே னென்று சொல்லடி
    —சுவாமிக்குநான்
தெண்டனிட்டே னென்று சொல்லடி. ௭

திருச்சிற்றம்பலம்

---

* ஏமாற்றும்—பி-ம். (1887-ம் வருஷப் பதிப்பு)

## 5. வருவார் அழைத்துவாடி[278]

திருச்சிற்றம்பலம்

### பல்லவி

வருவாரழைத்துவாடி வடலூர்வடதிசைக்கே
வந்தாற்பெறலாம்நல்ல வரமே.[279]

### அநுபல்லவி

திருவார்பொன்னம்பலத்தே செழிக்குங்குஞ் சிதபாதர்
சிவசிதம் பரபோதர் தெய்வச்சபாநாதர்.　　வருவார்

---

278. சுவாமிகள் தெய்வத் திருக்கரத்தால் எழுதியுள்ள மூலமே இத் திருப்பாடலுக்கு ஆதாரம். இதற்குக் கிடைத்த அன்பர்கள் கையெழுத்துப் பிரதிகள் ஐந்து.

279. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும் :—

(i) பியாகடை—மிச்ரசாபு

(ii) பல்லவி

வ ரு | வா ர || ழைத் து | வா டி ||
ஸ மா | கா மா || ப மா | தா பா ||

வ ட | லூர் வ || ட தி | சைக் கே ||
ப நீ | தா பா || ம கா | ரீ கா ||

வந் | தாற் பெ || றலாம் | ந ல் ல ||
மதா | பா மா || க ரீ | க ரி கா ||

வ ர | மே ||
ம பா | ஸா ; ||

அநுபல்லவி

திரு | வார் பொன் || னம் ப | லத் தே ||
ஸமா | கா மா || ப மா | தா பா ||

செ ழிக் | குங் குஞ் || சி த | பா தர் ||
நி நீ | தா பா || ஸ் நி | ரீ ஸா ||

## சரணங்கள்

சிந்தைக ளிக்கக்கண்டு சிவானந்த மதுவுண்டு
தெளிந்தோரெல் லாருந்தொண்டு செய்யப்ப வுரிகொண்டு
இந்தவெ ளியில்நட மிடத்துணிந் தீரேயங்கே
இதைவிடப் பெருவெளி யிருக்குதென் றுலிங்கே. வரு க

---

சி வ | சி தம் || ப ர | போ தர் ||
த க்ா | ரீ ஸ்ா || நி நீ | தா பா ||

தெ ய் | வ ச் ச || பா | நா தர் || (வரு)
நி நீ | தா பா || பமா | கம ரீ || (ஸமா)

சரணம்

சி ந் | தை க || ளிக் கக் | கண் டு ||
நி நீ | தா பா || க மா | கரி கா ||

சி வா | னந் த || ம து | வுண் டு ||
க மா | கரி ஸா || ஸ ஸா | ஸா ஸா ||

தெ ளிந் | தோ ரெல் || லா ரும் | தொண் டு ||
ஸ ஸா | ஸா ஸா || க கா | கம ரீ ||

செய் | யப் ப || வு ரி | கொண் டு ||
ஸமா | கா மா || ப மா | தா பா ||

இந் | த வெ || ளி யில் | ந ட || மி டத் |
ஸமா | கா மா || ப மா | தா பா || நி நீ |

து ணிந் || தீ ரே | யங் கே ||

தப தா || ஸ்ா நி | ரீ ஸ்ா ||

இ தை | வி டப் || பெ ரு | வெ ளி ||

ம மா | க்ரி ஸ்ா || நி நி | தா பா ||

யி ருக் | கு தென் || று | லிங் கே ||
பத நீ | தா பா || பமா | கம ரீ ||

(வரு)
(ஸமா)

இடுக்கி லாமலிருக்க இடமுண்டு நடஞ்செய்ய
இங்கம் பலமொன்றங்கே யெட்டம் பலமுண்டைய
ஒடுக்கி லிருப்பதென்ன வுளவுகண்டு கொள்வீரென்ஞல்
உண்மையிது வஞ்சமல்ல வும்மேலாணை என்றுசொன்ஞல்.

மெல்லியல் சிவகாம வல்லி யுடன்களித்து
விளையா டவுமெங்கள் வினையோ டவுமொளித்து
எல்லையி லின்பந்தரவும் நல்லசம யந்தானிது
இங்குமங்கு நடமாடி யிருக்கலா மென்றபோது.

வருவார ழைத்துவாடி வடலூர்வ டதிசைக்கே
வந்தாற்பெ றலாம்நல்ல வரமே. ௩

திருச்சிற்றம்பலம்

## 6. என்ன புண்ணியம்[280]

திருச்சிற்றம்பலம்

பல்லவி

என்னபுண் ணியஞ்செய்தே ஞே—அம் மாநான்
என்னபுண் ணியஞ்செய்தே ஞே.[281]

---

280. இத் திருப்பாடலுக்குக் கிடைத்த அன்பர்கள் கை யெழுத்துப் பிரதிகள் ஐந்து. இவற்றுள் ஸ்ரீ இறுக்கம் இரத்தின முதலியாரவர்கள் பிரதியில் பல்லவி, அநுபல்லவி, சரணம் என் னும் பாகுபாட்டோடு "ஆதி தாளம்" ஆனந்த பைரவி" என்றும் இதன் தலைப்பில் குறித்திருக்கிறது.

281. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும் :—

(i) உசேனி—ரூபகம்

(ii) பல்லவி

என் | ன புண் ‖ ணி யஞ் | செய் தே ‖ ஞே |
ஸா | பா மா ‖ ப நி | தா நீ ‖ ஸ்ா |

அம் ‖ மா | நான் ‖
பா ‖ மப | மகரிஸ ‖

### அநுபல்லவி

மன்னர்நாத ரம்பலவர்
வந்தார்வந்தா ரென்றுதிருச்[282]
சின்னநாத மென்னிரண்டு
செவிகளினுட்[283] சொல்கின்றதே. என்ன

### சரணங்கள்

பொருளுண்முக னுமாலுந்
தெருளுன்ம றையுநாளும்
போற்றுஞ்சிற் றம்பலத்தே
யேற்றும ணிவிளக்காய்
அருளுடை கம்புரியுங்
கருணாநி தியருன்னை
ஆளவந்தார் வந்தாரென்றெக்
காளநாதஞ் சொல்கின்றதே. என்ன க

---

என் | ன புண் || ணி யம் | செய்.தே || னோ ] ||
ரீ | கா மா || ம ப | மகரி நி || ஸா ] ; ; ||

அநுபல்லவி

மன் | னர் நா த || ரம் | ப ல வர் || வந் தா |
பா | பப த ம || பநி | த நி ஸ்ா || ப த |

ர் வந் தார் || என் | று தி ருச் ||
, நி ஸ்ா || தநிஸ் | நித ப ம ||

சின் | ன நா த || மென் | னி ர ண் டு ||
பநி | த நீ ஸ் || நிஸ் | நி த ப ம ||

செ வி | க ளி னுட் || சொல் | கி ன் ற தே || (என்)
ப த | நி ப தப || மப | ம க ரி ஸ || (ஸா)

சரணம்

பொ ரு | ளுன் மு || க னு | மா லுந் ||
ஸ ஸ | ஸா ஸா || ப ப | , பா ம ||

தெ ரு | ளு ன் ம || றை யு | நா ளு ம் ||
ப த | நி ப் தப || ம ப | மக ரி ஸ ||

பாடியநல் லோர்தமக்கே
நாடியதெல் லாமளிப்பார்
பத்திவலை யுட்படுவார்
சத்தியர்நித் தியர்மன்றில்
ஆடியபொற் பாதர்வேதந்
தேடியசிற் போதருன்னை
அணையவந்தார் வந்தாரென்றே
இணையில்நாதஞ் சொல்கின்றதே. என்ன உ

எந்தரமுட் கொண்டஞான
சுந்தரரென் மணவாளர்
எல்லாஞ்செய் வல்லசித்தர்
நல்லோ ருளத்தமர்ந்தார்
மந்திரமா மன்றிலின்பந்
தந்தநட ராஜருன்னை
மருவவந்தார் வந்தாரென்று
தெருவில்நாதஞ் சொல்கின்றதே. என்ன ங

---

போற் | றுஞ் சிற் ‖ றம் ப | லத் தே ‖
ரிக | மக மா ‖ ம ப | மக ரிஸ ‖

வற் | று ம ‖ ணி | வி ளக் காய் ‖
ரிக | மக மா ‖ மப | ம ம மா ‖

அரு | ளை ட ‖ கம் | புரி யும் ‖ க ரு | ளை நி ‖
மப | நீ தா ‖ நிநி | ஸ்நி ஸ்ா ‖ த நி | ஸ்ா ஸ்ா ‖

தி | ய ருன் னை ‖
தநிஸ் | நி த பம ‖

ஆ | ள வந் தார் ‖ வந் தா | ரென் றெக் ‖
மப | த நி ஸ்ா ‖ தநி ஸ் | நித பம ‖

கா | ள நா தம் ‖ சொல் | கின் ற தே ‖
பத | நிப த ப ‖ மப | ம க ரிஸ ‖

(என்)

282. என்று திரு—பி-ம். 283. செவிகளினில்—பி-ம். (ளா)

ஓதியெந்த விதத்தாலும்
வேதியனுந் தேர்வரியார்
ஓங்கார பஞ்சகத்தே
பாங்காக நடிக்கின்றார்
ஆதியந்தங் காண்பரிய
ஜோதிசுயஞ் ஜோதியுன்னோ
டாடவந்தார் வந்தாரென்றே
நாடிநாதஞ் சொல்கின்றதே. என்ன ச

அற்புதப்பே ரழகாளர்
சொற்பதங் கடந்துநின்றார்
அன்பரெலாந்[284] தொழுமன்றில்
இன்பநடம் புரிகின்றார்[285]
சிற்பரரெல் லாமும்வல்ல
தற்பரர் விரைந்திங்குன்னைச்
சேரவந்தார் வந்தாரென்றோங்
காரநாதஞ் சொல்கின்றதே. என்ன ரு

ஆரணர்நா ரண[286]ரெல்லாம்
பூரணரென் றேத்துகின்ற
ஐயர்திரு வம்பலவர்
மெய்யரெல்லாம் வல்லசித்தர்
காரணமுங் காரியமுந்
தாரணிநீ யாகவுன்னைக்
காணவந்தார் வந்தாரென்றே
வேணுநாதஞ் சொல்கின்றதே. என்ன சு

பாகார்மொழி யாள்சிவ
மாகாம வல்லிநாளும்
பார்த்தாட மணிமன்றில்
கூத்தாடு கின்றசித்தர்

---

284. அன்பரெல்லாம்—பி - ம். 285. புரிகின்றோர்—பி - ம்.
286. ஆரணர் காரணர்—பி - ம். (1885-ம் வருஷப் பதிப்பு)

வாகாஉனக்கே யென்றுஞ்
　　சாகா வரங்கொடுக்க
வலியவந்தார் வந்தாரென்றே
　　வலியநாதஞ் சொல்கின்றதே.

என்னபுண் ணியஞ்செய்தே னோ—அம் மாநான்
என்னபுண் ணியஞ்செய்தே னோ.　　ஏ

திருச்சிற்றம்பலம்

---

## 7. இவர்க்கும் எனக்கும்[287]

திருச்சிற்றம்பலம்

பல்லவி

இவர்க்குமெ னக்கும்பெரு வழக்கிருக் கின்றதது[288]
என்றுந்தீ ராவழக்குக் காண டி.[289]

---

287. இத் திருப்பாடலுக்குக் கிடைத்த அன்பர்கள் கையெழுத்துப் பிரதிகள் நான்கு. ஸ்ரீ இறுக்கம் இரத்தின முதலியாரவர்கள் பிரதியில் மட்டும் பல்லவி, அநுபல்லவி, சரணம் என்று கீர்த்தனத்தின் அங்கங்கள் எழுதப்பட்டிருக்கின்றன.

288. இருக்கின்றது—பி - ம்.

289. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும் :—

(i) பைரவி—மிச்ரசாபு.

(ii) பல்லவி

இ வர்க் | கு மெ || னக் கும் | பெ ரு ||
த நீ | ஸ்ா ஸா || ஸ் நீ | தா பா ||

வ ழக் | கி ருக் || கின் ற | த து ||
ம நீ | தா பா || ம கா | ரீ ஸா ||

என் | றுந் தீ || ரா வ | ழக் குக் ||
ஸரீ | ஸநி தா || நி ஸா | ரீ ரீ ||

கா | ண || டி | ||
ரிகா | மாபா || கா, | ரீஸா ||

### அநுபல்லவி

எவர்க்கும் பெரியவர் பொன்னம்ப லத்தேநடம்[290]
இட்டாரெ னக்குமாலை யிட்டா ரிதோவந்தார். இவர்க்கும்

### சரணங்கள்

அன்றிதோ வருகின்றே
னென்றுபோ னவரங்கே[291]
யார்செய்த தடையாலோ
இருந்தாரென் கையிற்சங்கை

---

அநுபல்லவி

எ வர்க் | கும் || பெ ரி | ய வர் || பொன் |
ப தம | பாதா || நி நீ | ஸ்ா ஸ்ா || தநீ |

னம் ப || லத் தே | ந டம் ||
ஸ்ா ஸ்ா || ஸ் நீ | தா பா ||

இட் | டா ரெ || னக் கு | மா லை || யி ட் |
தநீ | ஸ்ா ரீ || ஸ் நீ | தா பா || ஸ் நீ |

டா || ரி தோ | வந் தார் || (இவர்)
தாபா || ப மா | பத நீ || (தநீ)

சரணம்

அன் | றி தோ || வ ரு | கின் றே || னென் |
பநீ | தா பா || ப மா | பா தா || பநீ |

று போ || ன வ | ரங் கே ||
தா நீ || ஸ் நீ | தா பா ||

யார் | செய் த || த டை | யா லோ || இ ருந் |
பநீ | தா பா || ம கா | ரீ கா || ரி ரீ |

தா ரென் || கை யிற் | சங் கை ||
கா மா || ப மா | பா பா ||

இன் | று தங் || கை யிற் | கொண் டே || வந் |
பதம | பா தா || நி நீ | ஸ்ா ஸ்ா || தநீ |

து நிற் || கின் று | ரிங் கே ||
ஸ்ா ஸ்ா || ஸ் நி | தா பா ||

இன்றுதங் கை[292]யிற்கொண்டே
வந்துநிற் கின்றாரிங்கே
இந்தக்க தவைமூடு
இவர்போவ தினியெங்கே. இவர்க்கும் ௪

அவரவ ருலகத்தே
யறிந்தலர் தூற்றப்பட்டேன்
அன்றுபோ னவரின்று
வந்துநிற் கின்றார்கெட்டேன்
இவர்சூதை யறியாதே
முன்னம்ஏ மாந்துவிட்டேன்
இந்தக்க தவைமூடு
இனியெங்கும் போகவொட்டேன். இவர் ௫

சின்ன வயதிலென்னைச்
சேர்ந்தார்புன் னகையோடு
சென்றார் தயவாலின்று
வந்தார் இவர்க்காரீடு[293]
என்னைவிட் டினியிவ
ரெப்படி போவாரோடு
இந்தக்க தவைமூடு
இரட்டைத்தாட் கோலைப்[294]போடு.

இவர்க்குமெ னக்கும்பெரு வழக்கிருக் கின்றதது
என்றுந்தீ ராவழக்குக் காணடி. ௬

திருச்சிற்றம்பலம்

இந் | தக் க || த வை | மூ டு || இ வர் |
தநீ | ஸ்ா க்ரி || ஸ நீ | தா பா || ப நீ |
போ வ || தி னி | எங் கே || (இவர்)
தா பா || ப மா | பா தா || (தநீ)

290. பொன்னம்பலத்தில் நடம்—பி - ம்.
291. இங்கே—பி - ம். 292. தன் கையிற்—பி - ம்.
293. அவர்க்காரீடு—பி - ம். 294. தாழ்க்கோல்—பி - ம்.

## 8. இது நல்ல தருணம்[295]

*திருச்சிற்றம்பலம்*

### பல்லவி

இதுநல் லதரு ணம் — அருள்செய்ய
இதுநல் லதரு ணம்.[296]

### அநுபல்லவி

பொதுநல்ல நடம்வல்ல புண்ணிய ரேகேளும்
பொய்யேதுஞ் சொல்கிலேன் மெய்யேபு கல்கின்றேன்.

---

295. இத் திருப்பாடலுக்குக் கிடைத்த அன்பர்கள் கையெழுத்துப் பிரதிகள் ஐந்து. ஒரு பிரதியில் "பல்லவி" "அநுபல்லவி" என்று மட்டும் குறித்திருக்க, மற்றொன்றில் அவற்றோடு கூட "சரணங்கள்" என்றும் குறித்திருப்பதோடு, தலைப்பில் "கீர்த்தனம்" என்றும் எழுதியிருக்கிறது.

296. இதன் (i) இராக தாளங்களும் (ii) ஸ்வரமும் :—

(i) கல்யாணி—மிச்ரசாபு.

(ii) பல்லவி

இ து | ந ல் || ல | த ரு || ண ம் | ||
க தா | பா மா || கா, | ரீ ஸா || ரீ, | ; ; ||

அ ருள் | செ ய்ய ||
ப மா | கா ரீ ||

இ து | ந ல் || ல | த ரு || ணம் | ||
க தா | பா மா || கா, | ரீ நீ || ஸா | ; ; ||

அநுபல்லவி

பொ து | நல் ல || ந டம் | வல் ல || பு ண் |
த நீ | ஸா நீ || த பா | கா கா || மா ப |

ணி ய || ரே | கே ளும் ||
தப தா || நிதா | நீ ஸா ||

### சரணங்கள்

மதித்தச மயமத வழக்கெல்லா மாய்ந்தது
வருணாச்சி ரமமெனு[297] மயக்கமுஞ் சாய்ந்தது
கொதித்தலோ காசாரக் கொதிப்[298]பெல்லாமொழிந்தது
கொலையுங்க ளவுமற்றைப் புலையும்அ ழிந்தது. இது க

குறித்த[299]வே தாகமக் கூச்சலு மடங்கிற்று
குதித்த[300] மனமுருட்டுக் குரங்கு முடங்கிற்று
வெறித்தவெவ் வினைகளும் வெந்து குலைந்தது
விந்தைசெய் கொடுமாயைச் சந்தையுங் கலைந்தது. இது உ

---

பொய் | யே தும் || சொல் | கி லேன் ||
ம்ா, | க்ா ரீ || ஸ்ா, | நி தபா ||
மெய் | யே பு || கல் | கின் றேன் || (இது)
ஸ்ா, | நித பா || பாம | கம ரீ || (கதா)

சரணம்

ம தித் | த ச || ம ய | ம த || வ ழக் |
க மா | பாபா || ப பா | பா மா || க தா |
கெல் லா || மாய்ந் | த து ||
பா பா || ப மா | கா கா ||
வ ரு | ணாச் சி || ர ம | மெ னு || ம யக் |
க தா | பா பா || க கா | கம ரீ || க மா |
க முஞ் || சாய்ந் | த து ||
பா பா || தா, | மா பா ||
கொ தித் | த லோ | கா | சா ரக் ||
த நீ | ஸ்ா நீ | தபா | கா கா ||
கொ திப் | பெல் லா || மொ ழிந் | த து ||
ம பா | தா தா || ஸ் நீ | ஸ்ா ஸ்ா ||
கொ லை | யுங் க || ள வு | மற் றைப் || பு லை |
க் ம்ா | க்ா ரீ || ஸ் நீ | தா பா || த பா |
யும் அ || ழிந் | த து || (இது)
மா கா || ரீ, | கம ரீ || (கதா)

கோபமுங் காமமுங் குடிகெட்டுப் போயிற்று
கொடியஓர் ஆங்காரம் பொடிபொடி[301] யாயிற்று
தாபமுஞ் சோபமுந் தான்றானே சென்றது
தத்துவ மெல்லாமென் றன்வச நின்றது. இது ௬

கரையா எனதுமனக் கல்லும்[302] கரைந்தது
கலந்து கொளற்கென் கருத்தும்விரைந்தது
புரையா நிலையிலென் புந்தியுந் தங்கிற்று
பொய்படாக் காதல்த தும்பிமேற் பொங்கிற்று.

இதுநல் லதருணம்— அருள்செய்ய
இதுநல் லதருணம்.

திருச்சிற்றம்பலம்

எ. கீர்த்தனங்கள் முற்றுப் பெற்றன.

---

297. என்னும்—பி - ம். 298. குதிப்பு—பி - ம்.
299. குதித்த—பி - ம். 300. கொதித்த—பி - ம்.
301. பொடிப்பொடி—பி - ம். (1885-ம் வருஷப் பதிப்பு)
302. உளக்கல்லு; உள்ளக்கல்லு—பி - ம்.

# அநுபந்தம்

## 1. இராக ஆலாபனத் திருப்பாடல்கள்[303]

### 1. அருள்மொழி வியப்பு

உலகியலி னுறுமயலி னடைவுபெறு மெனதிதய
மொளிபெற விளங்குசுடரே
உதயநிறை மதியமுத வுணவுபெற நிலவுசிவ
யோகநிலை யருளுமலையே [துடைமை
உனதுசெய லெனதுசெய லுனதுடைமை யெனதுடைமை யென
யுணரென வுணர்த்துநிறைவே
உளவெனவு மிலவெனவு முரையுபய வசனமற
வொருமொழியை யுதவுநிதியே
ஒன்றுட னிரண்டெனவி தண்டையிடு மிண்டரொடு
மொன்றலற நின்றநிலையே
உன்னலற வுன்னுநிலை யின்னதென வென்னுடைய
உள்ளுணர உள்ளுமதியே
உன்னிலையு மென்னிலையு மன்னியமி லைச்சிறிது
முற்றறிதி யென்றபொருளே
உண்மைநெறி யண்மைதனி லுண்டுளமொ ருங்கிலென
ஓதுமெய்ப் போதநெறியே (¼)

---

303. இந்தத் தலைப்பின் கீழுள்ள 38 திருப்பாடல்களில் தனிப்பாசுரப் பகுதியில் வெளிவந்தவை போக மற்றவை திருமுறைப் பகுதிகளில் அதற்குரிய இடத்தில் அதனதன் குறிப்புக்களோடு வெளிவரும். சங்கீத வித்தையின் தன்மையையும் பாடுபவர் கேட்போர் ஆகிய இருதிறத்தாரின் வேண்டுதலையும் கருதி, இராகப் பிரஸ்தாரங்களுக்குத் தகுதியானவையும் சுவாமிகளது சாதாரண சாஹித்ய உபயோகங்களைக் கொண்டவையும் ஆன இவற்றை ஆராய்ந்து இங்குச் சேர்த்திருக்கிறது.

அலகின்மறை மொழியுமொரு பொருளின்முடிபென
தகந்தெளிய வருள்செய்தெருளே [வென
ஐம்பூத மாதிநீ யல்லையத் தத்துவ
வதீதவறி வென்றவொன்றே
அத்துவா வாறையு மகன்றநிலை யாதஃ
ததீதநிலை யென்றநன்றே
ஆணையெம தாணையெமை யன்றியொன் றில்லைநீ
யறிதியென வருளுமுதலே
அன்பென்ப தேசிவ முணர்ந்திடுக வெனவெனக்
கறிவித்த சுத்தவறிவே
அத்துவித நிலைதுவித நிலைநின்ற பின்னல
தடைந்திடா தென்றவிறையே
ஆனந்த மதுசச்சி தானந்த மேயிஃ
தறிந்தடைதி யென்றநலமே
அட்டசித் திகளுநின தேவல்செயு நீயவை
அவாவியிட லென்றமணியே. $\left(\frac{1}{2}\right)$

இலதுபரி பூரண விலாசமல நிலையண்ட
மெங்கணு மெனச்சொல்பதியே
இரவுபக லற்றவிட மதுசகல கேவல
மிரண்டினடு வென்றபரமே
இச்சைமன மாயையே கண்டன வெலாமவை
இருந்துகா ணென்றதவமே
யான்பிற ரெனும்பேத நடைவிடுத் தென்னோ
டிருத்தியென வுரைசெயரைசே
என்கலைக ணேயெனது கண்ணேயெ னிருகண்
ணிலங்குமணி யேயெனுயிரே
என்னுயிர்க் குயிரேயெ னறிவேயெ னறிவூ
டிருந்தசிவ மேயெனன்பே
என்றெய்வ மேயெனது தந்தையே யெனையீன்
றெடுத்ததா யேயெனுறவே
என்செல்வ மேயெனது வாழ்வேயெ னின்பமே
என்னருட் குருவடிவமே. $\left(\frac{3}{4}\right)$

நலகமனா முடையவென் பிழைபொறுத் தாட்கொண்ட
கருணையங் கடலமுதமே
காழிதனி லன்றுசுரர் முனிவர்சித் தர்கள்யோகர்
கருதுசம யாதிபர்களுங்
கைகுவித் தருகினின் றேத்தமூ வாண்டிற்
களித்துமெய்ப் போதமுண்டு
கனிமதுர மொழுகுசெம் பதிகச்செ ழுஞ்சொன்மழை
கண்ணுதற் பவளமலையிற்
கண்டுபொழி யருண்முகிற் சம்பந்த வள்ளலாங்
கடவுளே யோத்தூரினிற்
கவினுற விளங்குநற் பணிகள்சிவ புண்ணியக்
கதியுல கறிந்துய்யவே
கரையற்ற மகிழ்வினொடு செய்தருள் புரிந்திடுங்
காட்சியே சிவஞானியாங்
கருதவரு மொருதிருப் பெயர்கொண்மணி யேயெமைக்
காப்பதுன் கடனென்றுமே. (1)

தேன்படிக்கு மமுதாமுன்
திருப்பாட்டைத் தினந்தோறும்
நான்படிக்கும் போதென்னை
நானறியே னொன்றே
ஊன்படிக்கு முளம்படிக்கு
முயிர்படிக்கு முயிர்க்குயிருந்
தான்படிக்கு மநுபவங்காண்
தனிக்கருணைப் பெருந்தகையே. (2)

வான்கலந்த மாணிக்க
வாசகநின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால்
நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பால்கலந்து
செழுங்கனித்தீஞ் சுவைகலந்தென்
ஊன்கலந்து வுயிர்கலந்து
வுவட்டாம லினிப்பதுவே. (3)

## 2. திருவடித் தியானம்

எழுவகைப் பிறவிகளு ளெப்பிறவி யெய்துகினும்
எய்துகபி றப்பிலினிநான்
எய்தாமை யெய்துகினு மெய்திடுக விருமையினும்
இன்பமெய் தினுமெய்துக
வழுவகைத் துன்பமே வந்திடினும் வருகமிகு
வாழ்வுவந் திடினும்வருக
வறுமைவரு கினும்வருக மதிவரினும் வருகஅவ
மதிவரினும் வருகவுயர்வோ
டிழிவகைத் துலகின்மற் றெதுவரினும் வருகஅல
தெதுபோகி னும்போகநின்
இணையடிகள் மறவாத மனமொன்று மாத்திரம்
எனக்கடைதல் வேண்டுமரசே
கழிவகைப் பவரோக நீக்குநல் லருளெனுங்
கதிமருந் துதவுநிதியே
கனகவம் பலநாத கருணையங் கணபோத
கமலகுஞ் சிதபாதனே. (1)

பெற்ற தாய்தனை மகமறந் தாலும்
பிள்ளை யைப்பெறுந் தாய்மறந் தாலும்
உற்ற தேகத்தை யுயிர்மறந் தாலும்
உயிரை மேவிய வுடல்மறந் தாலும்
கற்ற நெஞ்சகங் கலைமறந் தாலுங்
கண்கள் நின்றிமைப் பதுமறந் தாலும்
நற்ற வத்தவ ருள்ளிருந் தோங்கு
நமச்சி வாயத்தை நான்மற வேனே. (2)

காராய வண்ண மணிவண்ண கண்ண கனசங்கு சக்ர தரநீள்
சீராய தூய மலர்வாய நேய ஸ்ரீராம ராம வெனவே
தாராய வாழ்வு தருநெஞ்சு சூழ்க தாமோத ராய நமவோம்
நாராய ணாய நமவாம னாய நமகேச வாய நமவே. (3)

### 3. தியான வைபவம்

நீருண்டு பொழிகின்ற காருண்டு விளைகின்ற
நிலனுண்டு பலனு முண்டு
நிதியுண்டு துதியுண்டு மதியுண்டு கதிகொண்ட
நெறியுண்டு நிலையு முண்டு
ஊருண்டு பேருண்டு மணியுண்டு பணியுண்டு
உடையுண்டு கொடையு முண்டு
உண்டுண்டு மகிழவே உணவுண்டு சாந்தமுறும்
உளமுண்டு வளமு முண்டு
தேருண்டு கரியுண்டு பரியுண்டு மற்றுள்ள
செல்வங்கள் யாவு முண்டு
தேனுண்டு வண்டுறு கடம்பணியு நின்பதத்
தியானமுண் டாயி லரசே
தாருண்ட சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. (1)

இளவேனின் மாலையாய்க் குளிர்சோலை யாய்மலர்
இலஞ்சிபூம் பொய்கையருகாய்
எற்றசந் திரகாந்த மேடையா யதன்மேல்
இலங்குமர மியவணையுமாய்த்
தளவேயு மல்லிகைப் பந்தராய்ப் பால்போற்
றழைத்திடு நிலாக்காலமாய்த்
தனியிளந் தென்றலாய் நிறைநரம் புளவீணை
தன்னிசைப் பாடலிடமாய்
களவேக லந்தகற் புடையமட வரல்புடை
கலந்தநய வார்த்தையுடனாய்க்
களிகொள இருந்தவர்கள் கண்டசுக நின்னடிக்
கழனிழற் சுகநிகருமே
வளவேலை சூழுலகு புகழ்கின்ற தவசிகா
மணியுலக நாதவள்ளல்
மகிழவரு வேளூரி லன்பர்பவ ரோகமற
வளர்வைத் தியநாதனே. (2)

## 4. அன்புருவம்

அன்பெனும் பிடியு ளகப்படு மலையே
அன்பெனுங் குடில்புகு மரசே
அன்பெனும் வலைக்குட் படுபரம் பொருளே
அன்பெனுங் கரத்தம ரமுதே
அன்பெனுங் கடத்து ளடங்கிடுங் கடலே
அன்பெனு முயிரொளி ரறிவே
அன்பெனு மணுவுள் ளமைந்தபே ரொளியே
அன்புரு வாம்பர சிவமே. (1)

தண்ணமுத மதிகுளிர்ந்த கிரணம் வீசத்
தடம்பொழிற்பூ மணம்வீசத் தென்றல் வீச
வெண்ணமுதப் பளிக்குநிலா முற்றத் தேயின்
னிசைவீசத் தண்பனிநீ ரெடுத்து வீசப்
பெண்ணமுத மனையவர்விண் ணமுத மூட்டப்
பெறுகின்ற சுகமனைத்தும் பிற்பட் டோடக்
கண்ணமுதத் துடம்புயிர்மற் றனைத்து மின்பங்
கலந்துகொளத் தருங்கருணைக் கடவுட் டேவே. (2)

பாங்குளநாந் தெரிதுமெனத் துணிந்து கோடிப்
பழமறைகள் தனித்தனியே பாடிப் பாடி
யீங்குளதென் றாங்குளதென் றோடி யோடி
யிளைத்திளைத்துத் தொடர்ந்துதொடர்ந் தெட்டுந் தோறும்
வாங்குபர வெளிமுழுது நீண்டு நீண்டு
மறைந்துமறைந் தொளிக்கின்ற மணியே யெங்குந்
தேங்குபர மானந்த வெள்ள மேசச்
சிதானந்த வருட்சிவமே தேவ தேவே. (3)

## 5. முறையீடு

பண்ணேறு மொழியடியர் பரவி வாழ்த்தும்
பாதமல ரழகினையிப் பாவி பார்க்கிற்
கண்ணேறு படுமென்றோ கனவி லேனுங்
காட்டென்றாற் காட்டுகிலாய் கருணை யீதோ

விண்ணேறு மரிமுதலோர்க் கரிய ஞான
விளக்கேயென் கண்ணேமெய் வீட்டின் வித்தே
தண்ணேறு பொழிற்றணிகை மணியே ஜீவ
சாட்சியாய் நிறைந்தருளுஞ் சகச வாழ்வே. (1)

நண்ணேனோ மகிழ்வினொடுந் திருத்தணிகை
மலையதனை நண்ணி யென்றன்
கண்ணேநீ யமர்ந்தவெழில் கண்குளிரக்
காணேனோ கண்டு வாரி
யுண்ணேனோ வானந்தக் கண்ணீர்கொண்
டாடியுனக் குகப்பாத் தொண்டு
பண்ணேனோ நின்புகழைப் பாடேனோ
வாயாரப் பாவி யேனே. (2)

பண்ணாலுன் னருட்புகழைப் பாடு கின்றார்
பணிகின்றார் நின்னழகைப் பார்த்துப் பார்த்துக்
கண்ணார வுளங்குளிரக் களித்தா நந்தக்
கண்ணீர்கொண் டாடுகின்றார் கருணை வாழ்வை
எண்ணாநின் றுனையெந்தா யெந்தா யெந்தா
யென்கின்றார் நின்னன்ப ரெல்லா மென்றன்
அண்ணாநா னொருபாவி வஞ்ச நெஞ்சா
லலைகின்றே னென்செய்கே னந்தோ வந்தோ. (3)

மாயையெனு மிரவிலென் மனையகத் தேவிடைய
வாதனையெ னுங்கள் வர்தாம்
வந்துமன வடிமையை யெழுப்பியவ னைத்தமது
வசமாக வுளவு கண்டு
மேயமதி யெனுமொரு விளக்கினைய வித்தெனது
மெய்ந்நிலைச் சாளிகை யெலாம்
வேறுற வுடைத்துள்ள பொருளெலாங் கொள்ளைகொள
மிகநடுக் குற்று நினையே
நேயமுற வோவாது கூவுகின் றேன்சற்று
நின்செவிக் கேற விலையோ
நீதியிலை யோதரும நெறியுமிலை யோவருளி
னிறைவுமிலை யோவென் செய்கேன்

ஆயமறை முடிநின்ற தில்லையம் பதிமருவும்
அண்ணலார் மகிழு மணியே
அகிலாண்ட முஞ்சரா சரமுமீன் றருள்பரசி
வாநந்த வல்லி யுமையே. (4)

## 6. நிரஹங்கார நிலை

தடித்தவோர் மகனைத் தந்தையீண் டடித்தால்
தாயுட னணைப்பள்தா யடித்தாற்
பிடித்தொரு தந்தை யணைப்பனிங் கெனக்குப்
பேசிய தந்தையுந் தாயும்
பொடித்திரு மேனி யம்பலத் தாடும்
புனிதநீ யாதலா லென்னை
அடித்தது போது மணைத்திடல் வேண்டும்
அம்மையப் பாவினி யாற்றேன். (1)

பாவிமனக் குரங்காட்டம் பார்க்கமுடி யாதே
பதிவெறுத்தே னிதிவெறுத்தேன் பற்றனைத்துந் தவிர்த்தேன்
ஆவியுடல் பொருளையுன்பாற் கொடுத்தேனுன் னருட்பேர்
ஆசைமய மாகியுனை யடுத்துமுயல் கின்றேன்
கூவியெனை யாட்கொளநீ நினையாயோ நினது
குறிப்பறியேன் பற்பலகால் கூறியிளைக் கின்றேன்
தேவிசிவ காமவல்லி மகிழுமண வாளா
தெருணிறைவா னமுதளிக்குந் தருணமிது தானே. (2)

திருத்தகுபொன் னம்பலத்தே திருநடஞ்செய் தருளுந்
திருவடிக ளடிச்சிறியேன் சென்னிமிசை வருமோ
உருத்தகுநா னிலத்திடைநீண் மலத்தடைபோய் ஞான
வுருப்படிவ மடைவேனோ வொன்றிரண்டென் றோதா
பொருத்தமுறு சுத்தசிவா னந்தவெள்ளந் ததும்பிப்
பொங்கியகம் புறங்காணா தெங்குநிறைந் திடுமோ
அருத்தகுமவ் வெள்ளத்தே நான்மூழ்கி நான்போய்
அதுவாகப் பெறுவேனோ அறிந்திலன்மேல் விளைவே.

அவ்வண்ணம் பழுத்தவரு மறிந்திலர்சற் றெனினும்
அறிந்தனமோர் சிறிதுகுரு வருளாலே யந்தச்
செவ்வண்ணம் பழுத்ததனித் திருவுருக்கண் டெவர்க்குந்
தெரியாம லிருப்பமெனச் சிந்தனைசெய் திருந்தேன்
இவ்வண்ண மிருந்தவெனைப் பிறரறியத் தெருவில்
இழுத்துவிடுத் ததுகடவு ளியற்கையருட் செயலோ
மவ்வண்ணப் பெருமாயை தன்செயலோ வறியேன்
மனமாலை பாய்வதுகாண் மன்றினடத் தரசே.

அம்மதவேள் கணையொன்றோ வைங்கணையும் விடுத்தான்
அருளடையு மாசையினு லாருயிர்தான் பொறுத்தாள்
இம்மதமோ சிறிதுமிலாள் கலவியிலே யெழுந்த
ஏகசிவ போகவெள்ளத் திரண்டுபடா ளெனினும்
எம்மதமோ வெக்குலமோ வென்றுநினைப் புளதேல்
இவள்மதமு மிவள்குலமு மெல்லாமுஞ் சிவமே
சம்மதமோ தேவர்திரு வாய்மலர வேண்டுஞ்
சபையில்நடம் புரிகின்ற தனிப்பெரிய துரையே.

நான்மறந்தே னெனினுமெனைத் தான்மறவா னெனது
நாயகனென் றுடுகின்றேன் எனினுமிது வரையும்
வான்மறந்தேன் வானவரை மறந்தேன்மா லயனை
மறந்தேனம் முருத்திரரை மறந்தேனென் னுடைய
ஊன்மறந்தே னுயிர்மறந்தே னுணர்ச்சியெலா மறந்தேன்
உலகமெலா மறந்தேனிங் குன்னைமறந் தறியேன்
பான்மறந்த குழவியைப்போல் பாரேலிங் கெனையே
பரிந்துநின தருட்சோதி புரிந்துமகிழ்ந் தருளே. (6)

## 7. இன்ப வடிவம்

கோடையிலே யிளைப்பாற்றிக் கொள்ளும்வகை கிடைத்த
குளிர்தருவே தருநிழலே நிழற்கனிந்த கனியே
ஓடையிலே யூறுகின்ற தீஞ்சுவைத்தண் ணீரே
உகந்ததண்ணீ ரிடைமலர்ந்த சுகந்தமண மலரே

மேடையிலே வீசுகின்ற மெல்லியபூங் காற்றே
மென்காற்றில் விளைசுகமே சுகத்திலுறும் பயனே
ஆடையிலே யெனைமணந்த மணவாளா பொதுவில்
ஆடுகின்ற வரசேயென் னலங்கலணிந் தருளே. (1)

தனித்தனிமுக் கனிபிழிந்து வடித்தொன்றாக் கூட்டிச்
சர்க்கரையுங் கற்கண்டின் பொடியுமிகக் கலந்தே
தனித்தநறுந் தேன்பெய்து பசும்பாலுந் தெங்கின்
தனிப்பாலுஞ் சேர்த்தொருதீம் பருப்பிடியும் விரவி
இனித்தநறு நெய்யளைந்தே இளஞ்சூட்டி னிறக்கி
எடுத்தசுவைக் கட்டியினு மினித்திடுந்தெள் ளமுதே
அனித்தமறத் திருப்பொதுவில் விளங்குநடத் தரசே
அடிமலர்க்கென் சொல்லணியா மலங்கலணிந் தருளே.

பார்த்தாலும் நினைத்தாலும் படித்தாலும் படிக்கப்
பக்கநின்று கேட்டாலும் பரிந்துணர்ந் தாலும்
ஈர்த்தாலும் பிடித்தாலுங் கட்டியணைத் தாலும்
இத்தனைக்குந் தித்திக்கும் இனித்தசுவைக் கரும்பே
வேர்த்தாவி மயங்காது கனிந்தநறுங் கனியே
மெய்ம்மையறி வானந்தம் விளக்குமரு ளமுதே
தீர்த்தாவென் றன்பரெலாந் தொழப்பொதுவில் நடிக்குந்
தெய்வநடத் தரசேயென் சிறுமொழியேற் றருளே. (3)

## 8. ஆனந்தாநுபவம்

நான்கண்ட போதுசுயஞ் சோதிமய மாகி
நான்பிடித்த போதுமதி நளினவண்ண மாகித்
தேன்கொண்ட பாலெனநான் சிந்திக்குந் தோறுந்
தித்திப்ப தாகியென்றன் சென்னிமிசை மகிழ்ந்து
தான்கொண்டு வைத்தவந்நாள் சில்லென்றென் னுடம்புந்
தகவுயிருங் குளிர்வித்த தாண்மலர்கள் வருந்த
வான்கொண்டு நடந்திங்கு வந்தெனக்கு மளித்தாய்
மன்றினடத் தரசேநின் மாகருணை வியப்பே. (1)

உள்ளானைக் கதவுதிறந் துள்ளே காண
 உளவெனக்கே யுரைத்தானை யுணரார் பாட்டைக்
கொள்ளானை யென்பாட்டைக் குறிக்கொண் டானைக்
 கொல்லாமை விரதமெனக் கொண்டார் தம்மைத்
தள்ளானைக் கொலைபுலையைத் தள்ளா தாரைத்
 தழுவானை யான்புரிந்த தவறு நோக்கி
எள்ளானை யிடர்தவிர்த்திங் கென்னை யாண்ட
 எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே. (2)

கடல்கடந்தேன் கரையடைந்தேன் கண்டுகொண்டேன் கோயில்
 கதவுதிறந் திடப்பெற்றேன் காட்சியெலாங் கண்டேன்
அடர்கடந்த திருவமுதுண் டருளொளியா லனைத்தும்
 அறிந்துதெளிந் தறிவுருவா யழியாமை யடைந்தேன்
உடல்குளிர்ந்தே னுயிர்கிளர்ந்தே னுள்ளமெலாந் தழைத்தே
 உள்ளபடி யுள்ளபொரு ளுள்ளவனாய் நிறைந்தேன்
இடர்தவிர்க்குஞ் சித்தியெலா மென்வசமோங் கினவே
 இத்தனையும் பொதுநடஞ்செய் யிறைவனருட் செயலே.

காயெலாங் கனியெனக் கனிவிக்கு மொருபெருங்
 கருணையமு தேயெனக்குக்
 கண்கண்ட தெய்வமே கலிகண்ட வற்புதக்
 காட்சியே கனகமலையே
தாயெலா மனையவென் தந்தையே யொருதனித்
 தலைவனே நின்பெருமையைச்
 சாற்றிட நினைத்திட மதித்திட வறிந்திடச்
 சார்கின்ற தோறுமந்தோ
வாயெலாந் தித்திக்கு மனமெலாந் தித்திக்கும்
 மதியெலாந் தித்திக்குமென்
 மன்னியமெய் யறிவெலாந் தித்திக்கு மென்னிலதில்
 வருமின்ப மென்புகலுவேன்
தூயெலாம் பெற்றநிலை மேலருட் சுகமெலாந்
 தோன்றிட விளங்குசுடரே
 துரியவெளி நடுநின்ற பெரியபொரு ளேயருட்
 ஜோதிநட ராஜகுருவே. (4)

## 9. நடராஜ ஸ்வரூபம்

அருளாளர் வருகின்ற தருணமிது தோழி
  ஆயிரமா யிரங்கோடி யணிவிளக்கேற் றிடுக
தெருளாய பசுநெய்யே விடுகமற்றை நெய்யேல்
  திருமேனிக் கொருமாசு செய்தாலுஞ் செய்யும்
இருளேது காலைவிளக் கேற்றிடவேண் டுவதோ
  என்னாதே மங்கலமா வேற்றுதலாங் கண்டாய்
மருளேலங் கவர்மேனி விளக்கமதெண் கடந்த
  மதிகதிர்செங் கனல்கூடிற் றென்னினுஞ்சா லாதே. (1)

வெடித்தளிந்த முக்கனியின் வடித்தரசந் தனிலே
  விரும்புறவுட் பிழிந்தெடுத்த கரும்பிரதங் கலந்தே
கடித்தசெழும் பாற்பெய்து கோற்றேன்விட் டதனைத்
  தனித்தபர வமுதத்திற் றான்கலந்துண் டாற்போல்
இடித்திடித்தென் னுளமுழுதுந் தித்திக்கும் வார்த்தை
  இனிதுரைத்து மணம்புரிந்த வென்னுயிர்நா யகர்வான்
பொடித்திருமே னியரவரைப் புணரவல்லே னவர்தம்
  புகழுரைக்க வல்லேனோ வல்லேன்காண் தோழீ. (2)

மாதேகே ளம்பலத்தே திருநடஞ்செய் பாத
  மலரணிந்த பாதுகையின் புறத்தெழுந்த வணுக்கள்
மாதேவ ருருத்திரர்க ளொருகோடி கோடி
  வளைபிடித்த நாரணர்க ளொருகோடி கோடி
போதேயு நான்முகர்க ளொருகோடி கோடி
  புரந்தரர்கள் பலகோடி யாகவுருப் புனைந்தே
ஆதேய ராகியிங்கே தொழில்புரிவா ரென்றால்
  ஐயர்திரு வடிப்பெருமை யாருரைப்பார் தோழி. (3)

பெருகியபே ரருளுடையா ரம்பலத்தே நடிக்கும்
  பெருந்தகையென் கணவர்திருப் பேர்புகலென் கின்றாய்
அருகர்புத்த ராதியென்பேன் அயனென்பேன் நாரா
  யணனென்பேன் அரனென்பேன் ஆதிசிவ னென்பேன்

பருகுசதா சிவமென்பேன் சத்திசிவ மென்பேன்
பரமமென்பேன் பிரமமென்பேன் பரப்பிரம மென்பேன்
துருவுசத்தப் பிரமமென்பேன் துரியநிறை வென்பேன்
சுத்தசிவ மென்பனிவை சித்துவிளை யாட்டே.

சிற்சபையில் நடிக்கின்ற நாயகனார் தமக்குச்
சேர்ந்தபுறச் சமயப்பேர் பொருந்துவதோ வென்றாய்
பிற்சமயத் தார்பெயரு மவர்பெயரே கண்டாய் [வாதோ
பித்தரென்றே பெயர்படைத்தார்க் கெப்பெயரோ
அச்சமயத் தேவர்மட்டோ நின்பெயரென் பெயரும்
அவர்பெயரே யெவ்வுயிரின் பெயருமவர் பெயரே
சிற்சபையி லென்கணவர் செய்யுமொரு ஞானத்
திருக்கூத்துக் கண்டளவே தெளியுமிது தோழி.

## 10. சன்மார்க்க சித்திப்பேறு

தனித்தலைமைப் பெரும்பதியென் தந்தைவரு கின்ற
தருணமிது சத்தியங்காண் சகதலத்தீர் கேண்மின்
இனித்தநறுங் கனிபோன்றே என்னுளந் தித்திக்க
இன்னமுதம் அளித்தென்னை யேழுலகும் போற்ற
மனித்தவுடம் பிதையழியா வாய்மையுடம் பாக்கி
மன்னியசித் தெல்லாஞ்செய் வல்லபமுங் கொடுத்தே
கனித்தசிவா னந்தமெனும் பெரும்போகந் தனிலே
களித்திடவைத் திடுகின்ற காலையுமிங் கிதுவே. (1)

காற்றாலே புவியாலே ககனமத னாலே
கனலாலே புனலாலே கதிராதி யாலே
கூற்றாலே பிணியாலே கொலைக்கருவி யாலே
கோளாலே பிறவியற்றாங் கொடுஞ்செயல்க ளாலே
வேற்றாலே யெஞ்ஞான்று மழியாதே விளங்கும்
மெய்யளிக்க வேண்டுமென்றேன் விரைந்தளித்தா [னெனக்கே
எற்றாலே யிழிவெனநீர் நினையாதீ ருலகீர்
எந்தையருட் பெருஞ்ஜோதி யிறைவனைச்சார் வீரே. (2)

சாதியிலே மதங்களிலே சமயநெறி களிலே
சாத்திரச்சந் தடிகளிலே கோத்திரச்சண் டையிலே
ஆதியிலே யபிமானித் தலைகின்ற வுலகீர்
அலைந்தலைந்து வீணேநீ ரழிதலழ கலவே
நீதியிலே சன்மார்க்க நிலைதனிலே நிறுத்த
நிருத்தமிடுந் தனித்தலைவ ரொருத்தரவர் தாமே
வீதியிலே யருட்சோதி விளையாடல் புரிய
மேவுகின்ற தருணமிது கூவுகின்றே னுமையே. (3)

கருவிற் கலந்த துணையேயென்
கனிவிற் கலந்த வமுதேயென்
கண்ணிற் கலந்த வொளியேயென்
கருத்திற் கலந்த களிப்பேயென்
உருவிற் கலந்த வழகேயென்
உயிரிற் கலந்த உறவேயென்
உணர்விற் கலந்த சுகமேயென்
னுடைய வொருமைப் பெருமானே
தெருவிற் கலந்து விளையாடுஞ்
சிறியேன் தனக்கே மெய்ஞ்ஞான
சித்தி யளித்த பெருங்கருணைத்
தேவே யுலகத் திரளெல்லாம்
மருவிக் கலந்து வாழ்வதற்கு
வாய்த்த தருண மிதுவென்றே
வாயே பறையா யறைகின்றே
னெந்தாய் கருணை வலத்தாலே. (4)

நினைந்துநினைந் துணர்ந்துணர்ந்து நெகிழ்ந்துநெகிழ்ந் தன்பே
நிறைந்துநிறைந் தூற்றெழுங்கண் ணீரதனா லுடம்பு
நனைந்துநனைந் தருளமுதே நன்னிதியே ஞான
நடத்தரசே யென்னுரிமை நாயகனே யென்று
வனைந்துவனைந் தேத்துதுநாம் வம்மினுல கியலீர்
மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாங் கண்டீர்
புனைந்துரையேன் பொய்புகலேன் சத்தியஞ்சொல் கின்றேன்
பொற்சபையிற் சிற்சபையிற் புகுந்தருண மிதுவே. (5)

## 2. திருப்பாடல்கள் அகராதி

## 3. இராக ஆலாபனத் திருப்பாடல்கள் அகராதி

# 4. ஸ்வர விவரம்[304]

## (i) ஸ்வரப்படுத்திய ஆசிரியர்கள்

1 "கந்தகானமுதம்" என்னும் இசைத்தமிழ் நூலாசிரியர் ஸ்ரீ (N) கோடீசுவர ஐயரவர்கள் (பி.ஏ.)

2 கீர்த்தனாசாரியர், அபிநவ தியாகபிரமம், சங்கீத விமர்சகாசாரியர்,

ஸ்ரீ (C. R.) ஸ்ரீநிவாசய்யங்காரவர்கள் (பி.ஏ., எல்.டி.)

| திருப்பாடல்கள் | ஸ்ரீ ஐயரவர்கள் | ஸ்ரீ ஐயங்காரவர்கள் |
|---|---|---|
| க. நாமாவளிகள் | 74 | — |
| உ. கண்ணிகள் | — | 5 |
| ௩. ஆடற்பாடல்கள், 2. | 1 | — |
| ஷை 1, 3-8. | — | 7 |
| ச. வருகைப் பாடல்கள் | — | 4 |
| ரு. ஆனந்தக்களிப்புகள், 1-4, 9. | — | 5 |
| ஷை 5-8, 10. | 5 | — |
| சா. பண்கள் | 3 | — |
| எ. கீர்த்தனங்கள் | 8 | — |
| ஆக | 91 | 21 |

## (ii) ஸ்வர அடையாளங்கள்

(1) புள்ளி ஸ்வரத்தின் மேலிருந்தால் மேல்ஸ்தாயியையும் கீழிருந்தால் கீழ்ஸ்தாயியையும் குறிக்கும்.

(2) — இது மத்தியமகாலம் காட்டும்.

(3) | இது லகு குரு ஆகியவற்றின் முடிவைக் காட்டும்.

(4) || இது ஆவர்த்தத்தின் முடிவைக் காட்டும்.

(5) , இது ஒரு மாத்திரையின் காலத்தைக் காட்டும்.

(6) ; இது இரு மாத்திரைகளின் காலத்தைக் காட்டும்.

---

304. பாயிரம் 23-ம் பக்கம் பார்க்க.

## 5. ஆதாரங்கள் விவரம்[305]

| எண் | திருப்பாடல்கள் | சுவாமிகளின் கையெழுத்து மூலம் | அன்பர்கள் கையெழுத்துப் பிரதிகள் | முதல் அச்சுப் பதிப்பு (1867) |
|---|---|---|---|---|
| க | நாமாவளிகள் | — | 1—53. | — |
| உ | கண்ணிகள் | 1. | 3, 4, 5. | 2. |
| ங | ஆடற்பாடல்கள் | 6. | 2 (2), 4, 5, 7, 8, 9. | 1, 2 (1), 3. |
| ச | வருகைப் பாடல்கள் | 3, 4. | 1, 2. | — |
| ரு | ஆனந்தக் களிப்புகள் | 6, 9 (1), 10. | 1, 2, 3, 4, 5, 7, 8, 9 (2). | — |
| சு | பண்கள் | 1, 2, 3 (1-10). | 3 (11-13). | — |
| எ | கீர்த்தனங்கள் | 5. | 1, 2, 3, 6, 7, 8. | 4. |

305. பாயிரம் 24-ம் பக்கம் பார்க்க.

# 6. பிழை திருத்தம்

| பக்கம் | அடிக்குறிப்பு | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 4 | 7 | 5 | ஸரீநி | ஸரீநி |
| 8 | 19 | 5 | மதப்ம | மதபம |
| 25 | 48 | 7 | ஸரிஸநி | ஸரிஸநி |
| 34 | 62 | 10 | கரிஸநித | கரிஸநித |
| 40 | 68 | 7 | காரிநிஸா | காரிநிஸா |
| 43 | 71 | 8 | ஸாரிநி | ஸரிநி |
| 64 | — | 7 | கொள்ள | கெள்ள |
| 137 | 228 | 8 | ஸ்ாரீ | ஸ்ாரீ |
| 187 | 261 | 10 | ரீ | ரீ |
| 190 | 271 | 14 | க்ாரீ | க்ாரீ |
| 190 | 271 | 16 | நீஸ்ா | நீஸ்ா |
| 195 | 277 | 10 | காரிஸாநீ | காரிஸாநீ |
| 197 | 279 | 16 | ரீஸ்ா | ரீஸ்ா |
| 198 | 279 | 21 | பா | ; பா |
| 203 | 289 | 5 | ஸ்ாஸா | ஸ்ாஸ்ா |

# 7. இப்பதிப்பின் சிறப்பு

1. சுவாமிகள் அருளிச்செய்த ஸ்தோத்திர மாலைகள், சாஸ்திர மாலைகள், கீர்த்தனைகள், சன்மார்க்கப் பிரார்த்தனைகள், தர்ம சாஸ்திரங்கள், வியாக்கியானங்கள், பிரசங்கங்கள், உபதேசங்கள், கடிதங்கள், சன்மார்க்கக் கட்டளைகள், சன்மார்க்கப் பத்திரிகைகள், தனிப்பாடல்கள், சாற்றுக்கவிகள், அவர்களது திவ்விய சரித்திரம், அவர்கள் ஆராய்ந்து பதித்த பழைய நூல்கள், சன்மார்க்க சங்க நிகழ்ச்சிகள் முதலிய யாவும் இப்பதிப்பில் அடங்கும்.
2. சுவாமிகள் கை எழுத்திலுள்ள திருப்பாடல்கள் முதலியவற்றின் போட்டோப் பிரதிகளும் அவர்கள் திரு உருவமும் ஞான சபை அமைப்பும் இதில் வெளிவரும்.
3. இதுவரையில் வெளிவராத பலப்பல அரும்பகுதிகள் இப்பதிப்பில் தான் முதல்முதலாக வெளி வருகின்றன.
4. இப்பதிப்பில் வெளி வரும் பகுதிகளில் அடங்கியவை எல்லாம் சுவாமிகள் திருக்கரத்தால் எழுதிய தெய்வத் திரு ஏடுகள், அவர்கள் பார்வையில் அச்சான முதற் பதிப்புக்கள், அவர்களை அடுத்திருந்த போன்பர்களின் கை எழுத்துப் பிரதிகள் முதலியவற்றினின்றும் எடுத்த சுத்த பாடங்களாகும்.
5. இப்பதிப்பின் ஒவ்வொரு பகுதியும் துருவித் துருவி எழுத்தெழுத்தாக நுட்பமாக ஆராயப்பட்டு, சிறு பிள்ளைகளும் தெரிந்து கொள்ளக்கூடிய ஓர் ஓர் பொருத்தமான முறையில் பாகுபாடு செய்து ஏராளமான ஆராய்ச்சிக் குறிப்புக்களோடு வெளிப்படுத்தப் படுகிறது.
6. இப்பதிப்பு, உயர்ந்த காகிதத்தில், நல்ல திருத்தமான வகையில், திறமான கட்டடத்தோடு, வேண்டிய போதெல்லாம் படிப்பதற்காக உடன்கொண்டு

போலதற்கேற்ற அழகான அளவில், அடக்கவிலை யில், பகுதி பகுதியாகத் தொடர்ந்து அச்சிடப் பட்டு வருகின்றது.

7. இப்பதிப்பு ஆரம்பித்த 1931-ம் ௵ முதல் இது வரை யில் பின் வரும் ஆறு பகுதிகள் வெளிவந்துள்ளன:—

1-வது சிந்தனைப் பகுதி 4-வது உபதேசப் பகுதி
2-வது வசனப் பகுதி 5-வது திருமுகப் பகுதி
3-வது உரைப் பகுதி 6-வது தனிப்பாசுரப்பகுதி

எல்லாப் பகுதிகளும் குறைவின்றிக் கிடைக்கும்.

8. பொது நன்மையைத் தங்களது சொந்த நன்மை யாகக் கொண்ட அநேக அன்பர்களின் முயற்சியால் இப்பதிப்பு தமிழ் நாடெங்கும் பரவி வருகிறது. வியாபாரிகளும் யுனிவர்சிட்டி அதிகாரிகளும்கூட இப் பதிப்பை விரும்பி இதற்கு உதவி செய்ய முன் வந் திருக்கிறார்கள்.

9. தமிழ் பேசும் யாவரும்—பெண்கள், பிள்ளைகள், வயதானவர்கள், கைவேலைக்காரர்கள், அதிக படிப் பில்லாதவர்கள், பரதேசிகள், நோயாளிகள் முதலிய வரும் கூட—காலமுள்ள போதே, சுவாமிகள் திருவாய் மலர்ந் தருளிய உபதேசங்களை நன்றாகத் தெரிந்து, அவர்கள் திருவடிச் சுவடுகளைப் பின்பற்றி நடந்து, அவர்கள் அடைந்த ஆன்மாநுபவத்தை அடைந்துய்ய வேண்டும் என்பதே இப்பதிப்பின் நோக்கம்.

10. இவ் விருப்ப முயற்சி திருவருட் செயலால் தோன்றி நடை பெறுகிறது என்னும் ஒருவித உறுதியே இப் பதிப்பின் உயிர் நிலையாகும்.

---

*ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம்*

53-56, *பவழக்காரத் தெரு, மண்ணடி, சென்னை.*

